பொருளடக்கம்

# 1. ராவின் அம்மா

“அப்பா காலம் வேறு. என் காலம் வேறு”

“அப்போது இருந்த இந்தியாவா இப்போது இருக்கிறது?”

“வெள்ளையர் காலத்தில் சகோதரர்களாக இருந்தவர்கள், இப்போது பாகிஸ்தானில் இருந்துக் கொண்டு இரண்டு போர் (1947, 1965) தாக்குதல் நடத்திவிட்டார்கள். கம்யூனிஸ்ட் நமது நண்பர் என்று அப்பாவின் நம்பிக்கையை சீனாவின் போர் (1961) தாக்குதல் பொய்துவிட்டது.”

பகைவர்கள் படையெடுத்த பிறகு போர் நடவடிக்கை எடுப்பதை விட, பகைவர்களை கண்காணித்து போர் வரும் முன் தெரிந்துக் கொள்வது மிகவும் முக்கியம் என்று பிரதமர் இந்திரா காந்தி நினைத்தார்.

“இந்தியாவில் பிறந்த சாணக்கியர் தான் உலகத்திற்கு “அர்த்த சாஸ்திரம்” என்ற நூலே கொடுத்தார். அந்த காலத்திலேயே அந்நிய மன்னர்களின் படையெடுப்பை எப்படி முன் கூட்டியே தெரிந்துக் கொள்வது, உள் நாட்டில் குழப்பம் விளைவிக்கப் பார்க்கிற சக்திகளைப் பற்றி தகவல் திரட்டுகிறவதை எல்லாம் சொல்லியிருக்கிறார். இந்த புக்குல....”

“வரலாறு, அர்த்தசாஸ்திரம், சாணக்கியர் பற்றி எனக்கும் தெரியும். அதைப்பற்றி கேட்க எனக்கு இப்போது நேரமில்லை. அண்டை நாடுகளை கண்காணிக்க, அவர்கள் செயல்பாட்டை தெரிந்துக் கொள்ள ஏதாவது வழி இருந்தால் சொல்லுங்கள்?”

“புது உளவு நிறுவனம் தேவை” என்றார் தளபதி ஜென்ரல் சவுத்ரி.

“ஏற்கனவே, ஐ.பி (Intelligence Bureau) என்ற உளவு நிறுவனம் அந்த வேலையை செய்கிறதே!”

“அது போதுமனதாக இல்லை. அந்நிய நாடுகளை கண்காணிப்பதற்கே தனி உளவுத்துறை இருந்தால் நல்லது” என்றார்.

“ஐ.பிக்கு என்ன தான் குறை?”

“1962ல் இந்தோ – சீனா யுத்தத்தில் இந்தியாவுக்கு நேர்ந்த பின்னடைவுக்கு உளவுத்துறையின் தோல்வி தான் காரணம். 1965ல் நடந்த இந்தோ – பாகிஸ்தான் யுத்தத்தில் உளவு நிறுவனம் சரியாக செயல்படவில்லை. ஐ.பி. உள்நாட்டு, வெளிநாடு என்று இரண்டு குதிரை மேல் சவாரி செய்கிறது” என்றார்.

தளபதி ஜென்ரல் சவுத்ரி சொன்னது சரி தான். விடுதலை அடைந்து இருபது வருடத்தில் இரண்டு பெரிய யுத்தங்களை சந்தித்த பிறகு, அண்டை நாடுகளை வேவுப் பார்ப்பதற்கு ஒரு தனி உளவு நிறுவனம் வேண்டும் என்று பிரதமர் இந்திரா காந்தி உணர்ந்தார்.

1968 அந்நியர்களை கண்காணிக்க ஒரு புது உளவு நிறுவனம் உருவாக்கினார். ஆய்வு மற்றும் பகுப்பாய்வு பிரிவு என்று அந்த உளவு நிறுவனத்துக்கு பெயர் வைத்தனர். சுத்தமான ஆங்கிலத்தில் சொல்வதென்றால் Research & Analysis Wing. சுருக்கமாக R&AW. அதன் முதல் இயக்குனராக R.N.Kao என்பவரை நியமித்தார் பிரதமர்.

‘ரா’ என்ற உளவு நிறுவனத்துக்கு முழு வடிவம் கொடுத்தவர் ‘பிரதமர் இந்திரா காந்தி’ என்று சரித்திரத்தில் பொன்னான எழுத்துக்களில் பொறிக்கப்பட்டது.

***

இன்று, ஒவ்வொரு நாடுகளும் தங்கள் வளர்ச்சியில் எந்த அளவுக்கு அக்கரை செலுத்துகிறதோ அந்த அளவுக்கு எதிரி நாடுகளில் வளர்ச்சியை காண்காணிக்க வேண்டியதாக இருக்கிறது. எதிரி நாடுகள் தங்கள் நாட்டு எதிராக என்ன திட்டம் தீட்டுகிறார்கள் தெரிந்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் ஒவ்வொரு நாடும் இருக்கிறது. உள்நாட்டில்

எதிரிகள் என்ன பிரச்சனை, என்ன தாக்குதல் செய்ய போகிறார்கள் என்று முன்பே அறிந்து முறியடிக்க பாடுபட வேண்டியதாக இருக்கிறது.

ஒரு நாடு வளர வேண்டும் என்றால் பணம் முதலீடு போடும் முதலாளி நாடுகள் உதவியும் வேண்டும், அவர்களின் உள்நோக்கமும் தெரிந்துக் கொள்ள வேண்டும். வளர்ந்த நாடுகள் தங்கள் கட்டுபாட்டில் இருக்கும் நாடுகள் தங்களை மீறி வளராமல் இருக்க வேண்டும், எதிரி நாட்டுடன் சேர்ந்து விடக் கூடாது. இப்படி, இன்றைய உலக அரசியல் இயங்கிக் கொண்டு இருக்கிறது.

நட்பு நாடு என்று சொல்லிக் கொள்ளும் நாடுகளும் சரி, எதிரி நாடாக இருந்தாலும் சரி.... பாதுகாப்பு என்று வரும் பட்சத்தில் எல்லா நாடுகளை கண்காணிக்கும் பொருப்பை ஒவ்வொரு நாட்டுக்கு இருக்கிறது.

இந்தியாவுக்கு பொருளாதர நண்பன் என்று சொல்லும் அமெரிக்கா தான் ஒவ்வொரு நாட்டு தொலைப்பேசியையும், இணையத்தையும் ஒட்டுக் கேட்கிறது. இந்தியாவின் எதிரியான பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்குகிறது. அமெரிக்காவை நண்பன் என்று சொல்லிக் கொண்டாலும் சீனாவுடன் சில நட்பு பேச்சு வார்த்தைகளையும் இந்தியா மேற்கொள்கிறது.

இலங்கையை நட்பு நாடு என்று சொல்லும் இந்தியா, தனது தேசத்தின் மீனவர்களை தீவிரவாதிகள் என்று சந்தேகப்பட்டு கொள்ளும் போதும், கைது செய்யும் போதும் இந்தியா பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை.

இந்தியாவின் வெளியுறவு கொள்கை இன்னது என்று இதுவரை வகைப்படுத்தப்பட்டாத புரியாத புதிராகவே இருக்கிறது. ஒவ்வொரு அரசியல் தலைவர்கள் மாறும் போது வெளியுறவு நடவடிக்கைகளில் சில மாற்றங்கள் வருகிறது. அவரவர் கருத்துக்கணிப்புகளுக்கு தகுந்தார் போல் நடவடிக்கைகளும் மாறும்.

நாம் உழைத்தால் நாம் முன்னேறலாம். நாம் முன்னேறினால் நாடு முன்னேறும் என்ற சிந்தாந்தம் மட்டும் வைத்துக் கொண்டு ஒரு நாட்டை முன்னேற முடியாது. இன்றைய தேதியில் நம் உழைப்பை கெடுப்பதற்கு பல அந்நிய சக்திகள் இருக்கிறது. நம் நாட்டின் பொக்கிஷமாக விஞ்ஞானிகள் இருக்கிறார்கள். ரகசியமான பல விஷயங்கள் இருக்கிறது. இதை பாதுகாக்க பாதுகாப்பை பலப்படுத்தினால் மட்டும் போதாது. இதை கெடுக்க நினைப்பவர்கள் யார் என்பதையும் கண்டு பிடிக்க வேண்டும். அப்போது தான் அதை முறியடிக்க முடியும்.

உலக அரசியலில் யார் யாருக்கு நண்பன், யார் யாருக்கு எதிரியாக மாறுவார்கள் என்று நிச்சயமாக சொல்ல முடியாது. ஆனால், ஒவ்வொரு நாட்டையும் கண்காணித்தால் தான் நம் பாதுகாப்பாக இருக்க முடியும் என்ற சூழல் இருந்க்கிறது. இங்கு எதிரி நாட்டை கண்காணிப்பதை விட நட்பு நாடு என்று சொல்லிக் கொள்ளும் நாட்டை தான் அதிகம் கண்காணிக்க வேண்டும்.

தனது கட்டுப்பாட்டில் இருக்கும் நாடு தன்னை மீறி தனிச்சையாக முடிவு எடுக்கக் கூடாது. தனது எதிரி நாட்டிடம் நட்பு பாராட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களின் வளர்ச்சிக் கூட வல்லரசுகளுக்கு தடையாக இருக்கலாம். அமெரிக்கா அடுத்த நாட்டவர்கள் தகவல்களை ஒட்டுக் கெட்பதற்கும் இது தான் காரணம்.

உளவு என்பது உள்நாட்டுப் பாதுகாப்புக்கு மட்டுமல்ல. அண்டை நாட்டு அரசியல் மனநிலைகளை தெரிந்து கொள்ளவும் அது தான் அடிப்படை சூத்திரம். உளவறிதலில் சரியான தகவல் இல்லாவிட்டால், நண்பனைக் கூட எதிரியாக்கிக் கொள்ளும் அபாயம் உண்டு. உளவாளியால் உறவுகள் வளரவும் வாய்ப்புண்டு, பிரிந்த உறவைக் கண்டுபிடிக்கவும் வாய்ப்புண்டு.

ஒரு நாட்டுடன் கூட்டனி வைக்க வேண்டுமா, வேண்டாமா என்பதை உளவாளி அந்த நாட்டை பற்றி கொடுக்கும் தகவல் வைத்தே அமைந்திருக்கிறது.

அமெரிக்காவின் சி.ஐ.ஏ, இஸ்ரேலுக்கு மொசாட், பாகிஸ்தானுக்கு ஐ.எஸ்.ஐ என்று எல்லா நாடுகளுக்கும் வெளியுறவுக்கு ஒரு உளவு அமைப்பு உண்டு. உள்ளூரில் நடக்கும் தகவலை சேகரிப்பதற்கும் இன்னொரு உளவு அமைப்பை வைத்திருக்கிறார்கள். இவர்களால் அதிக பலன் கிடைப்பதை விட வரப் போகும் கேடுகளை தடுக்க முடியும்.

இந்தியா நாட்டின் பாதுகாப்புக்காகவும், வெளியுறவை வழுப்படுத்துவதற்காகவும், வெளிநாட்டில் இந்தியாவுக்கு எதிராக செயல்படும் செயல்களை பற்றி தகவல் சேகரிப்பதற்காகவும் உருவாக்கப்பட்டது 'ரா' உளவு அமைப்பு. எதிரியை மட்டுமல்ல.... நண்பன் என்று சொல்லிக் கொள்ளும் தேசத்தை கண்காணிப்பதும், நமது பாதுகாப்புக்கு முக்கிய அரணாக இருப்பவர்கள் இவர்கள் தான்.

உளவு அமைப்பு நவீனக்காலத்தில் தோன்றப்பட்டது இல்லை. மன்னர் காலத்தில் இருந்தே உளவுத் துறை இருந்திருக்கிறது. திருவள்ளுவர் உளவைப் பற்றியும், தூதுப் பற்றி குறள் எழுதியிருக்கிறார்.

**"ஒற்று முறைசான்ற நூலுமிவை இரண்டுந்**

**தென்றென்க மன்னவன் கண்"**

ஒற்றன் எனக் கூறப்படும் உளவாளி திறம்பட்டவனாய், எதிரி நாட்டில் நடப்பவைகளாஇயும் தேர்ந்து தெளிந்து அரசனுக்கு அறிவிப்பவனாய் இருப்பவனையும், நீதிகளைப் போதிக்கின்ற சாஸ்திரத்தையும் அரசன் இரண்டு கண்களாக சமமாக பாவித்து பாதுக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார். இரகசிய இலாகாவின் பெருமை, ஒற்றர்களின் பெருமை எவ்வளவு தூரம் தமிழரசில் இடம் பெற்றிருக்கிறது என்பதை இதன் மூலம் நாம் அறியலாம்.

இன்று உளவு பார்ப்பதற்கு எத்தனையோ நவீன பொருட்கள், விஞ்ஞான சாதனங்கள் பயன்படுத்துகிறார்கள். ஆனால், பண்டையக் காலத்தில் உளவு பார்ப்பதற்கு மன்னர்கள் நம்பியது மனிதர்களை மட்டும் தான். அவர்கள் மக்களோடு மக்களாக சராசரி மனிதர்களாக இருப்பவர்கள்.

மன்னருக்கு எதிராக பேசி மக்களின் மனநிலையை புரிந்துக் கொள்வார்கள். வியாபாரிப் போல் வேடமிட்டு வேறு சம்ராஜ்ஜியத்திற்கு வேவு பார்ப்பார்கள். தாங்கள் சேகரிக்கும் தகவலை அப்படியே மன்னருக்கு கொடுப்பார்கள்.

கிடைத்த தகவல்களை வைத்து அண்டை நாட்டின் மீது நடந்துக் கொள்ளலாம், நடவடிக்கை எடுக்கலாம் என்று மன்னர் முடிவு எடுப்பார். முகலாயர் சாம்ராஜ்ஜியத்தில் இப்படி தான் நடந்தது. முகலாயர் மன்னர்களுக்கும், ராஜ புத்திரர்களுக்கு நடந்த பல போர்கள் தூதர்கள் பங்கு அதிகம் இருந்திருக்கிறது.

பிரிட்டிஷ் இந்தியாவை அடிமைப் படுத்த நினைத்த போது ஒவ்வொரு சம்ராஜ்ஜியத்திலும் ஒரு உளவுவாளி வைத்து கண்காணித்து தான். அதற்கு தகுந்தற்போல் கை குளுக்கிக் கொள்வதும், எதிர்த்து போரிடுவதும் முடிவெடுத்தார்கள். சில மன்னர்களை கைது செய்ய இன்னொரு நாட்டு மன்னரே உதவி செய்தனர்.

நாம் காட்டிக் கொடுத்தப்பவரை துரோகி என்று சொல்கிறோம். ஆனால், வெள்ளையர்கள் நம்மை ஆண்ட ஒவ்வொரு சாம்ராஜ்ஜியத்திலும் ஒரு உளவுயை பிடித்ததில் தான் அவனால் இந்தியாவை கைப்பற்ற முடிந்தது. உறவுத்துறையை சரியாக பயன்படுத்தியதால் தான் அவனால் மூன்னூறு ஆண்டுகள் மேல் நம்மை அடிமையாக்க வைத்திருக்க முடிந்தது.

மன்னர் காலத்தில் மனிதர்களை கொண்டு உளவு வேலைகளை செய்யப்படாலும், ஒரு கட்டுக்கோப்பாக ஒரு அமைப்பாக நடத்தப்பட வில்லை. எதிரிகளை கண்காணிப்பதில் தங்கள் நிதியை ஒரு பகுதியை மட்டும் ஒதுக்கினார்கள். ஆனால், வெள்ளையர்களை நம்மை அடிமையாக்கிய பிறகு தங்கள் பிடியை பலப்படுத்திக் கொள்ள ஒவ்வொரு பகுதிகளிலும் உளவுப் பார்க்க ஒருத்தரை வைத்திருந்தனர். கட்டுக் கோப்பான அமைப்பாக உளவு அமைப்பை உருவாக்கினார்.

1885ல், சிம்லாவில் இருந்த பிரிட்டிஷ் இந்திய இராணுவ தளபதியான 'சார்லஸ் மெட் காஃப் மேக்கரீன்' என்பவர் முதலில் உளவு நிறுவனத்தை இந்தியாவில் தொடங்கினார். சோவியத் ரஷ்யா இந்தியாவை ஆக்கிரமிக்க கூடும் என்று பயந்த பிரிட்டிஷ் அரசு, ஆப்கானிஸ்தானில் நிலை கொண்டு இருந்த ரஷ்ய துருப்புகளை கண்காணிக்கும் முக்கிய பணியாக அவர்களுக்கு இருந்தது.

1921ல் இந்திய அரசியலை கண்காணிக்க பிரிட்டிஷ் அரசு இந்திய அரசியல் புலனாய்வுப் பிரிவு (Indian Political Intelligence) என்ற அமைப்பை உருவாக்கியது. ஸ்காட்லாண்ட் யார்ட் மற்றும் எம்.ஐ 5 போன்ற அமைப்புகளோடு நல்ல தொடர்பில் இருந்தன.

1947ல் இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, உள்துறை அமைச்சகத்தின் கீழ் தற்போதைய ஐ.பி (Intelligence Bureau) உருவானது.உள்நாட்டு, அயல்நாட்டு உளவுப் பணிகளை ஐ.பி கவனித்துக் கொண்டது. அதன் முதல் தலைவராக சஞ்சிவி பிள்ளை பொருப்பேற்றார், 'காந்தி படுகொலை'க்கு பிறகு ஐ.பி தலைவர் பொருப்பை பி.என்.முல்லிக் ஏற்றுக் கொண்டார். இவர் காலத்தில் தான் ஐ.பி இந்தியாவின் முக்கிய சக்தியாக மாறியது.

இந்திய போலீஸ் சர்வீஸ் மற்றும் இராணுவ அதிகாரிகளைக் கொண்டு ஐ.பி அமைப்பு செயல்பட்டு வருகிறது. இந்திய தூதர அதிகாரிகள் மற்றும் நீதிபதிகள் பதவி ஏற்புக்கான பாதுகாப்புகளை கவனித்து வருகிறது. தற்போது, காவல் துறைக்கும், மற்ற உளவுப்பிரிவுக்கு தகவல் கொடுக்கும் முக்கிய பிரிவாக ஐ.பி இயங்கி வருகிறது.

ஐ.பி அதிகாரிகள் சீனா, பர்மா, இலங்க்கை போன்ற அண்டை நாடுகளில் மட்டுமல்லாமல் பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளிலும் பணிபுரிந்தனர். ஐ.பி அதிகாரிகள் சீனாவில் இருந்தும், 1961ல் இந்தியாவுக்கு எதிராக அவர்கள் போர் தொடுப்பார்கள் என்பதை அவர்களால் கணிக்க முடியாமல் போனது. அந்த போரில் இந்தியாவுக்கு பின்னடைவும் ஏற்பட்டது.

சீனாவுக்கு போர் முடிந்த நான்கு வருடத்தில் பாகிஸ்தானோடு இன்னொரு யுத்தம் (1965). வளரும் நாடு, போருக்கு பின் போர் சந்திக்க கொண்டே இருந்தால், அது நாட்டின் வளர்ச்சியை பாதிக்கும் என்று நினைத்தனர்.

சுதந்திரம் அடைந்து இருபது வருடம் பிறகு அந்நியர்களை கண்காணிக்க இந்தியா அதிகம் அக்கரைக் காட்டவில்லை. இந்திய பிரதமர் நேருவும் வளர்ச்சியில் தான் அதிகம் கவன செலுத்தினார். அந்நிய நாடுகளோடு நட்பு பாராட்டவே நினைத்தார். ஆனால், அதற்கான விலையை சீனா நமக்கு வழங்கியது.

வெளிநாட்டவர்கள், அந்நியர்கள் என்று தனியாக கண்காணிக்கும் அமைப்பை உருவாக்க இந்திரா காந்தி நினைத்தார். அதன் பெயரில் ஐ.பி பொருப்பை குறைக்கவும், வெளியுறவுகளை சுதந்திரமாக கவனித்துக் கொள்ளவும் 'ரா' என்ற தனி உளவு அமைப்பு இந்தியாவில் உருவானது.

*****

# 2. ரகசியமாக உள்ளே வா!!

"மைநேமிஸ் பாண்ட்...ஜெம்ஸ் பாண்ட்."

கையில் துப்பாக்கி. கோர்ட் சுட் போட்ட உடை. சுற்றி வரும் அழகான பெண்கள். அதி நவீண ஆயுதங்கள். இப்படி ஒரு வேலைக் கிடைத்தால் சொர்க்கம் தான். அப்படி ஒரு பிம்பத்தை ஏற்படுத்திருயிருக்கிறது ஜெம்ஸ் பாண்ட் வைகையான படங்கள்.

உளவு பார்ப்பவர்கள் தமிழுக்கு அறிமுகமானது சி.ஐ.டி சங்கராக வந்த ஜெய்சங்கர் மூலம் தான். ஹாலிவுட் படங்கள் எடுத்துக் கொண்டால் சீன் கானரி, ரோஜர் மூர், பீயர்ஸ் பிராஸன் ஹீரோக்கள் ஞாபகம் வருவார்கள்.

பிளைட்டில் இருந்து ஹெலிகாப்டருக்கு தாவுவது, ஓடும் பிளைட்டில் புட் போர்ட் அடிப்பது, ஒரே புல்லட்டில் இரண்டு பேரை சுடுவது, நூறு பேரை அடிப்பது போன்ற விஷயங்களை கிராபிஸ்க் காட்சிகள் என்று நம்பும் அறிவு, ஜெம்ஸ் பாண்ட்டின் வாழிவியல் முறையை கற்பனை என்று நம்ப மறுக்கிறது.

ஒரு உளவாளி எப்போதும் கோர்ட் சூட் போட்டுக் கொண்டோ, கையில் துப்பாகி அதி அதிநவீன ஆயுதங்களோ வைத்திருப்பார் என்று இல்லை.

சாரசரி உடையில், ரேஷன் அரிசி வாங்குபவராக கூட இருக்கலாம். சில சமயம் உளவு பார்ப்பதற்காக பிச்சைக்காரன் வேஷம் கூட போடலாம். இப்படி ஒரு உளவாளி ரகசியமாக வேலை செய்ய வேண்டிய சூழலில், ரா வேலைக்கு ஆட்கள் சேர்ப்பது மட்டும் எப்படி பகிரங்கமாக இருக்க முடியும்.

இன்ன தேதியில், இத்தனை மணிக்கு உங்கள் புகைப்படம், சான்றிதழுடன் வாருங்கள். ஐந்து ரவுன்ட் இன்டர்வியூ எடுக்கப்படும். தேர்ச்சிப் பெற்றவர்களில் விபரங்கள் மேல் அதிகாரி பார்த்து வீட்டுக்கு ஒரு கவர் வரும் போன்ற வேலைக்கு ஆட்கள் எடுக்கும் வழி முறைகள்

எல்லாம் இல்லை. ராவில் காலை 10 மணிக்கு சென்று மாலை 6 மணிக்கு வந்து டீ, காபி குடிப்பது போல் இந்த வேலை இருக்காது. அதனால், வழக்காம வேலைக்கு ஆட்கள் எடுக்கும் சராசரி வழி முறைகளை இதில் பின்பற்றப்படுவதில்லை.

ராவில் பெரும்பாலான வேலைகளுக்கு நேரடி வேலை வாய்ப்பு என்பது கிடையாது. (சமீபத்தில், அரசு வேலை வாய்ப்பு தேர்வுகளில் தேர்ச்சி பெற்றவர்களையும் வேலையில் சேர்த்துக் கொள்ளப்படுவதாக சொல்லப்படுகிறது. உறுதியாக தகவல் இல்லை). ராவில் முக்கியமாக பணியாற்றுபவர்கள்

**சோர்ஸ் (Source)**

பொதுவாக உளவாளிகளுக்கு தகவல் கொடுப்பவர்களை ’சோர்ஸ்’ என்று சொல்வார்கள். இவர்கள் ராவின் நேரடி ஊழியர்கள் இல்லை. பெரும்பாலும், எதிரி இடத்தில் இருக்கும் கருப்பு ஆடு (காட்டிக்கொடுப்பவன்) தான் உளவாளிகளுக்கு தகவல் கொடுக்கும் ‘சோர்ஸ்’. இவர்களுக்கு மாத சம்பளம் எல்லாம் கிடையாது. கொண்டு வரும் தகவல் வைத்துக் கொடுக்கப்படும் கமிஷன் தான்.

எதிரி இடத்தில் இருந்து இவர்கள் தகவல் கொடுப்பதால், தகவல் பெரும் களப்பணியாளர்கள் சந்தேகக் கண்ணொட்டத்தின் பெயரிலே இவர்களை அனுக வேண்டியது இருக்கும்.

பெரும்பாலும், வெள்ளாட்டு நடுவில் தகவல் கொடுக்கும் கருப்பாட்டை கண்டு பிடிப்பது மிகவும் கடினம். ஆனால், கண்டு பிடித்துவிட்டால் எதிரி இடத்துக்கு செல்லாமலே எதிரியின் அசைவுகள் தெரிந்துக் கொள்ள முடியும். கிட்டதட்ட நோகாமல் நொங்கு திண்பது போல தான்.

’சோர்ஸ்’ தங்கள் வலையில் விழ்பதற்கு பணம், பொருள், பதவி போன்ற ஆசைகளைக் காட்டி விழவைப்பார்கள். கருப்பாட்டை கண்டிப்பிடிப்பதில் வல்லுநர்கள் என்று சி.ஐ.ஏவை சொல்லலாம். ஒருவனின் பலவீனத்தை சரியாக ஆராய்ந்து, அதற்கான வலையை

பயன்படுத்துவார்கள். ஒருவனை வலையை விழ வைக்க பெண்ணை பயன்படுத்த வேண்டும் என்றால் அதைக் கூட கூச்சப்படாமல் சி.ஐ.ஏ செய்வார்கள்.

எப்படி எதிரி நாட்டில் இருக்கும் கருப்பாடு நமக்கு சோர்ஸாக இருக்கிறார்களோ, நம் நாட்டில் இருந்தும் சில கருப்பாடுகள் எதிரிக்கு சோர்ஸாக பயன்படுவதும் உண்டு. நமக்கு தகவல் கொடுப்பது போல் கொடுத்து, களப்பணியாளர்களை தங்கள் பக்கத்தில் இழுத்து அவர்கள் நாட்டுக்கு 'சோர்ஸாக மேற்கொள்ளும் முயற்சிகளும் நடக்கும் நடக்கும். மாட்டிவிடும் முயற்சிகளும் நடக்கலாம்.

அதனால், தகவல் திரட்ட ஒரு சோர்ஸ் மட்டும் நம்பி இருக்க மாட்டார்கள். இரண்டு, மூன்று சோர்ஸ் வைத்திருப்பார்கள். ஒரு வேலை ஒருவன் மாட்டிக் கொண்டாலோ, தவறுதலாக தகவல் கொடுத்தாலோ, திடீர் நேர்மையாக செயல்ப்பட்டாலோ களப்பணியில் இருக்கும் ரா அதிகாரிக்கு ஆபத்து. ரா அதிகாரிகள் இவர்களிடம் எச்சரிகையாக நடந்துக் கொள்வார்கள்.

**களப்பணியாளர்கள் (Field Officiers)**

உண்மையில், ராவின் கதாநாயகர்கள் இவர்கள் என்று சொல்லலாம். ராவின் எதிரி அமைப்புக்கு உடுறுவுதல், எதிரிகளை நோட்டம் விட்டு தகவல் சேகரிப்பது, கண்காணிப்பது போன்ற வேலைகள் செய்யும் பொறுப்பு இவர்களுடையது. இது போன்ற ஆபத்து நிறைந்த வேலை என்பதால் இன்டலிஜென்ஸ் பிரோ (IB), காவல்த்துறை, இராணுவம் போன்ற அமைப்பில் வேலை செய்பவர்களை பார்த்து பார்த்து தங்கள் ரா அமைப்பில் சேர்த்துக் கொள்வார்கள். களப்பணி இறங்கி வேலை செய்ய சில சமயம் நேரடியாக வேலை கிடைக்கக் கூட வாய்ப்பிருக்கிறது.

களப்பணியில் உயிருக்கு ஆபத்தான சந்தர்ப்பங்கள் இவர்களுக்கு அதிகம். அதனால், தங்களை தற்காத்துக் கொள்ள முடிந்தவர்களை

சேர்த்துக் கொள்கிறார்கள்.

ஆரம்பத்தில், துணை களப்பணி அதிகாரி (Assistant Field Officier) அல்லது இணை களப்பணி அதிகாரியாக (Field Officier) வேலை செய்ய வேண்டும். காவல்த்துறையில் இன்ஸ்பெக்டருக்கு சமமான வேலை என்று சொல்லலாம். களப்பணியில் மேலாளர்களுக்கு உதவியாக தகவல் திரட்டிக் கொடுக்கவும், மேலாளர் கொடுக்கும் தகவலை தலைமை அலுவலகத்திற்கு கொடுக்கவும் போன்ற வேலையில் ஈடுப்பட வேண்டியதாக இருக்கும்.

புரியும் படியும் சொல்ல வேண்டும் என்றால், “விஸ்வரூபம்” படத்தில் ஆப்கானிஸ்தானில் கமலுக்கு உதவியாக ஒரு தாடிக்கார இளைஞன் கஞ்சாவுக்கு பதிலாக டிரான்ஸ்மிட்டரை ஒரு பையில் வைப்பானே! அவன் தான் துணை களப்பணி அதிகாரி!!!

துணை / இணை களப்பணி அதிகாரி மேல் இருப்பவர்கள் களப்பணி அதிகாரிகள் (Field Officiers). (விஸ்வரூப் படத்தில் கமல் பாத்திரம்). பெரும்பாலும் ஜெம்ஸ் பாண்ட் போன்ற சாகச வேலைகள் செய்ய வேண்டியது வரும். உயிருக்கு ஆபத்தான பணி என்று கூட சொல்லலாம். குறைந்தது எட்டு வருடம் மேல் துணை/ இணை களப்பணி அதிகாரியாக இருந்தால் தான் கள அதிகாரியாக இருக்கமுடியும்.

ஐந்து வருட களப்பணி அதிகாரியான பிறகு மூத்த களப்பணி அதிகாரி (விஸ்வரூபத்தில் சேகர் கபூர் பாத்திரம்) பணிக்கு தகுதி பெறுகிறார்கள். களப்பணி அதிகாரிகளுக்கு மிஷன் நிர்ணயப்பதும், அதற்கான தலைமை பொறுப்பு ஏற்றுக் கொள்வதும் இவர்கள் தான்.

நாம் திரையில் பார்க்கும் ஜெம்ஸ் பாண்ட் வேலைகள் செய்பவர்கள் இந்த களப்பணி அதிகாரிகள் தான்.

இதே போல், களப்பணியாளர்களுக்கு கிடைக்கும் தகவல் எல்லாம் சரியாக இருக்கும் என்று சொல்ல முடியாது. எதிரி நாடுகள் திசைத்

திருப்பவதற்காக தவறான தகவலை வதந்திப் போல் அவர்களே பரப்பி விடுவார்கள். 'சோர்ஸ்' மூலம் கிடைக்கும் தகவல் தவறாகக் கூட இருக்கலாம். அதனால், களப்பணியாளர்கள் கொண்டு வரும் தகவல்களை சரியாக இருக்கிறதா என்று ஆய்வு செய்வதற்கு தனி பிரிவு ஒன்று உண்டு.

**தகவல் ஆய்வாளர்கள் (Analyst Officiers)**

அலுவலகத்தில் கம்யூட்டர் முன்பு அமர்ந்தப்படி செய்யக் கூடிய வேலை. களப்பணியாளர் கொண்டு வரும் தகவலை சரிப்பார்த்து உறுதி செய்வது மேலாளர்களுக்கு சொல்ல வேண்டும். அதேப் போல் சேகரிக்கப்பட்ட முந்தைய தகவல்களை களப்பணியாளருக்கு கொடுப்பதும் இவர்களின் பொறுப்பு. களத்தில் இறங்காமல் வேலை செய்வதால் ஆபத்தில்லாத வேலை என்று சொல்லலாம்.

ஜூனியர் இண்டலிஜன்ஸ் ஆபிஸர், அஸிஸ்டண்ட் செண்ட்ரல் இண்டலிஜன்ஸ் ஆபிஸர், செண்ட்ரல் இண்டலிஜன்ஸ் ஆபிஸர் என்று அனுபவத்திற்கு தகுந்தாற்போல் இவர்களுக்கு வேலை பொறுப்புகள் வழங்கப்படுகிறது.

ராவின் இருப்பவர்கள் எல்லோருமே ரகசிய ஏஜெண்டாக இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. டைப்பிஸ்ட், டேடே எண்ட்ரி போன்ற வேலை செய்பவர்கள் கூட ராவில் இருக்கிறார்கள். அவர்களுக்கு தங்கள் வேலையை மீறி அதிகமான விஷயங்கள் தெரிந்துக் கொள்ள முடியாதப்படி பாதுகாப்பாக தகவல்களை பராமரிப்பார்கள்.

**இயக்குனர்கள் (Director)**

ராவின் நிர்வாகம் பொருப்பில் இருப்பவர்களை இயக்குனர் என்று அழைப்பார்கள். இவர்களும் இராணுவம், காவல்துறை, ஐ.பி போன்ற அமைப்புகளில் இருந்து தான் தேர்வு செய்யப்படுவார்கள்.

களப்பணி செய்யும் ஜெம்ஸ் பாண்டுகளுக்கு என்ன செய்ய வேண்டும், என்ன இலக்கு, எந்த வேஷத்தில் செல்ல வேண்டும், என்ன தகவல் கொண்டு வர வேண்டும் போன்ற வேலைகளை திட்டம் போட்டு கொடுப்பது இவர்களுடை முக்கிய பொறுப்புகள். “ஜெம்ஸ் பாண்ட்” படங்களில் வயதான பாட்டி அம்மா பாண்டுக்கு என்ன வேலை செய்ய வேண்டும் சொல்வாரே! அவர்கள் “இயக்குனர்” பிரிவுகளில் வருவார்கள்.

ஜாயிட் டைரக்டர், ஸ்பேஷல் டைரக்டர், அடியஷனல் டிரைக்டர், டைரக்டர் என்று அனுபவ ரீதியாக மேலாளருக்கு பதவியில் பணியாற்றுவார்கள்.

**துறை வல்லுநர்கள்**

இன்றைய நவீன யுகத்தில் எதிரிகள் தகவல்களை எப்படி வேண்டுமானாலும் பரிமாற்றிக் கொள்வார்கள். அதனால், களப்பணியார்கள், ஆய்வாளர்கள் மட்டும் இங்கு போதாது. தற்காப்பு கலை மட்டும் தெரிந்தவராலும் ஒன்றும் செய்ய முடியாது. இதை கண்க்கொள்ள ஒவ்வொரு துறை சார்ந்த வல்லுநர் உதவி ராவுக்கு தேவைப்படுகிறது.

உதாரணத்திற்கு, இன்று பேஸ்புக் எத்தனையோ தகவல் பரிமாறப்படுகிறது. இதை எல்லாம் கண்காணிக்க கம்ப்யூட்டர் அறிவுவாளிகள் தேவைப்படுகிறார்கள். அதேப் போல், கையெழுத்தை சரிப்பார்ப்பதற்கு கையெழுத்து வல்லுநர்கள் தேவைப்படுகிறார்கள். கம்பூட்டரை ஹக்கிங் செய்வதற்கு ஹக்கர்கள் தேவைப்படுகிறார்கள். விஞ்ஞான ரிதியான தகவலைப் பற்றி தெரிந்துக் கொள்ள விஞ்ஞானிகளின் உதவிகள் தேவைப்படுகிறது.

அதனால், ஒவ்வொரு துறையில் இருக்கும் வல்லுநர்களை தேர்ந்தெடுத்து தங்களுக்கு உதவியாக ராவில் சேர்த்துக் கொள்வார்கள்.

இது போக பிற அரசு துறைகளில் இருந்து டெபுடேஷனில் சேர்க்கப்படுவார்கள். குறிப்பிட்ட காலக்கட்டம் வரை அவர்கள் ரா கீழ்

வேலை செய்ய வேண்டியதாக இருக்கும். அவர்கள் வேலை முடிந்ததும் மீண்டும் தங்கள் பழைய அரசுப்பணிக்கு மாற்றப்படுவார்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக ராவில் சேருவதற்கு மிக முக்கியமான ஒன்று வேண்டும். நம் நாட்டின் மீது தேசப்பக்தி. எக்காரணத்திலும், எதிரியிடம் மாட்டிக் கொண்டால், நமது ரகசியத்தை வெளியே சொல்லாமல் இருக்க வேண்டும்.

மேற்படி பார்த்ததில் இருந்து ராவில் வேலை செய்ய ஏதாவது ஒரு அரசுத் துறையில் சாதித்திக்க வேண்டும் என்பது உங்களுக்கு புரியும். தற்போது நேரடி ரா வேலை வாய்ப்பு என்பது இல்லை.

ஆனால், எதிர்காலத்தில் ராவில் வேலை செய்ய நேரடியாக ஆட்கள் எடுக்கப்படலாம்.

*****

# 3. ராவின் பயிற்சியும் கொள்கை கோட்பாடும்

இராணுவம், காவல்துறை பணியாற்றினாலே ராவில் வேலை கிடைத்துவிடும் என்பதில்லை. இதில் தேர்வு செய்யப்பட்டவர்கள் உளவு அமைப்பு நடத்தும் NATI (National Aptitude Test in Intelligence) என்ற தேர்வை எழுத வேண்டும்.

மனத்தத்துவரியாகவும், மன உறுதி பரிசோதிப்பதும் போன்ற விஷயங்களில் பரிசோத்து பார்த்து பிறகே ராவில் சேர்த்துக் கொள்வதற்கு உறுதியாகும். அந்த தேர்வில் என்ன கேள்வி கேட்பார்கள், கயிட் இருக்கிறதா என்ற கேள்வி எல்லாம் கேட்க கூடாது. உளவு வேலை எவ்வளவு ரகசிமோ அதை விட ரகசியமானது அவர்களின் தேர்வு முறைகளும்.

பயிற்சியின் முதல் நாள் வகுப்பு எடுப்பது போல் எடுத்துவிட மாட்டார்கள். முதல் பத்து நாளுக்கு எல்லோரும் சகஜாமாக பலகுவார்கள். உளவுத்துறையை பற்றி பரப்பட்ட புனைவுகளை பற்றி விவாதிப்பார்கள். பொது அறிவு விஷயங்களை பற்றி பேசுவார்கள். எல்லோரும் இயல்பாக பழகத் தொடங்கிய பிறகே பயிற்சி தொடங்கப்படும்.

முதலில் ரா அதிகாரிகளுக்கு வழங்கப்படுவது அடிப்படை பயிற்சி. கோரேகானில் ராவுக்கு பயிற்சி அளிக்க தனி பயிற்சி மையம் இருக்கிறது. அதேப் போல், பொருளாதார உளவுப் (Economic Intelligence) பற்றி பயிற்சி அளிக்க மும்பையில் தனி பயிற்சி மையம் இருக்கிறது.

“உளவுப் பார்ப்பதில் நமக்கு யாரும் நண்பனுமில்லை. எதிரியுமில்லை” என்பது தான் அடிப்படைக் கோட்பாடு. இங்கு நண்பன் என்று சொல்லிக் கொள்வன் நாளையே காட்டுக் கொடுக்கும் துரோகியாகலாம். எதிரி

என்று நினைக்கப்படுபவன் முக்கியமான தகவலைக் கொடுக்கலாம். ஆதனால், இவன் வேண்டும், வேண்டாம் முன்குட்டியே முடிவு வராமல் இருப்பது தான் ஒரு உளவாளியின் முக்கிய கடமை.

மோஸாட், சி.ஐ.ஏ, ஐ.எஸ்.ஐ, கே.ஜி.பி போன்ற வெளிநாடுகளின் வெளியுறவு உளவாளிகளின் அனுபவக் குறிப்புகளை படிப்பதற்கு கொடுப்பார்கள். ராவின் முந்தைய வெற்றி, தோல்வி கதைகளை பற்றி விவாதிப்பார்கள். இந்தியாவின் வெளியுறவு கொள்கைகளை சொல்லிக் கொடுப்பார்கள். ஒரு ரா உளவாளி அடிப்படையாக தெரிந்துக் கொள்ள வேண்டிய விஷயங்கள் இது.

அடிப்படை பயிற்சிகள் முடிந்த பிறகு களப்பயிற்சிகள் கொடுப்பார்கள். அவற்றில் சில சட்ட விரோதமாக எதிரி இடத்தில் இருந்து பொருட்களை எடுத்துவது, மாட்டிக் கொண்டால் தப்பிப்பது, விசாரணையின் போது எப்படி பதில் அளிப்பது போன்ற பயிற்சிகள் கொடுப்பார்கள். அதுமட்டுமில்லாமல் தற்காப்பு கலைகளான கராத்தே, குங்பூ போன்ற கலைகளை கற்றுத்தருவார்கள். மாட்டிக் கொண்டால் எப்பேர்ப்பட்ட சூழ்நிலையிலும் தாங்கள் ரா அதிகாரி என்ற உண்மையை சொல்லக் கூடாது என்ற மன உறுதியை வளர்ப்பது தான் முக்கிய பயிற்சி.

உளவுப் பற்றி இன்னும் கற்றுக் கொள்ள சில சமயம் இராணுவ கூடாராங்களில் கூட ரா அதிகாரிகளை அனுப்புவார்கள். அங்கு, ஒளிந்திருக்கும் அந்நிய சக்திகளை கண்டுபிடித்து தகவல் கொடுக்க வேண்டியதாக கூட இருக்கலாம். ஆனால், இராணுவ வேலைகளை அதிகமாக கண்காணிக்கப்படுகிறது போன்ற விமர்சனங்களும் இதனால் எழுப்பப்பட்டது.

ஒரு உளவாளி தனக்கு தகவல் கொடுக்கக் கூடிய நெட்வொர்க்கை உருவாக்கிக் கொள்ள வேண்டும். மேலாளர் கொடுக்கும் வேலையை மட்டும் செய்யும் வேலை மட்டும் இங்கு இருக்காது. உதாரணத்திற்கு, அதிக ஜன நடமாட்டம் இருக்கும் மும்பை பகுதியில் தீவிரவாதிகள் எப்போது வேண்டுமானாலும் வெடிகுண்டு தாக்குதல் நடத்தலாம்.

அதனால், அங்கு கடை வைத்திருப்பவர்கள், வேலை செய்பவர்கள் தங்களுக்கு தகவல் வழங்கக் கூடிய சோர்ஸாக ஒரு உளவாளி மாற்ற வேண்டும். எங்கெல்லாம் ஆபத்து வர வாய்ப்பிருக்கிறதோ அங்கெல்லாம் தகவல் கொடுக்கும் ’சோர்ஸ்’ இருக்கும் படி செய்ய வேண்டும்.

எதிரி இருப்பிடத்தில் தகவல் சேகரிக்க வேண்டும் என்றால் அங்கு இருக்கும் ‘மோல்’ (mole) என்கிற கருப்பாட்டை கண்டுபிடிக்க வேண்டும். எதிரிக்கு கருப்பாடு என்றால், நமக்கு தகவல் கொடுக்கும் முக்கியமான ‘சோர்ஸ்’ என்பதை உளவாளி புரிந்துக் கொண்டு செயல்பட வேண்டும்.

***

**நாங்க என்ன செய்யனும்?**

இந்திரா காந்தி புன்னியத்தில் உளவுத்துறை உருவாகிவிட்டது. 'ரா' என்று அழகிய நாமகரனமும் சூட்டிவிட்டார்கள். அவர்களுக்கு என்ன வேலை? என்ன நோக்கங்கள், கொள்கைகள், செயல்பாடுகள் என்று எல்லாவற்றையும் வரைமுறைப்படுத்த வேண்டுமே! மனித உயிர்களை கொள்ளும் தீவிரவாத இயக்கமே கொள்கையோடு இயங்கும் போது ஒரு நாட்டை பாதுகாக்கும் பொருப்பில் இருக்கும் உளவுத்துறை செயல்பாடுகள் எப்படி இருக்கும்? பாதுகாப்பில் மட்டுமல்லாமல் எதிர் நாட்டை உளவு பார்க்கும் வேலையில், திட்டம் மிகவும் அவசியம்.

‘ரா’வின் செயல்பாடுகளைப் பற்றி பாட புத்தக வடிவத்தில் பார்ப்போம்.

ராவின் முக்கிய வேலைகள்

1. அண்டை நாடுகளில் நிகழும் - அரசியல், ராணுவ மாற்றங்களைக் கண்காணிப்பது.

2. சர்வதேச கம்யூனிசத்தின் வளர்ச்சியை கண்காணிப்பது. அந்த நாடுகளின் கம்யூனிஸ்ட் கட்சிகளுக்குள்ள தொடர்புகளைக் கண்காணிப்பது.

3. பாகிஸ்தான் மற்றும் சீனாவின் ராணுவம் நவீன ஆயுதங்களை கண்காணிப்பது. ஏதாவது புது ஆயுதம் வாங்குவதாக தகவல், அதன் ரிஷிமூலத்தை மட்டுமல்லாமல் எல்லாவற்றையும் ஆராய வேண்டும்.

4. சர்வதேச நாடுகளில் வாழும், இந்திய சமூகத்தினைப் பயன்படுத்தி, அந்த நாடுகளில் கருத்துருவாக்கம் மற்றும் அரசியல் அழுத்தங்களை உருவாக்குதல்.

உலகில் எந்த ஒரு உளவு நிறுவனம் தொடங்குவதாக இருந்தாலும், அவர்களுக்கு பயிற்சி அளிக்க முதலில் அணுகுவது அமெரிக்க அண்ணனின் 'சி.ஐ.ஏ' என்பது மாற்றப்படாத விதி. அடுத்து பயிற்சிக்கு தொடர்பு கொள்வது அமெரிக்காவின் தம்பி இஸ்ரேலின் உளவு நிறுவனமான 'மோஸாட்'. அதே விதியை தான் ரா விஷயத்திலும் பின்பற்றப்பட்டது.

விமானக் கடத்தல், பிணைக்கைதிகளுடனான பேச்சுவார்த்தை போன்றவற்றைக் கையாளவும் பயங்கரவாத எதிர்ப்பு நுணுக்கங்களைக் கற்றுக்கொள்ளவும் தங்களுடைய ரா அதிகாரிகளுக்கும், ஐபி அதிகாரிகளுக்கும் பயிற்ச்சி அளிக்க சிஐஏவின் உதவியை ரா நாடியது. சிஐஏ அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டது. அப்போது ஆப்கானிஸ்தானில் சில நடவடிக்கைகளில் சி.ஐ.ஏ ஐ.எஸ்.ஐயுடன் சேர்ந்து செயல்ப்பட்டு வந்தது. ஆதாவது, ரஷ்யாவுக்கு எதிரான வேலையில் இருந்தது. ரஷ்யா இந்தியாவின் முக்கியமான நட்பு நாடு. அப்போதைய ரா இயக்குனர்களான கவ், சந்தூக், சக்சேனா ஆகியோர் மிகுந்த விழிப்புடன் சி.ஐ.ஏவுடனான ராவின் தொடர்புகளை பாதிக்கப்படாமல் பார்த்துக்கொண்டனர்.

சர்வதேச மட்டத்தில் உளவுக் கூட்டுறவு மிக விசித்திரமாகச் செயல்படுகிறது என்பதற்கு மிக முக்கியமான உதாரணம். நமக்கு எதிராகப் பயங்கரவாதத்தைப் பயன்படுத்த நினைக்கும் ஐ.எஸ்.ஐக்கும் சிஐஏ பயிற்சி அளித்தது. அதே சமயம், பயங்கரவாதத்தை எதிற்கொள்ளும் நுணுக்கங்கங்களை ரா, ஐபி அதிகாரிகளுக்கும் சி.ஐ.ஏ

கற்றுக்கொடுத்தது. இரண்டு பக்கம் யார் பாதிக்கப்பட்டாலும் சி.ஐ.ஏவுக்கு லாபமாக இருந்தது.

இஸ்ரேலின் மொஸாட் ராவுக்கு பயிற்சி அளிப்பது ரகசியமாக பாதுகாக்கப்பட்டது. ஆனால், 1977ல் மொரார்ஜி பிரதமராக இருந்த காலக்கட்டதில் சில விஷயங்கள் கசியத் தொடங்கின. இஸ்ரேலின் புகழ்பெற்ற ராணுவ ஹீரோ ஜெனரல் மெஷே தயான், ரகசியமாகக் காட்மாண்டுவுக்கு வந்தது அன்றைய ஊடகங்களுக்கு தெரியவந்தது. இந்திய அரசின் பிரதிநிதிகளைச் சந்திப்பதற்குத்தான் அவர் வந்திருக்கிறார் என்பதை ஊடகங்கள் உறுதிப்படுத்தினர்.

ராவில் பணியாற்றுபவர்கள் அமெரிக்கா, இஸ்ரேலிடம் பயிற்சிப் பெற்றவர்கள். 'ரா' வின் தலைமை அதிகாரி அமைச்சரவை செயலாளருடன் நேரடியாகத் தொடர்பு இருப்பார்கள். அமைச்சரவை செயலாளர் பிரதமருடன் தொடர்பு இருப்பார். ஒவ்வொரு நாளும் – 'ரா' செயலாளர், தேசியப் பாதுகாப்பு ஆலோசகருடன் தொடர்பு கொண்டு பாதுகாப்பு செயல்பட்டுகள் குறித்து விவாதிப்பார்கள்.

இரண்டு சிறப்பு செயலாளர்கள் மற்றும் ஒரு சிறப்பு இயக்குனரின் கீழ் 'ரா'வின் விமான ஆய்வு மையங்கள் இயங்குகின்றன. பல்வேறு மண்டலங்களாக பிரிக்கப்பட்டு நான்கு கூடுதல் செயலாளர்களின் நிர்வாகத்தின் கீழ் விடப்பட்டுள்ளன. பல்வேறு தலைப்புகளின் கீழ் 'ரா' பிரச்சினைகளை கையாளுகிறது.

புது டெல்லி மட்டுமல்லாமல் வேறு பல இடங்களிலும் 'ரா'விலும் மண்டல தலைமையகங்கள் உண்டு. சர்வதேச நாடுகளில், ரகசியமாக தகவல்கள் திரட்டி அனுப்பும் வேலைகளை கள அதிகாரிகளும் மற்றும் அவர்களது உதவியாளர்களும் கவனித்து வருகிறார்கள். திரட்டப்பட்ட தகவல்கள் இறுதியாக, 'ஆய்வு அதிகாரிகளின்' பார்வைக்கு வரும். திரட்டப்படும் தகவல் சரிபார்த்து, உண்மையானதா என்பதை உறுதி செய்துக் கொண்டு பிறகு அதற்கான செயல் திட்டங்கள் இறங்குவார்கள்.

**என்ன தகவல் திரட்டுகிறார்கள்?**

தகவல் சேகரிப்பு: இந்தியாவின் நலன் தொடர்பான தகவல்கள் – முறையான வழிகளிலும், அவசியம் ஏற்பட்டால் முறைகேடான வழிகளிலும் தகவல் திரட்டப்படுகிறது.

தகவல் பகுப்பு: சேகரிக்கப்பட்ட தகவல்கள் – தலைப்பு வாரியாக பகுக்கப்பட்டு, கணினி வழியாக பதிவு செய்யப்படுகின்றன. புது டெல்லியிலுள்ள குண்டு துளைக்காத 13 அடுக்கு தலைமையகத்தில், இதற்கென்று தனித்தளம் உண்டு.

அதிரடி நடவடிக்கைகள்: உளவு பார்த்தல், எதிரியை கவிழ்ப்பு நடவடிக்கைகள், சதித் திட்டம், எதிரிக் குழுக்குள் கலகத்தை உருவாக்குதல் ஆகியவையும், 'ரா'வின் செயல்பாடுகள் ஆகும்.

ஊடுருவல்: எதிரிகளின் உளவு நிறுவனங்களில் ஊடுருவி செயல்படும் முறையையும் 'ரா' பின்பற்றி வருகிறது. ஒரு காலத்தில் 'ரா' நிறுவனத்தின் முக்கிய பணியாக 'ஊடுருவல்' கருதப்பட்டது. 'ரா' உளவு நிறுவனங்களிலிருந்து பல முக்கிய அதிகாரிகள் வேறு நாடுகளின் உளவு நிறுவனங்களுக்கு தாவி விடுவது அதிகரித்து வருவதால், 'ஊடுருவல்' வேலைகளை இப்போது அதிகமாக 'ஐ.பி' மேற்கொண்டு வருகிறார்கள்.

(அண்மைக்காலமாக 'ரா' நிறுவனம், பாகிஸ்தானை விட சீனாவிடமிருந்து தகவல்களை திரட்டுவதில் அதிக கவனம் செலுத்தி வருகிறது என்பது குறிப்பிடதக்கது.)

'ரா' உளவு நிறுவனத்தின் உளவாளிகள் – தூதரகங்கள், பன்னாட்டு நிறுவனங்கள், தகவல் தொடர்பு நிறுவனங்களான பத்திரிகைகள், தொலைக்காட்சிகள் ஆகியவற்றைத் தளமாகக் கொண்டு செயல்படுகிறார்கள். ஆப்கானின் "காட்" (KHAD), இஸ்ரேலின் மொஸாத் (Mossad), அமெரிக்காவின் சி.ஐ.ஏ, இங்கிலாந்தில் எம்.ஐ5, எம்.ஐ6 ஆகிய உளவு நிறுவனங்களோடு தொடர்பு கொண்டும் செயல்படுகிறார்கள். மேற்குறிப்பிட்ட உளவு நிறுவனங்கள் –

பாகிஸ்தானின் அணு ஆயுதக் கொள்கைகளையும், அது தொடர்பான செயல்பாடுகளையும் கண்காணிப்பதும் ஒத்த கருத்துள்ளவையால் அவர்களின் ஆதரவு 'ரா' வுக்கு உண்டு.

ஆப்கானிஸ்தான், பிரிட்டன், ஹாங்காங், மியான்மர், சிங்கப்பூர் போன்ற நாடுகளைத் தளமாகக் கொண்டு, தீவிரமாக 'ரா' உளவு நிறுவனம் செயல்படுகிறது. தங்களது உளவு வேலைகளுக்கு, உள்ளூர் பகுதிகளிலிருந்தும் ஆட்களை தேர்வு செய்கிறார்கள். மது, மங்கை, பணம் போன்ற பலவீனங்களையும் பயன்படுத்தி, தகவல்கள் சேகரிக்கப்படுகின்றன. சில நேரங்களில் மிரட்டியும் தகவல்கள் சேகரிக்கப்படுகின்றன. இனம், பிரிவு, பிரிந்து போகும் கொள்கை போன்ற உணர்வு ரீதியான பிரச்சனைகளை முன்வைத்து பணிபுரிவோரின் பலவீனங்களுக்கு தீனி போட்டு தகவல்கள் சேகரிக்கப்படுகிறது.

இதை எல்லாம் செய்வதால் ரா கெட்ட நிறுவனமோ, மக்களுக்கு எதிரான அமைப்போ இல்லை. எல்லா அரசு நிறுவனம் போல் ரா உளவு அமைப்பும் இந்திய நாட்டு மக்களுக்கான உருவாக்கப்பட்டது. நாட்டின் பாதுகாப்புக்காக தங்கள் உயிரை பணயமாக வைத்து, அந்நிய நாட்டை உளவு பார்த்து தகவல் திரட்டியிருக்கிறார்கள். அந்நிய நாட்டில் இவர்கள் மாட்டிக் கொண்டால், இந்தியாவுக்கும் இவர்களுக்கும் சம்மந்தமில்லை என்று இந்தியாவும் மறுத்திருக்கிறது. இராணுவ சிப்பாய்க்கு கிடைக்கும் இறுதி மரியாதைக் கூட நாட்டு பாதுக்காக்க தகவல் சேகரிக்கு உளவாளிக்கு கிடைப்பதில்லை.

பிரதமர் கருத்துக்கும், அமைச்சர்களின் கருத்தும் ரா செயல்பட வேண்டியதாக இருக்கிறது. ரா அதிகாரிகள் தகவல்களை கொடுத்தாலும், இறுதி முடிவு இவர்களிடம் தான் இருக்கிறது. அதனால், அரசியல்வாதிகள் மேல் இருக்கும் கோபத்தை சில சமயம் இவர்கள் மீதும் காட்டி விமர்சிக்கிறார்கள்.

பண்டைய காலத்திலும் சரி, தற்காலத்தில் சரி ஒரு நாட்டின் பாதுகாப்புக்கும், வளர்ச்சிக்கும் உளவுத்துறை மிகவும் முக்கியம். அதற்கான பணியில் 'ரா' உளவு நிறுவனம் மிகவும் அவசியம் என்பதை மட்டும் நாம் மறந்துவிடக் கூடாது.

***

**ரா எப்படி உளவு பார்த்து தகவல் திரட்டுகிறார்கள்?**

*HUMINT (Human Intelligence)*

மனிதர்களை கொண்டு தகவல் சேகரிப்பது. பண்டையக் காலத்தில் இருந்து தற்காலம் வரை, உளவு பார்ப்பதற்கு அதிகம் நம்பியது மனிதர்களை தான். ஒற்றர்களை எதிரி நாட்டில் உடுருவவிட்டு தகவல் சேகரிப்பார்கள். அதே முறை இன்று கூட பின்பற்றப்படுகிறது. எதிரி நாட்டில் உடுருவில் அவர்கள் நாட்டு பிரஜைப் போல் வாழ்ந்து தகவல் சேகரித்து தனது நாட்டுக்கு அனுப்புவார்கள்.

ஒரு நாட்டின் துரோகிதான் உளவாளிக்கு சிறந்த பணியாளன். அவன் தான் அந்த நாட்டைப் பற்றி அதிகம் தகவல் கொடுப்பவன். அவனைப் போன்ற ஆட்களை விலைக்கு வாங்கி, அவனிடம் இருந்து தகவல் வாங்குவார்கள்.

தொழில்நுட்பம் வளர்ந்து விட்ட இக்காலக்கட்டத்தில், ஒரு நாட்டைப் பற்றிய தகவலை பலவிதத்தில் குறைந்த செலவில் பெற முடியும். இருந்தாலும், மனிதர்கள் மூலம் சேகரிப்பது அதிக பயனுள்ளதாக இருக்கும்.

மனிதர்கள் மூலம் வரும் தகவல்கள் ராவுக்கு 25 சதவீகிதம் உதவியாக இருந்தாலும், தங்களது நிதியை எண்பதியைந்து சதவீகிதத்தை மனித உளவு சக்திக்கு செலவு செய்ய எல்லா உளவு நிறுவனமும் தயாராக உள்ளது.

*SIGINT (Signal Intelligence)*

சிக்னல் கருவிகளை பயன்படுத்தி தகவல் திரட்டப்படுவதை சிங்னல் இன்டலிஜன்ஸ் என்று சொல்லுவார்கள். இதற்கு கீழ் COMINT (Communication Intelligence) மற்றும் ELINT (Electronic Intelligence) என்று இரண்டு வகை உண்டு.

COMINT

தொலைப்பேசியில் பேசுவதுவதை இடைமறித்து கேட்பது, எழுத்து மூலம் வரும் தகவலை கண்டறிவது போன்ற தகவல் சேகரிக்கப்படும். சேகரிக்கப்பட்ட தகவல் நாட்டு பாதுகாப்புக்கு எதிராக இருந்தால் பாதுகாப்பு படையினர்களிடம் தெரிவித்து தகுந்த நடவடிக்கை எடுப்பது இவர்களுடைய பொறுப்பு.

எங்கிருந்து தகவல் வருகிறது?

தகவல் பெறுபவர் யார்?

அவர் எங்கிருந்து தகவல் பெற்றுக் கொள்கிறார்?

எப்போது தகவல் அனுப்பட்டது?

தகவல் சந்தேக மொழியில் இருக்கிறதென்றால், அந்த சந்தேக மொழியை எப்படி உடைத்து சரியான தகவலை கண்டறிவது?

எல்லா தகவலும் ரேடியோவிலோ அல்லது தொலைப்பேசியிலோ பகிரப்படும் என்பதில்லை. பெரும்பாலும் தகவல் இதில் பகிரப்படுவதால், உளவுத்துறை இதை கண்காணிப்பதில் அதிக கவன் செலுத்துகிறது.

ELINT

மின்னணுவியல் மூலம் தகவல் சேகரிப்பது. போர்காலங்களில் மிகவும் உதவக் கூடிய தகவல்சேகரிப்பு முறை என்று சொல்லலாம். போர்காலத்தில் ஒயர்லெஸ் அல்லது ரேடியோ மூலம் தகவல் அனுப்பி

சொல்லுவதை விட, எலக்ட்ரானிக் மூலம் செய்கையில் தகவல் அனுப்புவார்கள்.

எதிரி நாட்டு விமானங்கள் நம்மை நோக்கி வரும் போது, ராடர் கருவி மூலம் விமானங்களைவருவதை தெரிந்துக் கொள்ளலாம். இதே தொழில்நுட்பத்தை கடலோறப்பகுதிகளிலும் பின்பற்றபடுகிறது. கடல் பகுதியில் எதிரி நாட்டு கப்பல் நம்மை உளவு பார்க்கிறதா, நமது எல்லை புறம் கடக்கிறதா போன்ற தகவலை இதன் மூலம் கண்டறிவார்கள். இரண்டாம் உலகப்போர் ELINT தகவல் சேகரிக்கும் முறை அதிகம் பயன்படுத்தப்பட்டது என்பது குறிப்பிட தக்கது.

FININT (Financial Intelligence)

ஒரு நாட்டை பொருளாதார ரிதியாக வீழ்த்த, முக்கிய பகுதியில் வெடிகுண்டு வைத்து தகர்க்க வேண்டும் என்பதில்லை. கள்ள நோட்டுகளை புழக்கத்தில் விட்டு ஒரு நாட்டின் பொருளாதாரத்தை வீழ்த்தலாம்.

ஒரு நாட்டின் பணத்தை கள்ளத்தனமாக சந்தையில் விடும் போது, அந்த நாட்டின் பணத்தின் மதிப்பு உலகளவில் சரிவை சந்திக்கும். அதனால், அந்த நாட்டின் பொருளாதாரத்தை பாதிக்கலாம். கள்ள நோட்டுகள் முலம் சம்பாதிப்பவர்கள், அந்த பணத்தை நாட்டின் அழிவுக்கு பயன்படுத்தலாம். அதனால், புலனாய்வு துறை கள்ள நோட்டு விவகாரத்தில் மிக தீவிர காண்காணிப்பதில் அக்கரை செலுத்துகிறது.

OSINT (Open Source Intelligence)

திறந்த வெளி தகவல்கள் என்று இதை சொல்வார்கள். இணையம், டி.வி நிகழ்ச்சி, செய்தித்தாள், பொது பதிவேட்டு போன்றவற்றில் தகவல் சேகரிப்பது.

நாட்டில் மதக்கலவரத்தை உருவாக்க நினைப்பவர்கள், குறிப்பிட்ட மதத்தை தாக்கி விளம்பரமோ, செய்தியோ வெளியிடும் போது நாட்டின்

மத கலவரம் உருவாகலாம். நாட்டின் பாதுகாப்பு, அமைதியை வேண்டி உளவுத்துறை வெளிவரும் எல்லா ஊடக செய்திகளையும் கண்காணித்து வருகிறது. அதன் மூலம் தகவல் சேகரித்து, நாட்டின் பாதுகாப்புக்கு எதிராக நடப்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்.

CYBINT (Cyber Intelligence)

இன்று இணையத்தில் எப்படி பட்ட தகவல்களையும் பரப்பலாம். ஒருவரைப் பற்றி தவறான தகவல், காழ்புணர்ச்சியில் பேசுவது, தேசிய பாதுகாப்பு தகவல் என்று எல்லாம் இணையத்தில் கிடைக்கிறது. எதிரி நாடுகள் நமக்கு எதிராக என்ன செய்கிறார்கள் என்பதை உட்கார்ந்த இடத்தில் இருந்தே கணிக்க இணையம் மிகமான தகவல் திரட்டியாக இருக்கிறது.

துருக்கி நாட்டில் யூ டியுப், பெஸ்புக் மூலம் நடந்த புரட்சியே அதற்கு சாட்சி. சீனாவில் facebook, twitter போன்ற சமூகதளங்களுக்கு தடைவிதிக்கப்பட்டுள்ளது. இணையத்தின் வளர்ச்சியும், சமூகதளங்களின் எழுச்சியை கண்ட இந்தியா இது போன்ற சமூக தளங்களை தீவிரமாக கண்காணித்து வருகிறார்கள்.

GEOINT (Geospatial Intelligence)

எதிரி நாட்டுக்கு சென்று தான் தகவல் சேகரிக்க வேண்டும் என்பதில்லை. செயற்கைக் கோள்மூலம் எதிரி நாட்டு என்ன என்ன செய்கிறது என்பதை கண்காணிக்கலாம்.

இந்திய எல்லை பகுதிகளில் செயற்கை கோள் மூலம் தீவிரமாக கண்காணித்து வருகிறார்கள். பாகிஸ்தானோ அல்லது சீனாவோ தங்கள் படைகளையோ அல்லது எல்லை புரத்தில் இந்தியாவுக்கு எதிரான நடவடிக்கையில் ஈடுப்பட்டால், புகைப்படம் எடுத்து உடனே தகவல் அனுப்பப்படும்.

***

உளவு பார்க்க இத்தனை அமைப்புகள் இருக்கிறது. தகவல் சேகரிக்க பலர் ஈடுப்பட்டு வருகிறார்கள். பாதுகாப்பு பணியில் ஈடுப்பட பலர் இருக்கிறார்கள். அப்படி இருந்தும் எப்படி தீவிரவாத தாக்குதல் நடக்கிறது என்று நீங்கள் கேட்கலாம்.

உளவு உலகின் தலைவன், கடவுள் என்று கர்வத்தோடு பீற்றிக் கொண்ட அமெரிக்காவின் சி.ஐ.ஏவுக்கே 9/11 சம்பவத்தில் சறுக்கல் ஏற்பட்டது.

இங்கு உளவுத்துறை புத்திசாலி, தீவிரவாதி முட்டாளாக இருந்தால் எந்த திட்டத்தையும் சுலபமாக முறியடித்து விடலாம். இரண்டு பக்கமும் அதிக புத்திசாலிகள் இருக்கிறார்கள். யார் அதிக புத்திசாலி என்று வைத்தே தீவிரவாதிகளின் வெற்றி, அதை முறியடிக்க அதிகாரிகளின் வெற்றியும் இருக்கிறது.

*****

# 4. சொந்த விமானத்தையே எரித்த இந்தியா

கங்காவை கடத்த வேண்டும் என்பது தான் குரேஷி, அஷ்ரபின் திட்டமாக இருந்தது. இரண்டு பேர் ஒரு பெண்ணை கடத்தப் போவது ரா அத்தியாயத்தில் பெரிய விஷயமாக இருக்காது.

ஒரு நாட்டில் பெண்கள் கடத்துப்படுவதும், பாலியல் தொல்லையில் அவதைப்படுவதும் அன்றாடம் நடக்கும் சம்பவமாக இருக்கிறது. எத்தனையோ 'கங்கா' க்கள் ஏதாவது ஒரு பகுதியில் கடத்தப்படுகிறார்கள். ஆனால், கங்கா என்பது பெண் அல்ல. விமானம்.

விமானக் கடத்தல் என்பது ஒரு பெண்ணை கடத்துவது போல் சுலபமான விஷயம் இல்லை. ஒரு நாட்டின் பாதுகாப்பு சம்மந்தப்பட்ட விஷயம். எங்காவது விமானம் கடத்தப்பட்டால், அந்த நாடு உலக ஊடகங்களுக்கு பதில் சொல்ல வேண்டி இருக்கும். அதில் பயணம் செய்த வெளிநாட்டு பயணிகளின் உயிருக்கு உத்தரவாதம் தர வேண்டியது இருக்கும். கடத்தப்பட்ட விமானம் மீட்கும் வரை, அந்த நாட்டின் மானம் செய்திதாளில் பறந்துக் கொண்டு இருக்கும்.

30 ஜனவரி, 1970ல் குரேஷியும், அஷ்ரபும் 'கங்கா' என்கிற இந்திய போக்கர் 27 விமானத்தை எந்த பிசுரு இல்லாமல் கடத்தினர். கடத்தப்பட்ட விமானம் பாகிஸ்தானில் இருக்கும் லாகூரில் தரையிறக்கினர். இந்தியா பாகிஸ்தான் ஐ.எஸ்.ஐக்கு விமானக்கடத்த சதி திட்டத்தில் பங்கு இருப்பதாக கூறியது.

பாகிஸ்தான் தனக்கு இந்த கடத்தலும் எந்த சம்மந்தமும் இல்லை. JKLFயை சேர்ந்தவர்கள் கடத்தியிருக்கலாம் என்று கருதியது. கடத்தியவர்கள் தங்கள் நிபந்தனைகள் எதுவும் சொல்லவில்லை. இரண்டு நாள் பரப்பரப்பாக இருந்த விமான கடத்தல் பிப்ரவரி 1ல் அன்று முடிவுக்கு வந்தது. கடத்தப்பட்ட விமானம் கொளுத்தப்பட்டு தீக்கு இறையானது.

இந்திய விமானம் கடத்தப்பட்டு எரிக்கப்பட்டுயிருக்கிறது. அதுவும் பாகிஸ்தானில். இந்தியா எப்படி பதில் அடிக் கொடுக்க போகிறது யோசித்து மண்டை உடைத்துக் கொண்டு இருக்க, பிரதமர் இந்திரா காந்தி இந்திய எல்லை மேல் பாகிஸ்தான் விமானங்கள் பறக்க தடை விதித்தார். மீறி பறந்தால் சுட்டு விழ்த்தப்படும் என்று எச்சரித்தார்.

மீண்டும் ஒரு யுத்தம் வரும் என்று எதிர்பார்த்தவர்களுக்கு.... 'இவ்வளவு தானா உங்க டக்கு' என்று சொல்லும் அளவிற்கு இந்திரா காந்தியின் அறிவிப்பு இருந்தது. கிழக்கு பாகிஸ்தானில் பிரச்சனை நடக்கும் சமயத்தில் இந்திரா காந்தி இந்த அறிவிப்பு எரிச்சலை வரவழைத்தது.

கடத்திய இரண்டு பேரை கைது செய்து பாகிஸ்தான் விசாரித்ததில், இரண்டு பேரும் காஷ்மீர் போராளிகள் அல்ல 'ரா' உளவாளிகள் என்று தெரிவந்தது. குரேஷி இந்திய காவல்துறையில் பயணியாற்றியவர். இந்திரா காந்தி லேசுப்பட்ட அம்மையார் அல்ல என்பது மட்டும் ஐ.எஸ்.ஐக்கு புரிந்தது.

பாகிஸ்தான் இந்தியாவின் ரா இக்கடத்தல் நாடகத்தை நடத்தியதாக கூற, இந்தியா இதை மறுத்தது.

கிழக்கு பாகிஸ்தானுடன் பிரச்சனை தலைக்கு மேல் இருக்கும் சமயத்தில் ராவின் இந்த சதி திட்டம் மேலும் அவர்களுக்கு பிரச்சனைக்குள்ளாகியது. அதாவது, மேற்கு பாகிஸ்தான் தனது இராணுவத்தை கிழக்கு பாகிஸ்தானுக்கு அனுப்புவதாக இருந்தால் ஆப்கான், சீனா என்று சுற்றிக் கொண்டு செல்ல வேண்டும். இல்லையென்றால் இலங்கை வழியாக செல்ல வேண்டும்.

இந்தியா கிழக்கு பாகிஸ்தான் பகுதி உதவுவதற்காக ஏன் தங்களது விமானத்தை கடத்தி அவர்களே எரிக்க வேண்டும் கேள்வி எழுந்தது. இந்தியாவுக்கு பிரச்சனை தருபவர்கள் யாராக இருந்தாலும் ஐ.எஸ்.ஐ எப்படி வழி காட்டி உதவுமோ, பாகிஸ்தானுக்கு பிரச்சனை தருபவர்கள்

யாராக இருந்தாலும் ரா உதவும். அந்த வகையில் இந்தியா வங்க மொழி பேசும் கிழக்கு பாகிஸ்தானுக்கு உதவ தீர்மானித்திருந்தது.

அது மட்டுமில்லாமல், கங்கா விமானத்தின் சேவையை இந்தியா நிறுத்தி பல வருடங்கள் ஆனது. யாரும் பயன்படுத்தாமல் இருந்த விமானத்தை, கடத்தப்பட்ட சிறிது நாட்கள் முன்பு தான், மீண்டும் கங்கா விமான சேவையைப் பயன்படுத்தப் போவதாக அறிவித்தார்கள்.

கிழக்கு பாகிஸ்தானுடன் மேற்கு பாகிஸ்தானுக்கு இருக்கும் பிரச்சனையின் வரலாற்று பின்னனியை கொஞ்சம் பார்த்தால், ராவின் திட்டம் எந்த அளவுக்கு துள்ளியமானது என்பது புரியும். இதில், இந்திரா காந்தி அரசியல் தொலை நோக்கு பார்வை பாராட்டாமல் இருக்க முடியாது.

வெள்ளையன் இந்தியாவை விட்டு சென்ற பொது இந்தியா – பாகிஸ்தான் என்று இரண்டு நாட்டை உருவாக்கினான். ஆனால், இந்தியாவில் இருந்த ஒற்றுமை பாகிஸ்தானில் இல்லை. கிழக்கு பாகிஸ்தானில் பெங்கால மொழியும், மேற்கு பாகிஸ்தானில் உருது மொழியும் பேசுபவர்கள். மதத்தால் முஸ்லிம்களாக இருந்தாலும், மொழியால் வேறுப்பட்டு இருந்தது அவர்களின் பிரிவுக்கு ஒரு காரணமாக இருந்தது.

1948ல் மார்ச் மாதம், டாக்கா உள்ள கர்ஸான் மன்றத்தில் பட்டமளிப்பு விழாவில் பேசுவதற்காக, பாகிஸ்தானை நிறுவிய ஜின்னா அவர்கள் பேசும் போது, “பாகிஸ்தான் தேசிய மொழி உருது மட்டும் தான்” என்றார். அப்போது, “இல்லை… இல்லை” என்று எதிர்க்குரல் மக்கள் எழும்பினர். அன்றைய தேதியில் பாகிஸ்தானில் உருது பேசுபவர்களை விட வங்காள மொழி பேசுபவர்கள் தான் அதிகம்.

1949ல் மௌலான பஷானி, கிழக்கு பாகிஸ்தானில் “அவாமி முஸ்லிம் லீக்” என்ற கட்சியை தொடங்கி, ‘வங்காளி மொழி முன்நிறுத்தி’ ஷேக் முஜிபுர் ரஹ்மான் என்பவர் முதல் முதலாக கூட்டம் நடத்தினார்.

அரசியல் ரீதியாக மேற்கு பாகிஸ்தான் கிழக்கு பாகிஸ்தானைக் காட்டிலும் பலன்களை அனுபவித்து வந்தது. மதத்தை காட்டிலும் கிழக்கு - மேற்கு பாகிஸ்தானில் உருது - வங்களாம் மொழி அவர்கள் பிரிவினைக்கு காரணமாக இருந்தது.

1971ம் ஆண்டு மார்ச் மாதத்தில், கிழக்கு பாகிஸ்தான் படையினரிடமிருந்து ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. டாக்காவில் விமானம் மூலம் படைகள் இறங்கத் தொடங்கின. முதல் குண்டு வெடித்தது.

கிழக்கு பாகிஸ்தான் படையில் பலர் கைது செய்யப்பட்டார்கள். மேற்கு பாகிஸ்தான் இராணுவம் தீவிரமான அடக்குமுறையில் இறங்கியது.

“முக்தி ஃபௌஜ்” என்ற பெயரில் 10,000 வங்க வீரர்கள் தாய் நாட்டைக் காக்கும் பணியில் இறங்கினார்கள். அவர்களுக்கு பயிற்சி அளிக்கும் பணியை ரா மேற்க்கொண்டது. ஆயுதங்களும் வழங்கியது. பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவ நிவாரப்பணிகளும் செய்தது.

முக்தி ஃபௌஜ் பாகிஸ்தானுக்கு எதிராக கிளர்ச்சியில் ஈடுப்படும் போது, மேற்கு பாகிஸ்தானில் இருந்த உதவி கிடைக்காமல் இருக்கவும், அப்படி கிடைக்க இருந்தாலும் காலதாமதமாக இருக்கவும் தான் இந்திய உளவுத்துறை ‘கங்கா’ விமான கடத்தல் திட்டத்தை போட்டது என்று கூறப்படுகிறது.

இந்தியாவை எதிர்க்காமல் கிழக்கு பாகிஸ்தானை கட்டுப்படுத்த முடியாது என்று பாகிஸ்தான் முடிவு செய்தது. விளைவு…. டிசம்பர் 3 அன்று, பாகிஸ்தான் இந்தியாவுக்கு எதிரான போரை அறிவித்தது, இந்திய எல்லைக்குள் விமான தாக்குதலை நிகழ்த்தியது. இந்தியாவில் அவசர நிலை பிரகடனம் செய்யப்பட்டது.

இந்த யுத்தத்தின் முடிவில் பாகிஸ்தான் தோல்வியுற்று, “பங்களாதேஷ்” என்ற தேசம் உருவானது நம் பள்ளிப்பாடங்களில் படித்தக் கதை.

பங்களாதேஷ் என்ற தேசம் உருவாகாமல் இருந்திருந்தால், இந்தியா மேற்கு – கிழக்கு பாகிஸ்தான் என்று இரண்டு பக்கம் எதிரிகளை சமாளிக்க வேண்டிய இருந்திருக்கும். இப்போது, வட கிழக்கு இந்திய பகுதியில் பாகிஸ்தான் உடுருவல் பிரச்சனை இல்லாமல் இருப்பதற்கு முக்கிய காரணம் கிழக்கு பாகிஸ்தானுக்கு உதவியது தான் காரணம். (ஆனால், இன்று அந்த பகுதியில் வேறு பிரச்சனைகள் சந்தித்துக் கொண்டு இருக்கிறோம்.)

'பங்களாதேஷ்' என்ற தேசம் உருவாக இந்தியா உதவி செய்தது என்று எல்லோருக்கும் தெரியும். ஆனால், இந்தியாவுக்கு 'உதவியாக ராவின் செயல்பாடு மிகவும் முக்கியமானது என்பது யாராலும் மறுக்க முடியாது.

***

இந்திய – பாகிஸ்தான் பிரிவினை விவாதத்தின் போது ஜின்னாவிடம் கேட்கப்பட்ட கேள்வி, "இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிந்து தனி தேசம் உருவானால், ஏதேனும் ஒரு முன்றாவது நாடு இந்தியாவுக்கு எதிராக போர் தொடுத்தால், பாகிஸ்தான் இராணுவம் என்ன செய்யும்?" என்று கேட்டனர்.

அதற்கு, ஜின்னா "எதிரிகளைத் தோற்கடிக்க, பாகிஸ்தான் வீரர்கள் இந்தியாவோடு கைகோர்த்து போரிடும்" என்றார். இன்றைய அரசியல் சூழ்நிலை இதற்கு நேர் எதிராக இருக்கிறது. உனக்கு இந்தியாவை பிடிக்காதா, அப்படி என்றால் எனக்கு நீ நண்பன் என்ற தத்துவத்தில் தான் பாகிஸ்தான் நடந்துக் கொள்கிறது.

பங்களாதேஷ் தேசத்தை உருவாக்க இந்தியா உதவியது என்பது சரித்திரம் மட்டுமல்ல. ரா என்ற உளவு நிறுவனத்தை உருவாக்கிய வெற்றி என்றும் கூட சொல்லலாம். காரணம், இந்தியா பாகிஸ்தான் என்ற ஒற்றை எதிரியை மட்டும் சமாளிக்கவில்லை. தெற்காசியப் பகுதியில் இந்தியா மாபெரும் சக்தியாக வளர்வதை அனுமதிக்கக்

கூடாது என்ற பார்வையில் இருக்கும் அமெரிக்கா மற்றும் சீனாவையும் சமாளிக்க வேண்டியதாக இருந்தது.

அமெரிக்க அதிபர் ரிச்சர்ட் நிக்ஸனுக்கும், சீனா அதிபர் மா சே துங் இடையிலான ரகசிய உறவு அப்போது தான் உதயமானது. இந்த தொடர்புகளுக்கு பாகிஸ்தான் இராணுவ ஆட்சியாளர்களும் உதவினார்கள். இந்திய வடகிழக்கு பகுதியில் கலவரத்தை உருவாக்கி இந்திய இராணுவத்தின் கவனத்தை திசை திருப்ப சீனா உதவியது. கிழக்கு பாகிஸ்தானில் இந்தியா வன்முறையை தூண்டிவிடுகிறது என்று சர்வதேச அளவில் எதிர்ப்பலைகளும் அமெரிக்கா பரப்பியது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் இந்தியா வெற்றிப்பெற்றுயிருக்கிறது.

ஐ.நா சபையில் இந்தியா கிழக்கு பாகிஸ்தானில் வன்முறையை தூண்டிவிடுவதாக அமெரிக்க, சீனா தீர்மானம் கொண்டு வந்தப் போது ரஷ்யா தனது “வீட்டோ” அதிகாரத்தை பயன்படுத்தி அதை முறியடித்து இந்தியாவுக்கு உதவியது. இதனால், அமெரிக்கா இந்தியாவை ரஷ்யாவின் நட்பு தேசமாக பார்த்ததோடு இல்லாமல், இந்தியாவை பற்றின ரகசிய தகவல்களை சேகரிக்க தனது உளவுப்பிரிவையும் பயன்படுத்தியது.

இந்தியாவுக்கு எதிராக விமர்சனம் செய்பவர்கள் ஒன்றை தெளிவாக புரிந்துக் கொள்ள வேண்டும். எந்த உளவு நிறுவனம் நினைத்தாலும் ஒரு தேசத்தை உருவாக்கவோ, அழிக்கவோ முடியாது. தகவலை சேகரிக்க முடியும். அதை செயல்படுத்த வழிகள் வகுக்க முடியும். செயல்படுத்த ரகசியமாக முறைகளை கையாள முடியும். ரா உளவுத்துறையும் அதை தான் செய்தது.

1971ல் மேற்கு பாகிஸ்தான் எதிராக யுத்தத்தில் ரா கிழக்கு பாகிஸ்தானுக்கு செய்த உதவிகள்:

1. அரசுக்கும் இராணுவத்திற்கு தகவல்களை சரியான நேரத்தில் கொடுத்தது.

2. வங்கதேசப் போராட்ட வீரர்களுக்கு ரகசியமான பயிற்சி முகாமில் பயிற்சி அளித்தது.

3. மேற்கு பாகிஸ்தானில் பணியாற்றிய வங்க மொழி பேசும் அரசு ஊழியர்களை தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு வங்கதேசப் போராட்ட வீரர்களுக்கு உதவுவதாக கூறி ரகசிய தகவல் பெற்றது.

4. கிழக்கு பாகிஸ்தானில் கொல்லப்படும் வங்காளிகள், இந்தியாவுக்கு அகதிகளாக வெளியேறுபவர்கள் போன்றோர்களை ஊடகத்திற்கு முன் நின்றுத்தி மேற்கு பாகிஸ்தான் எதிராக பிரச்சாரம் மேற்கொண்டது.

அதுமட்டுமில்லாமல், மேற்கு – கிழக்கு பாகிஸ்தானுக்கும் இடையான ரகசிய தகவல் பரிமாற்றத்தை இந்தியாவின் மானிட்டரிங் பிரிவு வெகு சிறப்பாக இடைமறித்து கேட்டது. பாகிஸ்தான் ராணுவத்தின் தொலைத்தொடர்பில் ஏகப்பட்ட பாதுகாப்பு குறைபாடுகள் இருந்ததால், அவர்கள் பயன்படுத்தும் ரகசிய குறியீடுகள் சர்வ சாதாரணமாக உடைக்கப்பட்டன. இன்னும் சில தகவல்கள் ராவை தேடி வந்துக் கொடுத்தார்கள். தங்களிடம் இருக்கும் தகவலை இந்திய உளவுத்துறைக்கு கொடுப்பது தங்கள் கடமை என்று வங்க தேச மக்கள் முன்வந்தார்கள்.

பாகிஸ்தானுடன் நடந்த யுத்தத்தில் கிடைத்த வெற்றிக்கு கிழக்கு பாகிஸ்தான் மக்கள் பங்கு முக்கிய காரணம் என்பதை மறந்துவிடக் கூடாது. வங்கதேசத்திற்கு விடுதலையை இந்தியா வாங்கித் தந்தது என்று சொல்லுவது தவறு. இந்தியா உதவியது என்று தான் சொல்ல வேண்டும். சுதந்திரமாக இருக்கும் ஆசையும், உறுதியும் கிழக்கு பாகிஸ்தான் மக்களுக்கு இல்லாவிட்டால் அவர்களால் இதை அடைந்திருக்க முடியாது.

ஒரு நாட்டை வெல்ல வேண்டும் என்றால் அந்த நாட்டை பலவீனப்படுத்த வேண்டும். அந்த நாட்டில் பீதியை ஏற்படுத்த வேண்டும். மக்களை ஒரு வித பயத்தில் உருவாக்கி, ஆட்சியாளர்கள் மீது

அதிருப்தி உருவாக்க வேண்டும். பிறகு, அந்த நாட்டு மக்களை நமக்கு ஆதரவாக பயன்படுத்திக் கொள்ள வேண்டும். எல்லா உளவு நிறுவனங்கள் இப்படித் தான் எதிரி நாட்டை வீழ்த்த என்பது தான் நிழல் அரசியல்.

ஆனால், பங்களாதேஷ் விஷயத்தில் ரா அப்படி எதுவும் செய்யவில்லை. இந்தியாவுக்கு தானாய் வந்த நெல்லிக்கனி என்பதை சொல்ல வேண்டும்.

1968ல் உருவான ரா, இரண்டரை வருடத்தில் ரகசிய நடவடிக்கைகளில் திறமைப் பெற்றுவது என்பது குறைவான காலம். இருந்தும் ரா அமைப்பு மிக சிறப்பாக செயல்ப்பட்டது.

அமெரிக்கா, சீனா போன்ற பெரிய நாடுகளின் மறைமுக பகையையும், பாகிஸ்தான் என்ற நேரடி எதிரியை சமாளித்து தான் இந்திய வங்க தேசத்திற்கான போரில் வெற்றிப்பெற்றது.

'பங்களாதேஷ்' என்ற தேசத்தை உருவாக்கியதோடு பிரச்சனை முடிந்ததுவிட வில்லை. அமெரிக்காவின் நிக்ஸன் நிர்வாகத்தின் நல்லாசியுடன் யாஹ்யா இந்தியாவை சிதறடிக்கும் ரகசிய முயற்சியில் இறங்கியது. அதற்கு தோதாக பஞ்சாபில் உள்ள சீக்கியர்களின் '**காலிஸ்தான்**' என்ற தனி தேசக் கோரிக்கை இருந்தது.

*****

# 5. வெற்றி மேல் வெற்றி

பள்ளி மாணவர்களிடம் இந்தியாவில் எத்தனை மாநிலங்கள் என்று கேள்வி கேட்டால் இருபதி எட்டு விடையளிப்பார்கள். ஆனால், தொன்னூகளில் பள்ளிப் பாட புத்தகத்தில் இந்தியாவின் எத்தனை மாநிலம் என்ற கேள்விக்கு இருபத்தி இரண்டு பதிலாக இருந்தது. எத்தனையோ அரசியல் காரணமாக ஒன்றாக இருந்த மாநிலங்கள் பிரிக்கப்பட்டு இருக்கிறது, மாநிலமாக அங்கியகரிக்கப்பட்டுயிருக்கிறது. ஆனால், ஒரு நாட்டையே மாநிலமாக இந்தியாவுக்குள் இணைக்கப்பட்டது. அந்த தேசத்தின் பெயர் சிக்கிம்!!

இமயமலை கிழக்கு பகுதியில் இருக்கும் சிறு தேசம். 1950ல் இந்தியாவின் பாதுக்காவலில் இருக்கும் தனி தேசம். அதாவது, அவர்கள் சுதந்திரமானவர்கள். ஆனால், அவர்களுக்கு ஆபத்து என்று வந்தால் பாதுகாப்புக்கு இந்தியா உதவிக்கு செல்லும்.

சிக்கிமை சுற்றி திபேத், நேபால், பூட்டான் நாடுகளும், வங்க மாநிலம் அமைந்துள்ளது. 1953 முதல் சிக்கிம் கோகயல் மன்னராட்சி குடும்பம் ஆட்சி செய்து வந்தது. தேர்தல் இல்லாமல் அவர்களது குடும்பம் இருபது வருடங்கள் மேல் ஆட்சி செய்து வந்தனர்.

இந்தியாவுக்கு ஆதரவான எவ்வளவு நாள் மன்னர் குடும்பம் இருக்கும் என்று சொல்ல முடியாது. மிக பெரிய ஜனநாய நாடான இந்தியாவின் பக்கத்தில் மன்னராட்சி இருப்பது இந்தியாவுக்கு உருத்தியது. பக்கத்தில் இருக்கும் சீனா, திபெத்தை ஆக்கிரமித்தது போல் சிக்கிம்மை ஆக்கிரமித்தால் என்ன செய்வது? அதனால், இந்தியாவுக்கு ஆதரவான ஒரு அரசை உருவாக்கும் பொறுப்பை 1972ல் ராவிடம் ஒப்படைக்கப்பட்டது. அதற்கான, திட்டங்கள் வியூகங்கள் அவர்களும் அமைத்தனர்.

மக்களோடு மக்களாக இந்தியாவின் ஜனநாயக கொள்கைகள் பற்றியும், மன்னராட்சி சுதந்திர அனுபவிக்க முடியாது என்பதைப்பற்றியும்

கொஞ்சம் கொஞ்சமாக புரிய வைத்தனர்.

மூன்று ஆண்டுகள் கடந்த பிறகு, சிக்கிமின் பிரதமர் இந்தியாவுடன் இணைவதற்கான விருப்பத்தை தெரிவித்தார். ஆனால், மன்னர் கோகயல் ஏற்றுக் கொள்ளவதாக இல்லை. எப்ரல் 1975, இந்திய இராணுவம் மன்னர் கோட்டைக்குள் நுழைந்து காவலர்களின் ஆயுதங்களை பரிமுதல் செய்தது. மக்கள் ஓட்டெடுப்பு நடத்தி, முடிவு எடுக்கப்படும் என்று முடிவானது.

மே, 1975ல் சிக்கிமின் இந்தியாவுடன் சேர்வதற்கான ஓட்டெடுப்பு நடைத்தினர். அதில், 97.5% ஓட்டுக்கள் பெற்று சிக்கிம் இந்தியாவுடன் இருப்பத்தி இரண்டாவது மாநிலமாக சேர்ந்தது. ராவால் இந்தியாவுக்கு கிடைத்த வெற்றி என்று தான் சொல்ல வேண்டும்.

இந்த வெற்றிக்கு முன்பு ரா இன்னொரு சாதனை நிகழ்த்தியிருக்கிறார்கள். அந்த வெற்றியின் மூலம் உலகமே இந்தியாவைப் பார்த்து பயந்தது. குறிப்பாக பாகிஸ்தான் அதிகம் பயந்தது.

அது, இந்தியாவின் அணு ஆயுத சோதனை.

***

உள்ளூர் பழக்கதில் ஒரு பழமொழி சொல்லுவார்கள் "உள்ளூர குப்பை கொட்டாதவன் வெளியூரில பொய் என்ன பண்ணப் போறான்" என்று. இதையே மாற்றி சொல்லிப் பார்ப்போம். "வெளியூர்ல குப்பை கொட்டுனவன் உள்ளூர நல்ல குப்ப கொட்டுவான்"

வெளி நாடுகளில் உளவுப் பார்த்து தகவல் திரட்டி வந்து ரா அமைப்பு இந்தியாவுக்குள் மிக பெரிய பொருப்பு ஒன்று கொடுக்கப்பட்டது. அதுவும் இந்தியாவுக்குள் வேலை செய்யும் ஐ.பியை நம்பாமல், வெளியுறவுகளை பார்க்கும் ராவிடம் ஒப்படைத்தனர்.

வெளிநாட்டு கிரவுண்டிலே பட்டைய கிளப்பி வரும் ரா, ஹோம் கிரவுண்டில் கலக்க சொன்னால் சும்மா விட்டுவார்கள். பட்டைய கிளப்புவார்கள் என்று நம்பிக்கை. அதுமட்டுமில்லாமல், அவர்களிடம் ஒப்படைத்த வேலை கொஞ்சம் கசிந்தாலும் சர்வதேச கண்டனத்தை எதிர்க் கொள்ள வேண்டியது இருக்கும். அமெரிக்கா தூண்டிவிட்டு பாகிஸ்தான் சண்டைக்கு வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அதனால், உள்ளூர் ஐ.பியிடம் கொடுக்காமல், ராவிடம் அந்த பெரிய பொருப்பை ஒப்படைத்தனர். அப்படி, ராவிடம் கொடுக்கப்பட்ட வேலை 'சிரிக்கும் புத்தர்' பற்றின தகவலை பாதுக்காக்க வேண்டும்.

சிரிக்கும் புத்தர் தகவலை பாதுகாத்து என்ன செய்யப் போகிறோம். அவர் பாட்டுக்கு தாராளமாக சிரித்துவிட்டு போகட்டுமே என்று நினைக்கும் அளவிற்கு சாதான வேலையில்லை. சிரிக்கும் புத்தர் என்று சொல்லப்படும் அணு ஆயுத சோதனை. கொஞ்சம் கூட தகவல் வெளியே போகாமல் ஜாக்கிரதையாக செய்ய வேண்டிய வேலை. எப்பவும் பதட்டம் நிறைந்த வேலை. அதனால், தான் பெயரிலாவது சிரிப்பு இருக்கட்டும் என்று 'சிரிக்கும் புத்தர்' என்று வைத்துவிட்டார்கள்.

1967ல் முதல் 1974 வரை கிட்டதட்ட ஆயிரத்துக்கு மேற்பட்ட ஊழியர்கள் அணு ஆயுத கட்டமைப்பு பணியில் ஈடுப்பட்டனர். 75 மேற்பட்ட விஞ்ஞானிகள், பொறியியலாளர்கள் வடிவமைப்பு வேலை செய்தனர்.

அணு ஆயுத சோதனையில் சோதனையில் ஈடுப்பட்டவர்களை தவிர மூன்று வெளி நபர்களுக்கு மட்டுமே தெரியும். ஒருவர் பிரதமர் இந்திரா காந்தி. மற்ற இரண்டு பேர் அவரது ஆலோசகரான பி.என்.ஹன்கர் மற்று டி.பி.தர். பாதுகாப்புத் துறை அமைச்சருக்கூட தெரியாமல் ரகசியமாக தீட்டப்பட்டு அணு ஆயுத சோதனை நடத்த திட்டமிட்டனர்.

நல்ல சுப முகூர்த்தத்த தினம் பார்த்து, மே 18 1974 என்று அணு ஆயுத சோதனை நடத்த தேதி குறித்தனர். பிரதமர் இந்திரா காந்தி முன்நிலையில் அணு ஆயுத சோதனை வெற்றிகரமாக நடத்தினர். 4 மணி நேரத்திற்கு பிறகு அதைப் பற்றின அறிவிப்பை வெளியிட்டனர்.

அடுத்த நாள் எல்லா செய்தித்தாள்களிலும் 'பொக்கரான்' அணு சோதனை தான் தலைப்பு செய்தி!!!

உலக நாடுகள் அலறின. 'அமைதி புறா ஏந்தி வந்த நேருவின் மகள், அணு ஆயுதம் சோதனை நடத்தினாரா!' என்று பலர் வாய் பிளந்தனர். அமெரிக்கா, சீனா தனது கண்டன குரலை எழுப்பின. முதலில் வாழ்த்து அனுப்பிய பிரான்ஸ், மற்ற நாடுகளின் எதிர்ப்பை பார்த்து தனது வாழ்த்தை திரும்ப பெற்றுக் கொண்டது.

ஹிரோஷிமா, நாகசாக்கி அணு ஆயுத அழிவுக்கு பிறகு உலகளவில் அணு ஆயுத சோதனை நடத்த பல நிபந்தனைகள் கட்டுப்பாடுகள் இருந்தன. ஆனால், ரஷ்யா அதை உடைத்து வெற்றிக்கரமாக அணு ஆயுத சோதனை நடத்தியது. இப்போது இந்தியா அணு ஆயுத சோதனையில் வெற்றிப் பெற்று 6வது அணு ஆயுத நாடாக இந்தியா உயர்ந்தது. அமெரிக்கவின் முகம் எப்படி இருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை.

அணு ஆயுதம் சோதனை நடத்திய எல்லா நாடுகள் சொல்லுவது போலவே இந்தியாவும் "சமாதானத்துக்காகவே அணுசக்தியைப் பயன்படுத்துவோம்" என்றது. பங்களாதேஷ் நாடு உருவாக்கியதில் ஆசியளவில் இருந்த இந்திரா காந்தியின் புகழ், பொக்கரான் அணு ஆயுத சோதனைக்கு பிறகு உலகளவில் பேசப்பட்டார்.

எல்லோரையும் விட இந்தியாவின் அணு ஆயுத சோதனையில் பெரிய அதிர்க்குள்ளானது பாகிஸ்தான் தான். பங்களாதேஷ் யுத்தத்தில் அடிப்பட்டு பதுங்கி இருந்து தாக்கலாம் என்று இருந்தவர்கள், தங்கள் எல்லா திட்டங்களை கொஞ்ச நாட்களுக்கு நிருத்தி வைத்தனர். அவர்களும் அணு ஆயுத சோதனையில் இறங்கினர். இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கு அடுத்த யுத்தம் (கார்கில் யுத்தம்) இருபத்தி மூன்று வருடங்களானது.

பங்களாதேஷ் யுத்தத்திற்கு பிறகு போக்கிரான் அணு ஆயுத சோதனை ரகசியத்தை பாதுகாத்து வெற்றிக் கண்டதின் மூலம் ரா இந்தியாவின் முக்கிய சக்தியாக மாறியது. இந்த வெற்றிகளில் சோர்ந்து போல் அடுத்த வெற்றியான சிக்கிம்மை இந்தியாவிலும் இணைக்க ரா அமைப்பு உதவியது.

ரா இந்தியாவின் முக்கிய சக்தியாக வந்துக் கொண்டு இருக்கும் வேளையில், அரசியல் மாற்றங்கள், காழ்ப்புணர்ச்சியும் ராவை பாதிக்க தொடங்கியது. அந்த காலக்கட்டத்தை 'ராவின் இருண்ட காலம்' என்று சொல்லலாம். அதற்கு காரணம் மொராஜி தேசாய்.

*****

# 6. அது ஒரு கவலைக்காலம்

முந்தைய ஆட்சியில் இருக்கும் அதிகாரிகள் மாற்றப்படுவதும், தண்டிக்கப்படுவதும், விசாரிக்கப்படுவதும் இன்றைய மாநில அரசியலில் நடந்துக் கொண்டு இருக்கிறது. ஆனால், இதற்கு முன் மாதிரியாக தேசிய அரசியல் விஷயங்களிலும் நடந்திருக்கிறது. இதில், 'ரா' மட்டும் எப்படி தப்பிக்க முடியும்.

இந்திரா காந்தி தேர்தல் வெற்றி செல்லாது கோர்ட்டில் இருந்து தீர்ப்பு. இதற்கு முன் நடந்திராத நிகழ்ச்சி. இந்திரா காந்தி பதவி விலகுவார், ராஜினாமா செய்தி வரும் என்று எதிர்பார்த்தவர்களுக்கு "இந்தியாவில் நெருக்கடி நிலை" என்ற செய்தி தான் வந்தது. அதற்கு இந்திரா அம்மையார் கூறிய காரணம், "உளவுத்துறை மூலம் உள்நாட்டு கலவரம் வெடிக்கக் கூடிய சூழ்நிலை உருவாகியுள்ளது. அதனால், நெருக்கடி நிலை செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம்" என்றார்.

உண்மையில், உளவுத்துறை அப்படி ஒரு தகவலை கொடுத்த ஆதராத்தை கேட்க யாரும் துணிவில்லை. சொல்பவர் பிரதமர் இந்திரா காந்தி. ஜனாதிபதி விளக்கங்களை கேட்டு கையெழுத்திட்டார்.

இந்திரா காந்திக்கு எதிராக செயல்படுபவர்கள் சிறையடைக்கப்பட்டனர். முதுபெரும் தலைவரான ஜெயப்பிரகாஷ்யை நள்ளிரவில் கைது செய்யப்பட்டார். மொரார்ஜி தேசாய், வாஜ்பாய், ஜேர்ஜ் பெர்னாண்டஸ் என்று கைது பட்டியல் நீண்டுக் கொண்டே இருந்தது. பத்திரிகைகளுக்கு தணிக்கை முறைகள் கொண்டு வரப்பட்டன.

வான் அளவில் வேகமாக வளர்ந்த இந்திரா காந்தியின் பெயர், நெருக்கடிக் காலத்தில் அதாளம் வரை சென்றது.

பல இடையுறுகளுக்கு பிறகு, 1977ல் இந்தியாவில் தேர்தல் நடந்தது. காங்கிரஸ் கட்சி தோல்வியடைந்து, ஜனதா கட்சி வெற்றிப்பெற்றது. இந்தியாவில் புதிய பிரதமராக மொரார்ஜி தேசாய் பதவியேற்றார்.

வெளியுற அமைச்சராக வாஜ்பாய்யும், உள்துறை அமைச்சராக சரண்சிங்கும் பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.

நெருக்கடி நிலையின் போது தன் அரசியல் எதிரிகளைத் தொந்தரவு செய்ய இந்திரா காந்தி ரா, ஐபி, சிபஐ யை பயன்படுத்தியதாக விமர்சனம் எழுந்தது. எதிர்கட்சிகளின் விமர்சனத்தை ஒடுக்க சஞ்சய் காந்தி இந்த அமைப்புகளை தவறாக பயன்படுத்தினார் என்ற குற்றம் சாட்டினர். அதனால், புதிய அரசு அமைந்ததும் இந்த அமைப்புகளின் தலைவர்கள் அனைவரும் மாற்றப்பட்டனர்.

அப்போது, ராவின் தலைவராக இருந்த கவ் இந்திரா காந்தி நல்ல உறவு இருந்ததால் ரா தலைவர் பதவியில் இருந்து நீக்கப்பட்டார். புதிய தலைவராக கே.சங்கரன் நாயர் நியமிக்கப்பட்டார். ஆனால், அவர் மூன்று மாதத்தில் தனது பதவியை ராஜினாமா செய்தார்.

“சங்கரன் நாயர் பதவி விலகியது ரா அதிகாரிகளுக்கு மிகுந்த வருத்தம். எந்த அரசியல் சார்பு இல்லாதவர். நெருக்கடி காலத்தில், புதிய டிஜிபியாக பதவி ஏற்கும் தன்னை வந்து சந்திக்கும் படி சஞ்சய் காந்தி சொல்லியனுப்பினார். சங்கரன் பார்க்க மறுக்க, டிஜிபியாக தேர்வு செய்யப்பட்டது ரத்து செய்தனர்.” என்று சங்கரன் நாயரைப் பற்றி முன்னால் ரா அதிகாரி பி.ராமன் கூறிப்பிட்டுள்ளார்.

கவ்வின் தலைமையும், நாயரின் ஆலோசனையும் இல்லாவிட்டால் வங்க தேசப் போரில் ராவுக்கு வெற்றிக்கிடைத்திருக்காது. கவ்வின் திட்டமும், அதை செயல்படுத்தும் நாயரின் ஆலோசனையும் தான் ராவை மதிக்க வைத்தது. இப்போது, அந்த இரண்டு பேரும் இல்லாதது ராவுக்கு மிக பெரிய இழப்பு.

மொரார்ஜி தலைமையிலான அரசு ராவின் எல்லா ஆவணங்களாயும் சோதனைக்கு உட்படுத்தியது. இந்திரா காந்தியும், சஞ்சய் காந்தியும் ராவை தவறாக பயண்படுத்தினார்களா என்பது தான் சோதனையின் நோக்கம்.

ஏதாவது சிக்காதா என்று கண்ணில் விளக்கெண்ணெய் உற்றி தேடியவர்களுக்கு ஒரு விபரம் கிடைத்தது. ஜெனிவாவில் ஒரு வங்கி கணக்கில் 6 மில்லியன் அமெரிக்க டாலர்களுக்கு காசோலையாக டெபாசிட் செய்ய நாயர் ஜெனிவாவுக்கு சென்று வந்தார். ஒரு வேளை அந்த வங்கி கணக்கில் சஞ்சய் காந்தியுடையதாக இருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தது.

அந்த வங்கி கணக்கு ஈரானிய இடைத் தரகரான ரஷ்த்யான் என்பவருடையது. அணு குண்டு சோதனை நடத்திய பிறகு, அமெரிக்க அரசு இந்தியாவுக்கு தடைவித்திருந்தது. அப்போது, இந்திய அரசு பெரும் நிதி நெருக்கடி ஏற்பட்ட போது ரஷ்த்யான் ஷா அரசிடன் இருந்து 250 மில்லியன் டாலர் குறைந்த வட்டிக்கு பெற்று தர உதவினார். அதற்கு கமிஷனாக 6 மில்லியன் டாலர் தருவதாக இந்திய அரசு ஒப்புக் கொண்டது. அதை தான் நாயர் ஜெனீவா வங்கியில் செலுத்தியிருந்தார் என்பது தெரியவந்தது. இதை மேலும் விசாரிக்க மொரார்ஜி விரும்பாததால், இந்த வழக்கு முடிக்கப்பட்டது.

உண்மையில், ரா தலைவராக கவ்விற்கும், சஞ்சய் காந்திக்கும் அவ்வளவாகாது. அவரிடம் இருந்து கவ் விலகியே இருந்தார். சஞ்சய் செய்ததாக சொல்லப்படும் எந்த விஷயத்திலும் ரா சம்மந்தப்படவில்லை. அது மட்டுமில்லாமல், ரா விவகாரங்களில் தலையிட வேண்டாம் என இந்திரா காந்தி சஞ்சய்யிடம் சொல்லியதாக தெரிகிறது. இருந்தாலும், அரசியல் ஆட்டத்தில் எந்த அதிகாரிகள் வேண்டுமானாலும் பகடை காயாக மாறலாம்.

சங்கரன் நாயருக்கு பிறகு ராவின் தலைவராக சன் தூக் பொறுப்பேற்றார்.

உள்ளூர் அரசியலில் ரா தலையிடவில்லை என்று மொரார்ஜி நம்பினாலும், வெளிநாடு வாழ் இந்தியர்களை துன்புறுத்த இந்திரா காந்தி ராவை பயன்படுத்தியதாக நம்பினார். இதனால், ஆண்டுக்கு ராவுக்கு ஒதுக்கப்படும் நிதியில் 50 சதவீத நிதியை குறைத்தார். ராவுக்கு

ஒதுக்கப்பட்ட பட்ஜெட் குறைக்கப்பட்டதால், ஊழிர் பலத்தையும் 50 சதவீதம் குறைக்க வேண்டியதாக இருந்தது. புதிதாக ஆட்களைச் சேர்ப்பது நிறுத்தப்பட்டது.

வெளிநாடுகளில் இருந்த பல பதவிகள் நீக்கப்பட்டன. கவ்வால் தொடங்கப்பட்ட அரசியல் பிரிவு, இன்ஃபர்மேஷன் டிவிஷன் போன்ற பிரிவுகள் மூடப்பட்டன. 1971ல் பிறகு வளர்ந்த ரா அமைப்பு, மீண்டும் அதே நிலைக்கு திரும்பியது.

உண்மையை சொல்வதென்றால், மொரார்ஜி பதவி ஏற்றது ‘ரா’ என்ற அமைப்பே தேவையில்லை என்ற எண்ணம் அவருக்கு இருந்தது. அதனால், தங்கள் இருப்பை காட்டிக் கொள்ள ரா போராட வேண்டியதாக இருந்தது. புதிதாக எந்த நடவடிக்கைகளிலும் அவர்களால் இறங்க முடியவில்லை.

புதிய தலைவரான சன்தூக் மொரார்ஜி தனிப்பட்ட முறையில் நல்லுறவை ஏற்படுத்திக் கொண்டார். இதனால், ராவுக்கு பிரச்சனை வராமல் பார்த்துக் கொண்டார். குறிப்பாக, எல்.பி.சிங் தலைமையில் நெருக்கடி காலத்தில் நடந்த உரிமை மீறல்களை விசாரிக்க அமைப்பட்ட போது, அந்த விசாரனை வரம்பில் ஐபியும், சிபிஐயும் இருந்ததே தவிர ரா இல்லை!!!

இந்த இடத்தில் மொரார்ஜி பற்றி சொல்லியாக வேண்டும். இரண்டு முறை பிரதமர் கனவு தகர்ந்த பிறகு, பிரதமர் பதவியில் அமந்தார். பல சமயங்களில் இவர் அதிகாரிகளை மிரட்டியிருக்கிறார். இவர் மிரட்டலுக்கு அஞ்சாத, தன் நிலையில் உறுதியாக இருக்கும் அதிகாரிகள் மீது நல்ல மரியாதை வைத்திருந்தார். அதே சமயம், மிரட்டலுக்கு பயந்து வளைந்து கொடுக்கும் அதிகாரிகளை நம்ப மறுத்தார். உதாரணத்திற்கு, ஒரு முறை அரசுமுறை பயணமாக மொரார்ஜி லண்டன் சென்று இருந்தார்.

அப்போது, அங்கு இருந்த ரா அதிகாரியிடம் வேலை பற்றிய விபரங்களை கேட்டார். அவர் தனது பணிகளை அறிக்கை தயார் செய்து

கொடுத்து, விளக்கம் அளித்தார். அந்த அறிக்கையை தன் சட்டை பையில் போட்டுக் கொண்டு, விமானத்தில் செல்லும் போது படிப்பதாக கூறினார். முக்கியமான நடவடிக்கை கொண்ட அறிக்கையைப் பிரதமர் கையில் கொண்டு செல்வது பாதுகாப்பு இல்லாதது என்று நினைத்து, தூதரக தபால் வழியாக அனுப்புவதாக கூறினார்.

அப்போது, கோபமான மொரார்ஜி, “ஐக்கிய பம்பாய் மாகாணத்தின் முதல்வராகவும், மத்திய அமைச்சரவையில் மந்திரியாகவும் பல ஆண்டுகள் இருந்திருக்கிறேன். பாதுகாப்பைப் பற்றி நீங்கள் எனக்கு சொல்லி தர வேண்டாம்” என்றார். இருந்தும் அந்த அதிகாரி விடவில்லை. அறிக்கையை திரும்ப வாங்கிக் கொண்டார். பின்னர், அந்த அறிக்கையை தூதரகத் தபால் மூலம் ரா தலைவர் சன்தூக்கிற்கு அனுப்பி வைத்தார். அதோடு, பிரதமருடன் நடந்த உரையாடலையும் ஒரு கடிதமாக எழுதியிருந்தார்.

சன்தூக் அந்த அறிக்கையை மொரார்ஜியிடம் கொடுக்கும் போது, பிரதமராக இருந்தாலும் தனக்கு பணிந்து செல்ல மறுத்ததற்காக அந்த அதிகாரியை புகழ்ந்தார். கொஞ்சம் கொஞ்சமாக ராவைப் பற்றிய கண்ணோட்டம் மொரார்ஜிக்கு மாறியிருந்தது. ராவின் மீது நல்ல அபிப்பிராயம் மொரார்ஜிக்கு வந்ததில் சன்தூக் மிகவும் முக்கியம்.

மொரார்ஜிக்கு ரா மீது நல்ல மரியாதை வந்த நேரத்தில் மீண்டும் ஒரு அரசியல் மாற்ற வந்தது. ராஜ் நாராயணன் கொடுத்த நெருக்கடியால் ஜனதா கட்சி 34 எம்.பிகள் ஜனதா கட்சியை விலகி, மொரார்ஜியின் ஆட்சி இரண்டு வருடத்தில் முடிவுக்கு வந்தது.

காங்கிரஸ் ஆதரவில் சரண்சிங் பிரதமரானார். ஆனால், அதுவும் நீண்ட நாட்கள் நீடிக்கவில்லை. அவரின் ஆட்சியும் கவிழ்ந்தது. அதனால், மீண்டும் தேர்தல் நடத்த உத்தரவிடப்பட்டது.

1980ல் 351 இடங்களில் வெற்றி பெற்று பெரும்பான்மையுடன் காங்கிரஸ் ஆட்சி அமைத்தது. மீண்டும், இந்திரா காந்தி பிரதமரானார். ராவுக்கு

மீண்டும் புது இரத்தம் கிடைத்தது.

*****

# 7. காலிஸ்தான் - சீக்கியர்கள் கனவு தேசம்

“கோபம் என்பது இருளாய்யும். அழிவையும் பிரயோகிப்பவர் மீதே திரும்பச் செலுத்தும்! தேவையற்ற பிரச்சனைகளை உருவாக்கும்.:

-குருநானக் தேல், ராக் கான்ரா, 1299

“பஞ்சாப் இந்தியாவின் உணவுக் களஞ்சியம்” என்று பெயர் பெற்ற மாநிலம். வடமேற்குப் பகுதியில் இருக்கும் பஞ்சாப்பில் ஒரு மாதம் விளைவதை ஒரு வருடம் இந்தியர்கள் சாப்பிடலாம் என்று சொல்லும் அளவிற்கு விவசாயத்தில் அவர்களது உழைப்பு இருந்தது. தெற்கே ஹரியானா, ராஜஸ்தான் மாநிலங்களும், கிழக்கே உத்தராஞ்சலும், வடக்கே ஜம்மு மற்றும் காஷ்மீரும், மேற்கே பாகிஸ்தானும் உள்ளது.

உணவுக்கு மட்டுமல்ல, அவர்கள்து வீரமும் உலகறிந்தது. அந்த வீரமும், அவர்களது கோபமும் இந்தியாவுக்கு எதிராக திரும்பும் போது தான், இந்திய பாதுகாப்புக்கு சவாலாக மாறியது. இன்று, இஸ்லாமிய தீவிரவாதிகளால் இந்தியா எந்த அளவிற்கு பாதிக்கப்படுகிறதோ, அந்த அளவுக்கு என்பதுகளிலும், தொன்னூறு தொடத்திலும் சீக்கிய தீவிரவாதிகளால் பாதிக்கப்பட்டது. இந்தியாவை எதிர்த்து பேசும் சீக்கியனை ‘காலிஸ்தான் போராளி’ என்ற சந்தேகத்துடன் பார்த்தது.

‘காலிஸ்தான்’ சீக்கியர்களின் கனவு தேசம். காலிஸ்தான் என்றால் தூய்மையின் தேசம் என்று பொருள். சீக்கியர்கள் அதிகம் வாழும் பஞ்சாப்பை ‘காலிஸ்தான்’ என்று தனி நாடாக பிரித்து தர வேண்டும் என்பது தான் காலிஸ்தான் போராளிகள் கோரிக்கை.

இந்திய அரசாங்கம் இவர்களை இரண்டாம் தர குடிமக்களாகவோ, உரிமைகளை மறுக்கும் அளவிற்கு நடந்துக் கொண்டதில்லை. இந்திய பாதுகாப்பும் முக்கிய பங்காக இராணுவம், ராவில் சீக்கிய

கணிசமானவர்கள் பணிபுரிகிறார்கள். அப்படி இருந்தும் இவர்களுக்கு 'தனி நாடு' கோரிக்கை எப்படி தோன்றியது?

1909ல் ஹிந்து – முஸ்லீம் மத அடிப்படையில் தொகுதிவாரியாக பிரிக்கப்பட்டும் போதே லேசாக சீக்கியர்களுக்கு 'தனி தொகுதி' என்ற எண்ணம் தோன்றியது. 1944ல் ஜின்னாவுடன் நடைப்பெற்ற பேச்சுவார்த்தையில் இந்தியாவின் வட மேற்கில் (பஞ்சாப்) மற்றும் வடகிழக்கில் முஸ்லிம்கள் வாழும் பகுதி, சுதந்திரத்திற்கு பிறகு மக்கள் விருப்படி தனிநாடாகவோ அல்லது இந்தியாவுடன் இணைக்கப்படும் என்று அறிவித்தனர். அப்போது, 'ஆஸாத் பஞ்சாப்' என்ற தனி நாடு வேண்டுமென்று அகாலி தள் தலைவர் தாரா சிங் அறிக்கை விட்டார்.

1946 ஜூலையில், 'இந்தியாவின் வடக்குப் பகுதியில் சீக்கியர்கள் சுதந்திரத்தை அனுபவிக்க ஒரு தனி பகுதி ஒதுக்கப்படும்' என்று நேரு உறுதி அளித்தார். ஆனால், இந்திய – பாகிஸ்தான் பிரிவினை யுத்தம் எல்லாவற்றையும் மாற்றிவிட்டது.

ஹிந்து, முஸ்லிம், சீக்கியர்கள் என்று ஒரு லட்சம் பேர் இறந்தார்கள். அந்த சமயத்தில் சீக்கியர்களுக்கு 'தனி தேசம்' என்று உருவாக்குவது சீக்கியர்களுக்கும், இந்தியாவுக்கும் பாதுகாப்பாக இருக்காது என்று கைவிடப்பட்டது. அது அகாலி தளத்தினருக்கு அதிருப்தியாக இருந்தது.

பஞ்சாப்பில் நடந்த பொது தேர்தலில் 1952, 57, 62 ல் காங்கிரஸ் தான் வெற்றிப் பெற்றது. அதுமட்டுமில்லாமல், 'தனி தேசம்' கேட்கும் அமைப்புகளுக்கு தடைவிதிக்கப்படும் என்று நேரு அறிவித்திருந்தார் (தென்னகத்தில், 'திராவிட நாடு' என்ற கோரிக்கை இதனால் கைவிடப்பட்டது). இதனால், 'பஞ்சாபி சுபா' என்ற தனி மாநில கோரிக்கையை முன் வைத்தனர்.

1966ல் இந்திரா காந்தி பிரதமரானதும் பஞ்சாப், ஹரியானா, ஹிமாச்சல் பிரதேஷ் என்று மூன்று மாநிலங்களாக பிரிக்கப்பட்டு, 'பஞ்சாபி சுபா' கோரிக்கை வெற்றிப் பெற்றது. அதன் பின் அங்கு நடந்த தேர்தலில்

அகாலி தள் தலைமையிலான கூட்டனி தான் வெற்றிப் பெற்றது. ஆனால், அவர்களால் முழுமையாக ஆட்சி செய்ய முடியவில்லை.

அகாலி தளத்தினரை ஒடுக்க பிந்த்ரன்வாலே என்ற தீவிர சீக்கிய மதவாதியை காங்கிரஸ் பயன்படுத்த நினைத்தது. சீக்கிய மத போதகர். சீக்கியர்களின் மறுமலர்ச்சிக்கு காரணமாக கருதப்பட்டவர் தான் பிந்த்ரன்வாலே. இவர் காலிஸ்தான் கொள்கையை ஆதரிக்கவும் இல்லை, எதிர்க்கவுமில்லை. அதுமட்டுமில்லாமல் இவர் அகாலி தளத்தினத்தின் செயல்பாடுகளோடு ஒத்துப்போகவில்லை.

காங்கிரஸ் ஆதரவாக 1980ல் தேர்தல் பிரச்சாரம் செய்தார். அகாலி தள் தங்கள் செல்வாக்கை உயர்த்த நினைத்து செயல்பட்டது எல்லாம் தோல்வியில் முடிந்தது. பிந்த்ரன்வாலே ஆதரவாளர்கள் அவர்களை ஏளனமாக பார்த்தனர்.

இருவருமே பொற்கோயிலை மையமாகக் கொண்டு அரசியலில் ஈடுப்பட்டனர். 'யார் பெரியவன்' என்று இவர்களுக்குள் நடந்த சண்டையில் பல வன்முறை சம்பவங்கள் நடந்தது. இதில், பிந்த்ரன்வாலே செல்வாக்கு உயர்ந்தது.

சீக்கியர்களில் ஒரு பிரிவாக நிரங்காய்கள் தங்களின் மதகுரு பிறந்த நாளை கொண்டாடும் போது பிந்த்ரன்வாலே தனது ஆதரவாளர்களுடன் அவர் மீது தாக்குதல் நடத்தினார். சீக்கிய தீவிரவாதத்தின் முதல் தாக்குதல் என்று அப்போது தெரியவில்லை. அதன் பின், பல வன்முறைகள் பிந்த்ரன்வாலே ஆதரவாளர் ஈடுப்பட்டனர். ஆனால், அப்போதைய காங்கிரஸ் அரசு அவர் மீது எந்த நடவடிக்கை எடுக்கவில்லை. ஆனால், பிந்த்ரன்வாலே எதிராக எழுதிய லாலா ஜெகத் (பஞ்சாப் கேசரி ஆசிரியர்) அவரது ஆதரவாளர்களால் படுகொலை செய்யப்பட்ட போது, அவரை கைது செய்ய வேண்டியதாக இருந்தது.

பிந்த்ரன்வாலே செப்டம்பர் 20ம் தேதி ஒரு மணிக்கு சரணடைவதாக கூறினார். கைதாகவதற்கு முன் ஒரு மதக்கூட்டத்தை நடத்தவும் அனுமதி

கேட்டார். அவரது கோரிக்கை ஏற்க்கப்பட்டது. அவர் கூறிய நேரத்தில் போலீஸ் கைது செய்ய சென்ற போது, அவரது ஆதரவாளர்கள் கையில் துப்பாக்கி, வாள், ஈட்டி என்று பல ஆயுதங்களுடன் திரண்டு இருந்தனர். போலீஸ் பிந்த்ரன்வாலே ஆதரவாளர்களை தாக்க தொடங்க, அங்கு பெரிய கலவரம் வெத்தது. இதில் 11 காவல் துறையினர் கொல்லப்பட்டனர்.

அன்று மாலையே ஜலந்தர் மார்கெட்டில் மூன்று ஹிந்துக்கள் சீக்கியர்களால் கொல்லப்பட்டார்கள். கைதான பிந்த்ரன்வாலேவும் சிறைசாலையில் அடைக்காமல் அரசு மாளிகையில் வைக்கப்பட்டார். அடுத்த 25 நாள்களில் பல வன்முறைகள் சம்பவங்கள் நடந்தது. செப்டர் 29ல் இந்திய ஏர்லைன்ஸ் விமானம் கடத்தப்பட்டு பிந்த்ரன்வாலேவை விடுதலை செய்ய மிரட்டல் விடுத்தனர்.

அக்டோபர் 15 அன்று, பிந்த்ரன்வாலே விடுதலை செய்யப்பட்டார். லாலாஜி கொலை வழக்கில் பிந்த்ரன்வாலேவுக்கு எந்த தொடர்பும் இல்லை என்று அப்போதைய உள்துறை அமைச்சர் ஜையில் சிங் தெரிவித்தார். பிந்த்ரன்வாலே இந்தியாவுக்கு பெரிய அச்சுருத்தலாக இருப்பார் என்பது அப்போது தெரியாமல் போனது.

மேம்போக்காக பார்த்தால், உள்துறை விவகாரமாக தான் தெரியும். சீக்கியர்கள் என்ற மதவாதிகள் செய்ய வன்முறை தாக்குதல். போலீஸ், சிபிஐ அதிகப்படியாக ஐ.பி அமைப்பு கவனிக்க வேண்டும். இதில் பெரிய அளவில் அச்சுருத்தல் இல்லை என்ற தோன்றும். ஆனால், ரா இவர்களை உளவு பார்க்க வேண்டிய அவசியமாக இருந்தது. அதற்கு இரண்டு காரணங்கள் வலுவாக இருந்தது.

1947ல் இந்திய பிரிவினைப் போது சீக்கியர்கள் பலர் வெளிநாடுகளில் குடியெறினர். குறிப்பாக, அமெரிக்கா, கனடா, பிரிட்டன் போன்ற நாடுகளில் பல சீக்கியர்கள் சென்றனர். அங்கு பணியாற்றுபவர்கள் சந்தித்த மிக பெரிய சவால் தாடியை மழிக்க வேண்டும் மற்றும் டர்பன் அணியக் கூடாது என்று இருந்தது. குறிப்பாக, பிரிட்டன் போக்குவரத்து

நிறுவனத்தில் இப்படி வற்புறுத்தினர். இந்திய தூதரகத்திடம் முறையிட்ட போது, வெளிநாடுகளில் வசிக்கும் இந்திய வம்சாவழியினருக்கு இந்தியா தலையிடுவதில்லை என்றது.

வெளிநாட்டில் வாழும் யூத மக்களின் மத உணர்வுகளுக்கு குறுக்கிட்டு வந்தால், இஸ்ரேல் அந்த நாட்டோடு பேசி பிரச்சனை தீர்க்கும். ஆனால், இந்தியா அப்படி நடந்துக் கொள்ளவில்லை என்பது சீக்கியர்களுக்கு வருத்தம் தந்தது. யூத மத நம்பிக்கை தார்மீக பொறுப்பு ஏற்க்கும் இஸ்ரேல், இந்தியா தங்கள் மத நம்பிக்கையை மதிக்கவில்லை என்று சீக்கியர்கள் நினைத்தனர்.

பாகிஸ்தானில் உள்ள நான்கானா சாஹிப் குருத்வாரா போன்ற சீக்கியப் புனிதத் தலங்களுக்கு இந்தியாவிலும், வெளிநாட்டிலும் வசிக்கும் சீக்கியர்கள் சென்று வர இந்தியா பாகிஸ்தானுடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்றனர். ஆனால், இந்தியா பேச்சு வார்த்தை நடத்த தயக்கம் காட்டியது. இதனால், காலிஸ்தான் என்ற தனி தேச பிரச்சாரத்தை வெளிநாட்டில் வாழும் சீக்கியர்கள் ஆதரத்தினர். ஆதரவு குரல் மட்டுமில்லாமல் நிதி உதவி செய்தார்கள். இதனை, ரா கவனிக்க வேண்டியதாக இருந்தது.

அடுத்த காரணம், பிந்த்ரன்வாலே பின் இருக்கும் பாகிஸ்தானின் உளவுத்துறையின் ஐ.எஸ்.ஐ ஆதரவு. இந்திய – பாகிஸ்தான் பிரிவினையின் போது முஸ்லிம்கலால் பல சீக்கியர்கள் கொல்லப்பட்டதை மறந்து, பிந்த்ரன்வாலே பாகிஸ்தானோடு கைகோர்த்துக் கொண்டார்.

முக்தி ஃபௌஜ் என்ற வீரர்களுக்கு பயிற்சி அளித்து கிழக்கு பாகிஸ்தானில் இந்தியா என்ன செய்ததோ, பிந்த்ரன்வாலேவைக் கொண்டும், மற்ற சீக்கிய தீவிரவாதிகளைக் கொண்டும் பஞ்சாப்பில் பாகிஸ்தான் செய்ய நினைத்தது. அந்த நடவடிக்கைக்கு **“ஆப்ரேஷன் கே – கே”** (காலிஸ்தான் – காஷ்மீர்) என்று பெயர் வைத்தனர்.

# 8. சவாலே சமாளி!

1980ல் இருந்து ராவுக்கு, ஐபிக்கும் சவாலாக காலக் கட்டம் தொடங்கியது என்று சொல்லலாம். காரணம், இந்தியா முன்னேற்ற பாதையை நோக்கி செல்லும் போதெல்லாம் ஏதாவது ஒரு அந்நிய சக்தி இந்தியாவில் ஏதாவது அசம்பாவிதத்தை நடத்த திட்டமிடும். பயங்கரவாதத்தை நடத்துபவர்கள் மாறினாலும், அதன் பின் இருந்து இயக்குபவர்கள் ஐ.எஸ்.ஐயாக தான் இருப்பார்கள்.

வெளிநாட்டில் வாழும் சீக்கியர்கள் இந்தியா மீது அதிருப்தி அடைந்தனர். பிரிட்டனில் "சீக்கிய ஹோம் ரூல்" என்ற இயக்கமும், அமெரிக்காவில் "யுனைட்டர் சீக் அப்பீல்" போன்ற இயக்கங்கள் தொடங்கினர். 1971ல் ஜனஜீத் சிங் சௌகான் சீக்கிய ஹோம் ரூல் இயக்கத்தின் தலைவரானார். 1967 – 69 காலகட்டத்தில் இருந்தே பஞ்சாப் மாநிலத்தை தனியாக பிரித்து, "காலிஸ்தான்" என பெயரிட விரும்பினார்.

இவர் பிரிட்டனுக்கு வரும் முன்பே சீக்கிய ஹோம் ரூல் இயக்கம் பாகிஸ்தான் ஹைகமிஷனுடனும், அமெரிக்க தூதரத்துடனும் தொடர்பில் இருந்தது. சௌகான் தலைவர் பொறுப்பேற்றதும் பாகிஸ்தான் ஜெனரல் யாஹ்யா கான் அவரை பாகிஸ்தானுக்கு அழைத்து, சீக்கிய மதம் சார்ந்த புனிதப் பொருட்களை பரிசாக கொடுத்தது. அன்றைய தேதியில் இந்தியாவில் வளரும் எந்த சீக்கிய சக்திக்கும் ஆதரவு அளிக்க சி.ஐ.ஏவும், ஐ.எஸ்.ஐயும் தயாராக இருந்தது.

1971ல் இந்திய – பாகிஸ்தான் யுத்தம் தொடங்குவதற்கு முன்பே ரா பாகிஸ்தானுக்கு எதிராக பிரச்சாரத்தில் ஈடுப்பட்டது போல், ஐ.எஸ்.ஐ இந்தியாவில் வாழும் சீக்கியர்களின் மனித உரிமை மீறல்களை இந்தியா கண்டுக் கொள்வதில்லை என்று வெளிநாட்டில் வாழும் சீக்கியர்களிடம் பிரச்சாரம் செய்தார்கள். 1971 அக்டோபர் 13ந் தேதி நியூயார்க் டைம்ஸில் சீக்கிய தனி நாடு தொடங்கப்பட்டதாக விளம்பர வெளிவந்தது. ரா இதை விசாரித்த போது, அந்த விளம்பரத்துக்கான கட்டணத்தை

வாஷிங்கடன் உள்ள பாகிஸ்தான் தூதரகம் செலுத்திருப்பது தெரியவந்தது. இந்த பிரச்சாரம் 1977 இந்திரா காந்தி தேர்தலில் தோல்வியுற்று, மொரார்ஜி பிரதமர் ஆகும் வரை தொடர்ந்தது.

மூன்று வருடம் விடுமுறை எடுத்து கொண்ட காலிஸ்தான் போராளிகள் இந்திரா காந்தி மீண்டும் பிரதமரானதும், அவர்களும் தங்கள் பிரச்சாரத்தை தொடங்கினர். இந்த முறை தங்கள் பிரச்சாரத்தின் ஒரு பகுதியாக காலிஸ்தானின் தபால் தலைகள், கரன்சி நோட்டுகள் ஆகியவற்றை வெளியிட்டனர்.

இதே காலக்கட்டதில் இண்டர்நேஷ்னல் சீக் யூத் ஃபெடரேஷன் (ISYF), தல் கல்ஸா, பப்பர் கல்ஸா, காலிஸ்தான் ஜிந்தாபாத் ஃபோர்ஸ் (KZF), காலிஸ்தான் கமாண்டோ ஃபோர்ஸ் (KCF), ஆல் இந்தியா சீக் ஸ்டுடணட்ஸ் ஃபெடரேஷன் (AISSF) போன்ற பல சீக்கிய தீவிரவாதி இயக்கங்கள் உருவாகின. எல்லோரும் காலிஸ்தானை வன்முறை மூலமே அடைய நினைத்தனர்.

தங்களுக்கு என்று தனி அரசியல் அணி உருவாக்கி, அரசியல் ரீதியான போராட்ட முயற்சியில் இறங்கவில்லை. அப்படி ஒரு யோசனையை அவர்களுக்கு பின்னால் இருக்கும் ஐ.எஸ்.ஐயும் வழங்கவில்லை.

***

பிரதமர் இந்திரா காந்தி அடுத்த பொருப்பு உள்துறை அமைச்சர் பதவி. அதில் ஜெயில் சிங் என்ற சீக்கியர் தான் இருந்தார். இருந்தாலும், சீக்கியர்கள் தங்களை இந்தியாவில் முக்கியமாக கருதுவதில்லை என்று நினைத்தனர். உள்துறை அமைச்சரும் பிந்தரன்வாலேவை மறைமுகமாக ஆதரித்தார். பிந்தரன்வாலேவை முக்கியத்துவம் கொடுத்து செய்திகளை வெளியிடுமாறு கூறியிருந்தார். உள்த்துறை அமைச்சரே இப்படி நடந்துக் கொள்வது விச்சித்திரமாக இருந்தது. நாட்டின் பாதுக்காப்பை விட தனது மத தீவிரவாதத்தை ஏன் வளர்க்க நினைக்கிறார் என்று தோன்றும்.

ஜெயில் சிங்க்கு காலிஸ்தான் தேவை என்பதை விட இந்திரா காந்தி மீது தான் கோபம் இருந்தது.

1980ல் பொது தேர்தல் முடிந்த கையோடு பஞ்சாப் மாநில சட்டமன்றத்துக்கு தேர்தல் நடந்தது. தனது ஆதரவாளர் ஒருவரைத் தான் முதல் அமைச்சராக்குவார் என்று ஜெயில் சிங் நினைத்தார். ஆனால், இந்திரா காந்தி அவரது போட்டியாளரான தர்பாராசிங்கை முதல்வராக்கினார்.

அரசியலில் எப்போதுமே ஒருவரை தனித்து வளரவிடக் கூடாது. ஒருவர் வளரும் போது அவருக்கு போட்டியாக இன்னொருத்தரை வளர விட வேண்டும். அப்போது தான் இருவரும் போட்டிப் போட்டுக் கொண்டு தனக்கு ஆதரவு தருவார்கள் என்பது இந்திரா காந்தியின் அரசியல் வியூகம்.

ஆனால், அதன் பின் தான் பிந்தரன்வாலே அரஜாகம் அதிகமானது. முதல்வர் தர்பார் சிங் ஆட்சியை கவிழ்ப்பதற்காக உள்துறை அமைச்சர் ஜெயில் ஆதரவும் இருந்தது. பொற்கோவிலை தனது கூடாரமாக மாற்றிக் கொண்டான் பிந்தரன்வாலே. அப்படி சொல்வது கூட தவறு. தனது தீவிரவாத நடைவடிக்கைகளுக்கு தலைமை அலுவலகமாக பொற்கோவிலை மாற்றிக் கொண்டான் என்று சொல்ல வேண்டும்.

ஒரு வருடம், இரண்டு வருடம் அல்ல... கிட்டதட்ட நான்கு வருடங்கள். பொற்கோவில் (எப்ரல்,1980 முதல்) பிந்தரன்வாலே கட்டுப்பாட்டில் இருந்தது. எந்த அகாலிதளத் தலைவர்களுக்கு எதிராக பிந்தரன்வாலே வளர்த்துவிட்டாரோ அதே தலைவர்களுடன் இந்திரா காந்தி சமரசத்துக்கு அழைத்தார்.

ஆரம்பத்தில் சமாதானப் பேச்சுக்கு சம்மதித்த அகாலிதளத் தலைவர்கள், பிந்தரன்வாலே அவர்களை கோழைகள், துரோகிகள் என்று விமர்சித்ததால், அவர்கள் ஒதுங்கிக் கொண்டனர்.

“மாநில அரசு, பொற்கோவில் வளாகத்தில் இருந்து பிந்தரன்வாலே அமைப்பினர்களை வெளியேற்ற வேண்டும்” என்று இந்திரா காந்தி கூறினார். பிந்தரன்வாலே பகைத்து கொள்வது பராவாயில்லை. அவரை வெளியேற்றும் முயற்சியில் பொற்கோவிலுக்கு ஏதாவது நடந்தால், ஓட்டு மொத்த சீக்கியர்களை பகைத்துக் கொள்ள வேண்டும்.

தனது அரசியல் அத்தியாயத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கும் விஷயம். இந்திரா காந்தியின் கட்டளையை நிறைவேற்ற முடியாத நிலைமையில் தர்பாரா சிங் இருந்தார்.

பஞ்சாப்பில் காங்கிரஸ் ஆட்சி அமைக்க வளர்த்த பிந்தரன்வாலே தனக்கு எதிராக திரும்பிவிட்டார் என்பது இந்திரா காந்தி புரிந்துக் கொண்டார். தன் தலைக்கு மேல் தொங்கும் கத்தியாகவே பிந்தரன்வாலே மாறிவிட்டார். தாமதிக்கும் ஒவ்வொரு நிமிடமும் நாட்டு ஆபத்து என்று உணர்ந்தார்.

தனது அதிரடி நடவடிக்கையில் இந்திரா காந்தி இறங்கினார்.

6.10.83ல் தர்பாரா சிங்கின் ஆட்சியை கலைக்கப்பட்டு, இந்திய அரசுக்கு நேரடி கட்டுப்பாட்டில் பஞ்சாப் வந்தது. அப்படியும் பிந்தரன்வாலேவை பொற்கோவிலில் இருந்து இந்திரா காந்தியால் அகற்ற முடியவில்லை.

ஜூன், 1984 பொற்கோவிலில் இருக்கும் காலிஸ்தான் தீவிரவாதிகளை அகற்ற “ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டார்” என்ற பெயரில் நேரடியாக இராணுவத்தை இறக்கினார். பொற்கோவிலை சுற்றி வளைத்தனர். ரா பொற்கோவில் பற்றிய தகவலை இராணுவத்திற்கு சரியான தகவல் கொடுத்தது.

ராஜஸ்தான், பஞ்சாப் எல்லை பகுதியில் பலத்த பாதுகாப்பு போடப்பட்டது. இராணுவத்தோடு மாநில, மத்திய காவல் படையினர்களும் சேர்ந்து பொற்கோவிலை முற்றுக்கையிட்டனர். வெளியில் இருந்து யாரும் உள்ளே போக அனுமதிக்கப்படவில்லை.

கிட்டத்தட்ட அந்த பகுதி அவசர பிரகடம் கொண்டு வந்தது போல் இருந்தது.

ஒரு பக்கம் பத்தாயிரம் மேற்ப்பட்ட இராணுவத்தினர். இன்னொரு பக்க இர நூறு மேற்ப்பட்ட தீவிரவாதிகள். எளிதாக ஒடுக்கிவிட முடியும். ஆனால், தீவிரவாதிகள் பதுங்கி இருந்தது பொற்கோவில். சீக்கிய மதத்தின் புனிதத் தளம். கொஞ்ச யோசிக்க வேண்டும் என்று இந்திரா காந்திக்கு அறிவுரை கூறினார். யோசித்ததில் சீக்கிய ஜென்ரலுக்கு இந்த தாக்குதல் நடத்த முக்கிய பொருப்பு கொடுத்தார்.

ஜூன் 3, 1984 தொடங்கியது. இரண்டு பக்கமும் பலத்த உயிர் சேதங்கள்.

ஜூன் 4 அன்று குருசரன் சிங் என்பவர் இந்திய இராணுவத்தின் சார்பாக பிந்தரன்வாலேவை சரணடையச் சொன்னால். பலனில்லை. தாக்குதல் தொடர்ந்தது.

முடிந்த வரை பொற்கோவில் பாதிக்கப்படக் கூடாது என்று தான் நினைத்தனர். இயற்கையிலே போராடும் குணமுடைய சீக்கியர்களை சிறிய அளவு தாக்குதலில் வீழ்த்த முடியவில்லை. பலமான தாக்குதல் தொடங்கியது. பொற்கோவிலின் முக்கிய பகுதி சேதமடைந்தது.

தாக்குதல் ஐந்து நாட்கள் வரை தொடர்ந்து நடந்தது.

ஒரு வழியாக ஜூன் 8 அன்று பொற்கோவில் இந்திய இராணுவத்தின் முழு கட்டுப்பாட்டிற்கு வந்தது. பிந்தரன்வாலே இராணுவத் தாக்குதலில் இறந்தார். தீவிரவாதிகளுக்கும், இராணுவத்திற்கும் நடந்த தாக்குதலில் பொதுமக்கள் தான் அதிகம் இறந்தனர்.

இந்திய இராணுவ தரப்பில் 142 பேர் இறந்ததாககவும், 200 பேர் படுகாயம் அடைந்ததாகவும் கூறப்படுகிறது. தீவிரவாதிகள் 200 பேர் மேல் கொல்லப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

பொதுமக்கள் 492 பேர் அதிகாரப்புர்வமாக இறந்ததாக கூறப்பட்டாலும், 5000 பேர் இறந்திருப்பார்கள் என்று சீக்கிய தரப்பில் இருந்து கூறப்படுகிறது.

பிந்தரன்வாலே கொன்றது மூலம் சீக்கிய தீவிரவாத நெருப்பு அணையவில்லை. இன்னும் பெரிதாக எரியும் என்பது அப்போது யாரும் உணர்ந்திருக்க மாட்டார்கள்.

இந்திய இராணுவத்திற்கும், காவலர்களுக்கு, ரா, ஐபி போன்ற உளவு நிறுவனத்திற்கு "ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டார்" வெற்றிக்கரமான ஆப்ரேஷன் தான். அதே சமயம் சீக்கியர்களின் பக்கத்தில் இது ஒரு கருப்பு பக்கமாகவே கருதப்படுகிறது.

"ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டார்" நடந்து முப்பது வருடங்களுக்கு பிறகு, இப்போது அந்த ஆப்ரேஷனுக்கு திட்டத்திற்கு உதவி செய்தது இங்கிலாந்து என்ற செய்தி வந்துள்ளது.

மார்கிரேட் தட்சர் பிரதமராக இருந்த போது ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டாருக்கு இந்தியாவுக்கு உதவ தனது எம்.ஐ5 உளவாளிகளை அனுப்பிய விபரம் சமிபத்தில் பெரும் பரப்பரை ஏற்ப்படுத்தியிருக்கிறது.

முதலில், பொற்கோவில் தாக்குதல் நடத்துவதற்கு பதிலாக பிந்தரன்வாலேவை கடத்த விடுவது நல்லது என்று இங்கிலாந்து உளவு நிறுவனமான எம்.ஐ 5 ராவுக்கு ஆலோசனை கூறியது. ஆனால், அந்த முயற்சிகள் சாத்தியமாக முடியாமல் இருந்தது. ஆயுதம் ஏந்திய சீக்கியர்களை தாண்டி பிந்தரன்வாலே கைது செய்வது நடக்காத காரியம். பெரிய விளைவுகளை கொடுக்கும்.

கடைசியில் பொற்கோவில் தாக்குதல் நடத்தியதாக கூறப்படுகிறது. பொற்கோவில் தாக்குதல் நடந்த காலக்கட்டத்தில் இங்கிலாந்து பிரதமருக்கும், இந்திய பிரதமருக்கும் கடிதப் போக்குவரத்து அதிகமாக இருந்துள்ளது போன்ற விபரங்கள் தெரியவந்துள்ளது.

சீக்கிய தீவிரவாதிகளை ஒடுக்க பொற்கோவில் நடத்திய தாக்குதலில் இறந்தவர்களில் பலர் சீக்கியர்கள் என்பதாலும், சீக்கிய மத நம்பிக்கையை காயப்படுத்தியதற்காக, இங்கிலாந்து பிரதமர் தேவிட் கேம்ரூன் பொது மன்னிப்பு கேட்க வேண்டும் என்று சீக்கிய அமைப்புகள் குரல் எழுப்பி வருகிறார்கள்.

முப்பது வருடம் முன்பு நெருப்பு இன்னும் புகை வந்துக் கொண்டு தான் இருக்கிறது என்பதை தான் காட்டுகிறது.

***

சீக்கியர்களால் பிரதமர் இந்திரா காந்தி உயிருக்கு ஆபத்து வரலாம் என்று சந்தேகித்தனர். அப்போதைய ரா இயக்குனர் சக்ஸேனா சீக்கியர்களால் பிரதமருக்கு தீங்கு வரவலாம் என்று கூறியிருந்தார். அதனால், அவருக்கு நெருக்கமாக பாதுகாப்பு பணியில் இருக்கும் சீக்கியர்களை மாற்றப்பட்டார்கள். பிரதமருக்கு பாதுகாப்பு நடவடிக்கையில் சீக்கியர்கள் ஈடுப்படக் கூடாது என்று கூறினர். இந்த விஷயம் பிரதமர் இந்திரா காந்திக்கு தெரிந்ததும் மிகவும் வருத்தப்பட்டார்.

இந்த நடவடிக்கைகள் சீக்கியர் அரசு மீது வருத்தத்தை அதிகரிக்கும் என்றார். மாற்றப்பட்ட சீக்கிய அதிகாரிகளை மீண்டும் பதவியில் அமர்த்தப்பட்டனர். அந்த அளவுக்கு தனக்கு பாதுகாப்பு அளிக்கும் சீக்கியர்களை அவர் நம்பினார்.

தல்விந்தர் சிங் சொன்னது போல் பொற்கொயில் தாக்குதலில் இறந்த உயிர்களுக்கும், சேதங்களுக்கும் இந்திரா காந்தியை கொன்று பழி தீர்த்துக் கொண்டனர். அவரது பாதுகாவலர்களான சத்வந்த் சிங், பியாந்த் சிங் எனும் சீக்கிய காவலர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார். இந்திரா காந்தியின் மரணம் நாட்டையே அதிர்ச்சிக்குள்ளாக்கியது. ஆளும் பிரதமர் படுகொலை செய்யப்படுவது இந்தியா முதல் முறையாக சந்திக்கிறது. இதில், பெரிய ஆறுதல் என்னவென்றால் உள்ளூர் சீக்கிய

தீவிரவாதிகளால் கொல்லப்பட்டதால் ஐ.பி தலைதான் உருண்டது. ரா தப்பித்தது.

இத்தோடு பிரச்சனை முடியவில்லை. இந்தியாவில் பல பகுதிகளில் சீக்கியர்கள் மீது கோபத்தை வளர்த்தது. சீக்கியர்களை தேடி தேடி தாக்கினர். பல சீக்கிய பெண்கள் பாலியல் கொடுமைகளுக்கும் ஆளானார்கள்.

இந்திரா காந்தி கொலைக்கு பழிவாங்குவதாக கூறி 11,000 மேற் பட்ட சீக்கியர்கள் கலவரத்தில் கொல்லப்பட்டார்கள். தில்லியில் மட்டுமே 3000 சீக்கியர்கள் கொல்லப்பட்டனர். இது "சீக்கிய இனப்படுகொலை" என்று இன்று வரை விமர்சிக்கப்படுகிறது.

அவரது மகன் ராஜீவ் காந்தி, "பெரிய ஆள மரம் முகிறதென்றால், வேர்கள் நசுங்க தான் செய்யும்" என்றார்.

சீக்கியர்களுக்கு இந்தியா மீது இருக்கும் அதிருப்தி அதிகமானது.

***

ஆகஸ்ட்,1984

ஏற்கவனவே இந்தியா மீது கோபத்தில் இருந்தான் தல்விந்தர் சிங். பல வீர வசனங்கள் பேசி அவன் கோபத்தில் எண்ணெய் ஊற்றுவது போல் பேசினான் தூதுவன். கையில் இரண்டு லட்ச லாடர் கொடுத்தான்.

"காரியம் சரியாக நடக்க வேண்டும்"

"இது மான எங்கள் பிரச்சனை. எங்கள் இனத்தவர்களை கொன்றவர்களை பழி வாங்க வேண்டிய சந்தர்ப்பதை நாங்கள் தவற விட மாட்டோம். உங்கள் உதவிக்கு எங்கள் நன்றி"

பணத்தை தல்வார் சிங்கிடம் கொடுத்துவிட்டு தூதுவன் நகர்ந்தான்.

பொற்கோயில் தாக்குதலில் சம்மந்தப்பட்டவர்கள் ஒவ்வொருவரும் கொல்ல பட வேண்டும். அப்போது தான் தலைவர் ப்ந்தன்வாலே ஆத்மா சாந்தி அடையும். எப்பேர் பட்ட போராளி. தன் இனத்திற்காகவே போராடியவர். தீவிரவாதிகளை ஒழிப்பதாக கூறி எங்கள் புனித கோயில் மீது, எங்கள் இனத்தவர் வைத்தே தாக்குதல் நடத்திய இந்திரா காந்தி அரசுக்கு தகுந்த பதில் அடி கொடுக்க வேண்டும்.

தனது சக சீக்கிய போராளியான இந்திரஜித் சிங் ரெயத்யை அழைத்தான். வெடிகுண்டு செய்வதில்வல்லவன். திறமையானவன்.

"இந்திய அரசு அலரும்படி ஒரு வெடிகுண்டு தாக்குதல் நடத்த வேண்டும். ஆனால், இந்தியாவில் அல்ல" என்றான் தல்விந்தர் சிங்.

"நம் மதத்தினரை தாக்கியவர்களை பழி வாங்க வேண்டும் என்றால், முதலில் இந்தாவில் தான் தாக்குதல் நடத்த வேண்டும். குறிப்பாக இந்திரா காந்தியை கொன்றாக வேண்டும். நாம் அங்கு தாக்குதல் நடத்துவது சரி..."

"அதை அங்குள்ள சீக்கிய தோழர்கள் பார்த்துக் கொள்வார்கள். ஐ.எஸ்.ஐ உதவுவார்கள். இந்தியாசோவியத்துடன் நட்போடு இருப்பதால், ஆப்கான் போராளிகளான முஜாஹித்தினும் நம் போராட்டத்திற்கு ஆதரவாக இருப்பதாக சொல்லியிருக்கிறார். அதற்கான வேலைகள் நடந்துக்கொண்டு தான் இருக்கிறது. நம் இலக்கு வேறு. "

"நீயும் நானும் கனடாவில் இருந்து கொண்டு எப்படி இந்தியாவை பதர வைக்க முடியும்?

"முடியும். நாம் குண்டு வைக்க போவது வெளிநாட்டில் தான். பாதிக்கப்பட போவது இந்தியாவாக தான் இருக்கும்"

"இந்திய தூதரகத்தில் குண்டு கைக்க போறோமா?"

"இல்லை. இந்தியன் ஏர்லைன்ஸ்."

இவர்கள் உரையாடும் போது ராஜீவ் காந்தி பெயரும் அடிப்பட்டது.

"சீக்கியர்களை பாதுகாக்காமல் இவனும் அம்மாவை போலவே பேசுகிறான். நமது அடுத்த குறி ராஜீவ் காந்தி தான்."

"முதலில் நாம் தீட்டம் போட்டதை செயல்படுத்துவோம். ராஜீவ் காந்தியை பிறகு பார்த்துக்கொள்ளலாம்."

***

கனடாவில் இருக்கும் சீக்கியர்கள் ஏதோ தாக்குதலுக்கு திட்டம் போடுகிறார்கள் என்ற செய்தி ராகாதில் வந்தது. உடனே, கனடாவின் உளவுத்துறையான கனடியன் செக்யூரிடி இன்டலிஜன்ஸ் சர்வீஸ் (CSIS) யிடம் தகவல் தெரிவித்தனர். ஆனால், அவர்கள் இதை பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை.

கனடாவில் ஒவ்வொரு சீக்கியர்களை எப்படி விசாரிப்பது. பல சீக்கியர்கள் அரசியல் செல்வாக்கு இருக்கிறது. அப்படியே தாக்குதல் அல்லது வெடிகுண்டு திட்டம் போட்டாலும் இந்தியாவில்தான் போடுவார்கள். அமெரிக்காவே அவர்களுக்கு மறை முகமாக உதவும் போது, நாம் ஏன் பெரிதாக அலட்டிக் கொள்ள வேண்டும் என்று கனடா உளவு நிறுவனம் நினைத்தது.

***

வெடி குண்டு தேவையான எலட்ரானிக் பொருள் எல்லாம் வாங்கி, வெடி குண்டு தயாரிப்பில் இறங்கினான் இந்திரஜிட் சிங்.

மன்ஜித் சிங் என்றபவர் “எம்.சிங்” என்ற பெயரில் டிக்கெட் எடுத்தான். ஆனால், பயணம் செய்ய டிக்கெட் கிடைக்கவில்லை. வைட்டிங் லிஸ்ட்டில் அவன் பெயர் இருந்தது. எப்படியாவது, தான் பயணம் செய்தாக வேண்டும் என்று தன் யை உள்ளே வைத்தார்.

“ஒரு வேலை உங்க டிக்கெட் கர்பார்ம் ஆகலைனா... நீங்க டோரோன்டோ பொய்தான் உங்க பைய எடுத்துக்கனும்" என்று விமான பணியாளர் கூறினார்.

“நா கண்டிப்பா இந்த ப்ளைட்டுல போகனும். கொஞ்ச வெயிட் பண்ணுங்க என் அண்ணன்ன கூட்டிட்டு வரேன்" என்றார்.

பையை மட்டும் ப்ளைட்டில் ஏற்றினர். வைட்டிங் லிஸ்ட் இருக்கும் எம்.சிங் வரவில்லை. கனிஷ்கா என்ற ஏர் இந்தியா ப்ளைட் 182 வானில் பறக்க தொடங்கியது. எம்.சிங் பையை டோரோன்டோவில் வாங்கிக் கொள்வார் என்று நினைத்த பணியாளருக்கு வெடிகுண்டு விபத்து அதிர்ச்சியாக இருந்தது.

நடுவானில் விமான குண்டு வெடிப்பு. 329 பணிகள் மரணம். ஒருவர் கூட உயிர்தப்பவில்லை. கனடாவில் உளவுத் துறை சரியாக செயல்படவில்லை என்று ஒரு புறம் இருந்தாலும், வெளிநாட்டில் இருந்து இந்தியாவை தாக்குதவதை தடுக்க தான் ரா உளவுத்துறை இருக்கிறது. அவர்கள் ஏன் இதைப் பற்றி தகவல் சேகரிக்கவில்லை. இந்தியாவில் இருந்து இயங்கும் ஒரு தீவிரவாத இயக்கம், வெளிநாட்டில் தாக்குதல் நடத்துகிறதென்றால் பாகிஸ்தான், சீனா நாடுகளில் இருந்து இவர்கள் எப்படி தகவல் சேகரிப்பார்கள். இப்படி பல விமர்சனங்கள் ரா உளவுத்துறை எதிர்க் கொள்ள வேண்டியதாக இருந்தது.

ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டாரில் இந்திரா காந்தியிடம் இருந்து நல்ல பெயர் பெற்ற ரா தலைவர் சக்ஸேனாவுக்கு, கனிஷா குண்டுவெடிப்பு விமர்சனத்தை எதிர் கொள்ள வேண்டியதாக இருந்தது. கனடா உளவு துறை சரியாக இயங்கவில்லை என்ற காரணம் சொன்னாலும், தீவிரவாதி என்று சந்தேகிக்கும் நபரை கண்ணாகிக்காமல் விட்டது ராவின் தவறு என்று பலர் கூறினர்.

இருபது வருடங்கள் மேல் நடந்த விசாரணையில் வெடிகுண்டு செய்த இந்திரஜித் சிங் தவிர, குற்றம் சாட்டப்பட்டவர்கள் யாரும்

தண்டிக்கப்படவில்லை என்பது வேதனைக்குறியது.

இறந்த பெரும்பாலான பயணிகள் கனடா குடி உரிமைப் பெற்றவர்களாக இருந்தாலும், வெடிக்கப்பட்ட விமானம் இந்தியாவுடையது. ரா பக்கங்களில் கனிஷா விமான குண்டு வெடிப்பு ஒரு கருப்பு பக்கம் என்பது மறுக்க முடியாது.

*****

# 9. காளிஸ்தான் போராளி ஒழிப்பு

ஒரு முறை ராஜீவ் காந்தி ஜெனிவாவுக்கு வந்திருந்த போது அவரை வரவேற்க சீக்கியர் ஒருவர் வந்திருந்தார். அவருக்கு பாதுகாப்பு அளித்தவர்கள் பதறினர். அவர் பாதுகாப்பு குறித்து கவலைப்பட்டனர். நல்ல வேளையாக யாரும் அவரை அங்கிருந்து செல்ல சொல்லி அவமானப்படுத்தவில்லை. ராஜீவ் காந்தியை வரவேற்க வந்த சீக்கியரின் பெயர் மன்மோகன் சிங்!!

சீக்கியர் ஒருவர் பிரதமரையோ, இந்தியாவையோ தவறாக பேசினால் அவர் காலிஸ்தான் அமைப்புடன் தொடர்புடையவரா என்று சந்தேகிக்கும் அளவிற்கு காலிஸ்தான் போராளிகள் என்று பொது மக்களே சந்தேகிக்கும் நிலைமை. ராஜீவ் காந்தி கொல்வதற்கு சதி திட்டம் போட்டிருக்கிறார்கள். அவரை கொலை செய்யப்போவதாகவும் எச்சரித்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் தேசப்பக்தியுள்ள சீக்கியர் வந்தால் கூட சந்தேகப்பட வேண்டிய நிலைமை.

சந்தேகமே இல்லாமல் காலிஸ்தான் போராளிகள் ஒழிக்கப்பட வேண்டியவர்கள். இவர்களை ஒழிக்காதவரையில் மற்ற சீக்கியர்களை மக்கள் சந்தேகக் கண்ணோடு தான் பார்ப்பார்கள். அவர்களை வெறுப்போடு தான் நடத்துவார்கள். இதனால், அரசுக்கு ஆதரவாக இருக்கும் சீக்கியர்கள் கூட எதிராக மாறக்கூடிய ஆபாயமான சூழ்நிலை.

இந்திரா காந்தி இருக்கும் போது காலிஸ்தான் போராளிகளை ஒழிப்பதற்காக இரண்டு ஜேஐசிக்களை உருவாக்கியிருந்தனர். ஒன்று ஜேஐசி-எக்ஸ் (JIC-X), ஜேஐசி-ஒய்(JIC-Y). ராவில் சேர்ந்த ஐ.பி.எஸ் அதிகாரிகள் ஒரு பிரிவினர் வெளிநாட்டு உளவு பணியை ஆராய்யவும், இன்னொரு பிரிவு உள்நாட்டு உளவுப் பணியை அராய்யவும் இருந்தனர். பிரதமர் ராஜீவ் காந்தி இரண்டு ஜேஐசிக்களை இணைத்து ஒன்றாக்கினார்.

***

காலிஸ்தான் தீவிரவாதிகளை ஒழிப்பதற்காக வெளிநாட்டு உளவு நிறுவனங்களை பயன்படுத்திக் கொள்ள ரா நினைத்தது. அதனால், வெளிநாட்டு வாழும் சீக்கியர்களை கண்காணிக்கவும், அவர் தகவல் பகிர்ந்துக் கொள்ளவும் உதவி நாடினார்.

பிரிட்டனின் எம்ஐ 5, எம் ஐ 6 அமைப்புகள் ராவுக்கும், ஐபிக்கும் தகவல் பகிர்ந்துக் கொள்ள சம்மத்தினர். காலிஸ்தான் தீவிரவாதிகளுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஒத்துழைப்பு வழங்கினர். இதனால், ராவுக்கும், எம்.ஐக்கு நெருக்கமான உறவு ஏற்ப்பட்டது. இதேப் போல், கனடாவின் உளவு நிறுவனம் ராவின் நடவடிக்கை ஆதரவு தெரிவித்தனர்.

இந்த இரண்டு நாட்டு உளவு நிறுவனம் போல் அமெரிக்க உளவு நிறுவனம் ராவிடம் நடந்துக் கொள்ளவில்லை. தகவல் பகிர்ந்துக் கொள்வதில் தயக்கம் காட்டினார். குறிப்பாக, பாகிஸ்தான் ஐ.எஸ்.ஐ சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளில் ராவிடம் பேச மறுத்தனர். ஆனால், அமெரிக்கா வரும் இந்திய முக்கியஸ்தர்களுக்கு பாதுகாப்பு அளிப்பதாக மட்டும் உறுதியளித்தனர். இதில், இந்தியாவுக்கு எதிரான பாகிஸ்தானின் நடவடிக்கையில் அமெரிக்கா மறைமுகமாக ஆதரிப்பது நன்றாக தெரிந்தது.

மற்ற நாட்டின் உளவு அமைப்புகளில் இருந்து வந்த தகவல்ப்படி காலிஸ்தான் போராளிகளுக்கு பின் பாகிஸ்தானும், அதன் ஐ.எஸ்.ஐ தான் இருக்கிறது என்பது நன்கு தெரிந்தது. ஆனால், அவர்களை ஒழிப்பதற்கான வழி என்னவென்று தெரியாமல் விழி பிதிங்கி நின்றப்போது ஒரு வெடிவிபத்து நடந்தது.

***

ஏப்ரல் 10, 1988ல் பாகிஸ்தானில் இருக்கும் ராவல்பிண்டியில் ஓஜ்ரியில் உள்ள இராணுவச்ச் சேமிப்புக் கிடங்கில் மிகப் பெரிய வெடி விபத்து ஏற்பட்டது. அதில் ராணுவ அதிகாரிகள், பொதுமக்கள் என 5000 பேர்

உயிரிழந்தனர். இது தற்செயலாக நடந்ததா, ரா செய்தார்களா என்று தெரியாது.

ஆப்கானிஸ்தானின் முஜாகிதீன்களுக்கு உதவ சி.ஐ.ஏ, வழங்கிய ஆயுதங்களும் வெடுமருந்தும் அங்குதான் வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் இருந்து ஒரு பகுதியை தான் ஐ.எஸ்.ஐ காலிஸ்தான் தீவிரவாதிகளுக்கும் வழங்கிவருகிறது. இந்த வெடிவிபத்து பாகிஸ்தானில் சர்ச்சை எழுப்பியது.

காரணம், அப்போது ‘ஸ்டிங்கர்’ எவுகணை உள்ளிட்ட கருவிகளை லிபியாவுக்கும், ஈராக்கிற்கும் விற்றதில் பல மில்லியன் டாலர்களை ஐ.எஸ்.ஐ அதிகாரிகள் சம்பாதித்திருப்பதாக குற்றம் சுமத்தப்பட்டிருந்தது. இதைப் பற்றி விசாரிக்க அமெரிக்காவின் சி.ஐ.ஏ பாகிஸ்தானுக்கு வருவதாக இருந்த சமயத்தில் இந்த விபத்து நடந்திருப்பது ஐ.எஸ்.ஐ மீது சந்தேகத்தை வரவழைக்கிறது. ஆனால், இந்த சந்தேகத்தை ரா மீது திருப்பப் பார்த்தனர்.

எதிர்த்தரப்பினர் கூச்சல் எழுப்பியதால் இந்த விபத்தை விசாரிக்க ஜியா உத்தவிட்டார்.

ஆகஸ்ட் 17, 1988ல் ஜியா உல் ஹக் ஒரு நிகழ்ச்சிக்காக பாவல்பூர் சென்றார். அவருடன் அமெரிக்க அதிகாரிகளும், ஜெனரல் பெக்க்கும் கலந்துக் கொண்டார். நிகழ்ச்சி விருந்து. முடித்து ஜியாவும் மற்றவர்களும் இஸ்லாமாபாத்து செல்ல விமானத்தில் ஏறினர். அவருடன் ஜெனரல் பெக் செல்லாமல் வேறு ஒரு விமானத்தில் தனியாக வந்தார்.

வானில் விமானம் சென்றுக் கொண்டு இருக்கும் போது ஜெனரல் பெக் விமானம் ஜியா சென்ற விமானத்துடன் தொடர்பை இழந்தது. ஜெனரல் பெக் தனது விமானத்தை பாவல்பூருக்கு திருப்பும்படி கேட்டுக் கொண்டார். பிறகு, ஜியா சென்ற விமானம் கட்டுபாடு இழந்து விபத்துக்குள்ளாகி அதில் பயணம் செய்த அனைவரும் இறந்ததாக செய்தி வந்தது,

கனிஷ்கா விமான விபத்துக்கு இந்தியா இந்த விமான விபத்தை உருவாக்கி பழி தீர்த்துக் கொண்டதாக பாகிஸ்தான் தரப்பினர் கூறினர்.

ஆனால், ஜென்ரல் பெல் ஏன் ஜியாவோடு விமானத்தில் செல்லவில்லை? அவர் செல்லும் விமானம் விபத்துக்குள்ளாகும் என்று முன்பே தெரியுமா? ஜியாவின் விமானத்தோடு தொடர்பு இல்லாத போது அவர் ஏன் மீண்டும் பாவல்பூர் சென்றார். போன்ற பல கேள்விகளுக்கு பதில் கிடைக்கவில்லை. இதில் ரா சம்மந்தப்படவில்லை என்பதை மட்டும் இங்கு சொல்லியாக வேண்டும்.

பாகிஸ்தான் இராணுவம் இது குறித்து நடத்திய விசாரணை அறிக்கையை வெளியிடவில்லை. பாகிஸ்தான் இராணுவத்திற்கும், அமெரிக்காவின் உளவுத்துறைக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமாகவே இந்த விசாரணை இருந்தது.

அதன்பின் பாகிஸ்தானில் நடந்த தேர்தலில் பேனஸீர் புட்டோ வெற்றிப் பெற்றார். அவர் வெளிப்படையாக சீக்கியர்களை இந்தியாவுக்கு எதிராக பயன்படுத்துவதை எதிர்த்தார். பாகிஸ்தானில் இருக்கும் சீக்கிய தலைவர்களை இந்தியாவின் விசாரணைக்கு ஒப்படைக்க உத்தரவிட்டார். அதற்கு, பாகிஸ்தான் ஜென்ரல்கள் சீக்கிய ஆதரவு நிறுத்தினால், பாகிஸ்தான் இராணுவத்தை இரட்டிப்பாக்க வேண்டும் என்றார். அதற்கு, பேனஸீர் புட்டோ எந்த கருத்தும் கூறவில்லை.

மேற்படி நடந்த சம்பவங்கள் திட்டமிட்டு நடத்தப்பட்டதா, தற்செயலாக நடந்ததா என்பது இங்கு தேவையில்லை. ஆனால், காலிஸ்தான் தீவிரவாதிகளை ஒழிப்பதற்கு நடந்த இந்தியாவுக்கு கிடைத்த மிக பெரிய சந்தர்ப்பம் என்று சொல்லலாம்.

***

மே, 1988ல் காலிஸ்தான் தீவிரவாதிகள் மீண்டும் பொற்கோவிலை கைப்பற்றினர். 84ல் கைப்பற்றிய போது இந்திரா எடுத்த நடவடிக்கைக்கு நேர் எதிராக ராஜீவ் காந்தி எடுத்தார். அதாவது, பொற்கோவிலுக்குள்

எந்த காவல் அதிகாரிகளையும் உள்ளே போக வேண்டாம் என்றார். பொற்கோவிலை சுற்றி வளைத்து யாரும் வெளியே செல்லவிடாமலும், வெளியே இருப்பவர்கள் யாரும் உள்ளே உணவு பொருள் எடுத்து செல்லவிடாமலும் தடுத்தனர். ஆயுதம் தாங்கிய படையினரும் இருந்தனர். இந்த ஆப்ரேஷனுக்கு பெயர் "**ஆப்ரேஷன் பிளாக் தண்டர்** ".

மே 11 முதல் 18 வரை பொற்கோவிலுக்குள் இருந்த தீவிரவாதிகள் வழியில்லாமல் சரணடைந்தனர். காவல்துறையினர்கள் அவர்களை கைது செய்தனர். ஊடகத்தினர் பொற்கோவிலுக்குள் சென்று படம் பிடித்த போது பொற்கோவிலில் துர்நாற்றம் வீசியது. பல இடங்களை தீவிரவாதிகள் கழிப்பறையாக பயன்படுத்தியிருந்தனர். இதை அப்படியே படம் படித்து வெளியிட்டதில் சீக்கியர்களே தீவிரவாதிகள் மீது அதிருப்தியடைந்தனர்.

84ல் சீக்கிய போராளிகள் மீது இருந்த அனுதாபம், 88ல் கொஞ்சம் கொஞ்சமாக வெறுப்பாக மாறியது.

***

1987ல் இருந்து கவர்னர் ஆட்சி நடந்து வந்த பஞ்சாப்பில் 92ல் பிரதமராக நரசிம்ம ராவ் தேர்தல் நடத்த உத்தரவிட்டார். தீவிரவாதிகள் யாரும் தேர்தலை சீர்குழைக்காமல் பார்த்துக் கொள்ள காவல்துறை டி.ஜி.பியாக கில் அனுப்பப்பட்டார்.

அவரது சிறப்பான பணியால் பயங்கரவாதிகள் தேர்தலைச் சீர்குலைக்காமல் அமைதியாக நடந்தது. பஞ்சாப்பில் பியாந்த் சிங் தலைமையில் ஆட்சி அமைந்தது.

***

1992ல் அமெரிக்காவில் நடந்த தேர்தலில் ஜார்ஜ் புஷ் (சீனியர்) வெற்றிப் பெற்றார். அந்த சமயத்தில் ஆப்கானில் இருக்கும் ரஷ்ய துருப்புகள்

வெளியே சென்று, அமெரிக்காவுக்கு ஆதரவான அரசுக்கு அங்கு இருந்தது. இதனால், அமெரிக்கா பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்குவது குறைந்திருந்தது. அதுமட்டுமில்லாமல், காலிஸ்தான் தீவிரவாதிகளுக்கு பாகிஸ்தான் ஆதரவு தருவதை நிறுத்த வேண்டும் என்று அமெரிக்க கூறியது. பாகிஸ்தானும் வேறு வழியில்லாமல் சீக்கிய தீவிரவாதிகளை ஆதரிப்பதை கொஞ்சம் கொஞ்சமாக குறைக்க வேண்டியதாக இருந்தது.

***

1992க்கு பிறகு சீக்கிய பயங்கரவாதிகளின் தாக்குதல்கள் குறையத் தொடங்கியது. சீக்கியர்கள் மத்தியில் "காலிஸ்தான்" கொள்கையை குறைந்தது. மன்மோகன் சிங் நிதி அமைச்சரானது, சிங்களுக்கு முக்கிய பொறுப்புகள் வழங்கியது போன்ற விஷயத்தில் சீக்கியர்களின் நம்பிக்கையை இந்திய அரசு சம்பாதித்தது. ஆனால், இன்றும் தனி "காலிஸ்தான்" அமைக்க முடியும் என்று சில போராளிகள் இயங்கி வருகிறார்கள். ஆனால், அவர்களால் 80 களில் இயங்கிய அளவிற்கு இப்போது இயங்க முடியவில்லை.

ஆப்ரேஷன் ப்ளு ஸ்டார், இந்திரா காந்தி மறைந்த பிறகு நடந்த வன்முறை போன்ற நிக்ழவுகளால் கோபம் அடைந்த காலிஸ்தானியர்களை ஒடுக்குவது என்பது மிக பெரிய சவால்.

ஒரு சில இந்திய சீக்கிய இராணுவ வீரர்கள் தன் வேலையை விட்டு காலிஸ்தான் போராட்டத்தில் கூட குதித்தார்கள். பாகிஸ்தான் காலிஸ்தான் போராளிகளை இன்னொரு இராணுவமாக நடத்தியது. இருந்தும், பஞ்சாப் காவல்துறையினர் அரசுக்கு சாதகமாக நடந்துக் கொண்டனர். ரா வழங்கிய தகவல், கனடா, இங்கிலாந்து உளவுத்துறையின் உதவியும் காலிஸ்தான் தீவிரவாதிகள் ஒழித்ததற்கு முக்கியமான காரணங்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

*****

# 10. மாலத்தீவு ஆக்கிரமிப்பு

“நம் கொள்கை என்ன? செய்துக் கொண்டு இருக்கும் காரியம் என்ன?”

எதற்காக இந்த விஷப்பரிட்சையில் இறங்க வேண்டும்?

யாரை நம்பி ஒரு தீவை கட்டுப்படுத்தும் முயற்சியில் இவர் இறங்குகிறார்.

தீவை ஆக்கிரமிப்பு செய்தால், நாளை உலகம் நம் போராட்டத்தைப் பற்றி தவறாக பேசுமே! இவர்களுக்கு ஆளும் ஆசையில் தான் போராட்ட குழு நடத்துகிறார்கள் என்று எல்லா பத்திரிக்கைகளும் எழுதுமே!

இந்த ஆக்கிரமிப்பு நடவடிக்கை மற்ற நாடுகள், தீவுக்கு ஆதரவாக வந்தால் நம்மால் சமாளிக்க முடியுமா?

- இப்படி பல கேள்விகள், விவாதங்கள் அந்தப் போராட்ட குழுக்களுக்குள் நடைப்பெற்றது. என்ன கேள்வி கேட்டாலும், யார் கேட்டாலும் மாலத்தீவின் ஆட்சியை கவிழ்த்து, ஆக்கிரமிக்கப் போவதில் உறுதியாக இருந்தார் உமா மகேஸ்வரன்.

உமா மகேஸ்வரன்? எங்கோ ஈழப் போராட்டத்தில் கேள்விப்பட்ட பெயராக தெரிகிறதா? சந்தேகம் வேண்டாம். புளோட் (PLOTE) போராட்டக் குழுவின் தலைவன் உமா மகேஸ்வரன் தான் மாலத்தீவில் கலகம் செய்து, ஆக்கிரமிக்க நினைத்தார்.

இலங்கை அரசுக்கு எதிராக போராட வேண்டிய ஈழப்போராளிகள் ஒரு தீவை ஆக்கிரமிக்க திட்டமிட்டது முரணாக தெரியலாம். தங்களை இரண்டாம் தர குடிமகன்களாக நடத்தும் இலங்கை அரசுக்கு எதிராக போராட்டம் நடத்தி, விடுதலைப் புலிகளிடம் இருந்து பிரிந்து, தனக்கென்று தனியாக ஒரு போராட்டக் குழுவை உருவாக்கியவர் தான்

உமா மகேஸ்வரன். சிங்களர்களிடம் இருந்து தமிழ் மக்களை காப்பாற்ற நினைக்கும் தலைவன், எப்படி ஒரு தன்னாட்சி புரியும் தீவை ஆக்கிரமிக்க நினைக்கிறார் என்று அவர் கூட்டத்தில் இருப்பவர்களே கேள்வி கேட்டனர்.

மாலத்தீவை ஆக்கிரமித்தால், தங்கள் போராட்டம் உலகளவில் பேசப்படும், மற்ற நாடுகளின் நட்பு கிடைக்கும், தங்கள் ஆயுதங்களை சேகரித்து வைக்க தளமாக இருக்கும் என்று திடமாக நம்பினார் உமா மகேஸ்வரன்.

தங்கள் உரிமைக்காக தங்கள் எல்லைக்குள் தாக்குதல் நடத்தும் வரை தான் அவர்கள் போராளிகள். தங்களுக்கு சம்மந்தமே இல்லாத ஒரு இடத்தில், எல்லை தாண்டி தாக்குதல் நடத்தினால், அது தீவிரவாதம் என்று தான் சொல்வார்கள். உரிமைக்காக போராடுகிறோம் என்று சொன்னால் யார் நம்புவார்கள். இந்த உண்மை உமா மகேஸ்வரனுக்கு புரிந்ததா? இல்லை அவருக்கு பின் பக்கத்தில் இருந்து ஆட்டி வைத்தவர்களுக்கு தெரிந்ததா? என்று தெரியாது. மாலத்தீவில் ஆட்சி செய்தும் அப்துல் கயூம் கவிழ்க்க வேண்டும். அது தான் முடிவு என்றார்.

மாலத்தீவு. இலங்கைக்கு அருகில் இருக்கும் தீவு. இந்தியாவுடன் அதிக நெருக்கமில்லாத, பாகிஸ்தானுடன் நெருக்கமாக இருக்கும் அப்துல் கயூம் ஆட்சி செய்கிறார். ஏற்கனவே, ஆட்சி செய்தவர்களை கவிழ்த்து, விரட்டி அடித்து ஆட்சியை பிடித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இதையே வைத்து ஆட்சியை கவிழ்த்து விடலாம் என்று நினைத்தார் உமா மகேஸ்வரன்.

ஐ.பி.கே.எப் கண்காணிப்பில் இருந்து எப்படி கப்பலில் ஏறுவது? இந்திய கடல் வழியாக தான் மாலத்தீவுக்கு செல்ல வேண்டும். இந்திய இராணுவம் நம்மை தாக்கினால் என்ன செய்வது? உமா மகேஸ்வரனின் திட்டம் புளோட் குழுவுக்கே பைத்தியக்காரத்தனமாக தான் தெரிந்தது.

“வழியில் எந்த பிரச்சனை வராது. நமக்கு உதவ பல நண்பர்கள் இருக்கிறார்கள். நம் போராட்டத்திற்கு ஒரு தனி தளம் வேண்டும். அதற்கு மாலத்தீவு தான் சரி. அதை அடைந்துவிட்டால், பிறகு இலங்கை அரசை ஆட்டிப்படைக்கவும், மற்ற நாடுகளின் உதவிக் கோரவும் வசதியாக இருக்கும்” என்றார்.

எந்த நம்பிக்கையில் உமா மகேஸ்வரன் இப்படி செய்கிறார் என்று கொஞ்சம் வியப்பாக தான் இருந்தது. ஆனால், உமா மகேஸ்வரன் சொல்லுவதுப் போல் நடந்துவிட்டால் மாலத்தீவில் இருந்தப்படி இலங்கை அரசுக்கு எதிராக போர் தொடுக்கலாம் என்று போராட்டக்காரர்கள் நினைத்தார்கள்.

1988 நவம்பர் 2… ‘அல் அகமத்’ என்ற போலிப் பெயர் கொண்ட கப்பலில், ப்ளோட் போராளிகள் ஆயுதங்களுடன் பிரயாணம் செய்தனர். வழியில் எந்த ஆபத்தும் இல்லை. தாக்குதல் நடத்த வழி வகுத்து தருவது போலவே சிறு பிரச்சனை இல்லாமல் மாலத்தீவை அடைந்தனர். அமைதியான சுற்றுலா பயணிகள் போலவே மாலத்தீவில் மேல் நகரத்துக்குள் நுழைந்தனர். இதற்கு முன், சுற்றுலா பயணிகள் போலவே சிலர் அங்கு இருந்ததால், அவர்களின் ஆக்கிரமிப்பு நடவடிக்கை விரைவாக நடந்தது.

வானொலி, விமான நிலையம், தொலைக்காட்சி, அரசு கட்டிடங்கள் என்று ஒன்றன் பின் ஒன்றாக தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தனர். முழுத் தீவும் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வந்துவிட்டோம் என்று நினைத்த நேரத்தில் தான் அந்த அதிர்ச்சியான செய்தி கிடைத்தது. அதிபர் கயூம் அதிபர் மாளிகையில் இல்லை. அவரைக் கைது செய்யாமல் இந்தப் ஆக்கிரமிப்பு வெற்றி முழுமைப் பெறாது. அடுத்து எதைத் தாக்குவது என்ற குழப்பத்தில் வேறு இருந்தனர். அவர்களின் குழப்பம் தீருவதற்குள், அதிபர் கயூம் தான் தங்கியிருந்த இடத்தில் இருந்தே வானொலியில் சர்வதேச உதவிக் கேட்டார்.

உதவிக்கு அவர்களின் நட்பு நாடான பாகிஸ்தான் வரும் என்று நினைத்த அதிபருக்கு, இந்தியாவிடம் இருந்து உதவி கிடைத்தது. ரா உதவியுடன் 2000 பேர் கொண்ட இந்திய விமான வீரர்கள், கப்பல் படையினர்கள் மாலத்தீவுக்கு அனுப்பினார். 12 மணி நேரத்திற்குள், விமான நிலையம், வானொலி என்று போராட்டக்காரர்களிடம் இருந்து தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தனர். அதிபர் கயூம் மீட்கப்பட்டார். இந்தியாவின் இந்த மீட்பு பணிக்கு 'ஆப்ரேஷன் காக்டஸ் (Operation Cactus) என்ற பெயரிட்டனர்.

இலங்கைக்காக விடுதலைப் புலிகள், புளோட் போன்ற போராட்ட அமைப்புகளைப் பற்றிய தகவல் சேகரித்து வைத்திருந்ததால், இந்திய இராணுவத்திற்கு ரா தகவல் கொடுப்பதில் பெரிய சிக்கல் இருக்கவில்லை. ரா உளவு அமைப்பின் உதவியில்லை என்றால், இவ்வளவு விரைவில் ஆக்கிரமிப்புக் ரர்களை இந்தியப்படையால் வெளியேற்றியிருக்க முடியாது.

உமா மகேஸ்வரனின் இந்த தாக்குதலுக்கு பின் புலமாக இருந்தது முன்னாள் மாலத்தீவு அதிபர் இப்ராஹிம் நசீர் என்று அப்துல் கயூம் கூறினார். (இரண்டு வருடத்திற்கு பிறகு, நசீர் மீது குற்றம் சுமத்தியற்கு வருத்தம் தெரிவித்தார்.)

இந்த தாக்குதலில் உமா மகேஸ்வரனுக்கு உதவியாக இலங்கையில் வசிக்கும் 'அப்துல்லா' என்ற மாலத்தீவு வியாபாரி பணமும், ஆயுதமும் கொடுத்ததாக கண்டறியப்பட்டது. 1988ல் 8.2 மில்லியன் அமெரிக்க டாலர் மதிப்புள்ள பொருட்களை இலங்கையில் இருந்து இறக்குமதி செய்து வந்த மாலத்தீவு 1989ல் 5.8 மில்லியனாக குறைத்துக் கொண்டது. அதுமட்டுமில்லாமல், இந்திய – மாலத்தீவு உறவு வலுவடைந்தது.

"நட்பு நாடுக்கு உதவக் கூடிய நல்ல வாய்ப்பு இந்தியாவுக்கு கிடைத்தது" என்று இராஜீவ் காந்தி பேசினார். ஆனால், மேலை நாட்டு ஊடகங்கள் இந்தியாவின் தலையீட்டை வேறு விதமாக விமர்சித்தது.

"ஐ.பி.கே.எப் கண்காணிப்பில் இருக்கும் இலங்கையில் இருந்து எப்படி கலகக்காரர்கள் வெளியே வந்தார்கள். இந்தியாவுக்கு தெரியாமல் இவர்கள் வந்திருக்க முடியாது" என்றனர். மேலும், கலகக்காரர்கள் இந்தியாவுக்கு தெரியாமல் இந்திய கடல் பகுதி வழியாக எப்படி வந்திருக்க முடியும்? என்று கேட்டனர். ரா உதவியுடன் தான் உமா மகேஸ்வரன் மாலத்தீவை ஆக்கிரமிக்க திட்டமிட்டார் போன்ற குற்றச்சாட்டுகள் வைத்தனர்.

"தெற்கு ஆசியாவின் தங்கள் கை ஓங்கியிருக்க இந்தியா நடத்திய சதியே" என்றார்கள்.

இன்று வரை, கேள்விகளுக்கு இந்தியா மறுத்ததே தவிர அவர்கள் கேள்விக்கு இந்திய அரசோ, ரா உளவு நிறுவனமோ பதில் அளிக்கவில்லை. குற்ற சுமத்துபவர்களும் இந்தியாவுக்கு எதிரான ஆதரத்தை கொடுக்கவில்லை.

ரா உளவு அமைப்பு தூண்டுதலால் உமா மகேஸ்வரன் மாலத்தீவு ஆக்கிரமிக்க நினைத்தாரோ அல்லது வேறு ஒருவர் தூண்டுதலில் உமா மேஸ்வரன் ஆக்கிரமிக்க நினைத்தாரோ என்று உறுதியாக சொல்ல முடியவில்லை. பின்னாளில், உமா மகேஸ்வரன் கொல்லப்பட்டப் போது விடுதலைப்புலிகள் உமாவை இந்தியாவின் கைக் கூலி என்று குற்றம் கூறியதும், மாலத்தீவின் ஆக்கிரமிப்பின் சந்தேகத்தை மேலும் வலுவூட்டியது. ரா தான் உமா மகேஸ்வரனை கொன்றது என்ற இன்னொரு சர்ச்சையும் உண்டு.

உளவுத்துறையில் எல்லாம் மர்மமான விஷயம். எல்லாவற்றையும் வெளிச்சத்திற்கு கொண்டு வர முடியாது. எல்லா யூகங்களுக்கும் உளவுத்துறை பதில் அளிக்காது. அதன் செயல்பாடு எப்போதுமே மர்மமாக இருக்கும்.

எது எப்படி இருந்தலும், இந்த ஆக்கிரமிப்பு திட்டத்துக்கு பிறகு இந்திய – மாலத்தீவு உறவு மலர்ந்ததற்கு ராவின் பங்கு மிக முக்கியம்.

மாலத்தீவில் இருந்து இந்தியாவுக்கு வணிக உறவு கிடைத்தது.

அந்த அளவில் ரா உளவு நிறுவனத்திற்கு Operation Cactus மிக பெரிய வெற்றி என்பது குறிப்பிட தக்கது.

*****

# 11. விடுதலை புலி - நண்பனா? பகைவனா?

அம்மாவின் மரணம் ராஜீவ் காந்தியை மிகவும் பாதித்திருந்தது. சன்ஜய் காந்தியை அரசியல் ஆசை இல்லை. ஆனால், அம்மாவுக்கு பக்கபலமாக இருக்க அரசியல் இறங்கினார். அரசியலில் இறங்கியதும் இவ்வளவு பெரிய பொறுப்பு தன் தலை மீது வந்து விழும் என்று அவர் எதிர்பாத்துஇருக்க மாட்டார்.

பிரதமர் பதவி ஏற்றதும், அம்மாவின் கொள்கையை பின்பற்ற நினைத்தார்.

"பாகிஸ்தான், ஐ.எஸ்.ஐ உளவு நடவடிக்கைகளை மாத்தனுமா?"

"எதுக்கு மாத்தனும். அம்மா இருக்கும் போது என்ன நடவடிக்கை எடுத்திங்களோ அதையே செய்யனும். எப்படி இருந்தாலும் நமக்கு தொல்லை கொடுக்குறவஙு தான். அவங்களா எதிரிக்க நாம எப்பவும் தயார இருக்கனும்"

"சீக்கிய தீவிரவாதிகள எதிரான நடவடிக்கை...." என்று அதிகாரி இழுக்க

"அம்மா இருக்கும் பொது கொண்டு வந்த கௌட்டர் இன்டலிஜன்ஸ் பிரிவு நடவடிக்கைகளை எதுவும் மாத்த வேண்டும். இன்னும் வேக செயல் பட்டு சீக்கிய தீவிரவாதத்த ஒடுக்கபாடுங்...."

ஆப்கானிதான், ஆப்பிரிக்கா என்று எல்லா நாட்டின் வெளியுறவுகளிலும் அம்மா என்ன கொள்கை கடைபிடித்தாரோ அதையே கடைப்பிடிக்க நினைத்தார்.

"இலங்கை போராளிகளுக்கு நாம் அளித்து வரும் ஆதரவு..." என்று பேசும் போது, இராஜீவ் குறுக்கிட்டு "இப்போதைக்கு அவங்களுக்கு

பண்ணுற உதவிய நிறுத்துங்க. இத பத்தி அப்புறம் உங்க கிட்ட பேசுறேன்" என்றார்.

இந்திரா காந்தி போராளிகளுக்கு உதவுவதாக எடுத்திருந்த முடிவை, ராஜீவ் காந்தி மாற்ற நினைத்தனர். எல்லாவற்றையும் அம்மாவின் கொள்கையை பின்பற்றியவர் இதில் மட்டும் ஏன் வேறுபடுகிறார் என்பது ராவுக்கு மட்டுமல்ல.... இன்று வரை யாருக்குமே புரியாத புதிர் தான். இதில், தனது கொள்கை எதனால் மாற்றிக் கொண்டார், எதற்கு இலங்கை அரசு கைகோர்த்தார் என்பதை ரா அதிகாரிகளால் கேள்வி கேட்க முடியவில்லை. அதன் விளைவு பெரிய போராட்டத்தையே கொண்டுவந்தது.

71ல் நடந்த இந்தியா – பாகிஸ்தான் யுத்தத்தில் இந்திய எல்லை மேல் விமானம் பறக்க தடைவிதித்த போது, பாகிஸ்தான் விமானங்கள் இலங்கை வழியாக செல்ல வேண்டியிருந்தது. பாகிஸ்தான் விமானங்களுக்கு எரிபொருள் நிரப்ப இலங்கை உதவியது. அந்த சமயத்தில் இந்திரா காந்தி இலங்கையை கண்டித்தார். பின்னாளில், பாகிஸ்தானுடனான யுத்தத்தில் இலங்கை அவர்களுக்கு உதவக் கூடாது என்று நினைத்தார். ஈழப் போராளிகளுக்கு இந்திரா காந்தி உதவ முன் வந்ததிற்கு இதுவும் ஒரு காரணமாக சொல்லப்படுகிறது.

பங்களாதேஷ் தனி தேசம் உருவாக்கியதில் இந்தியா வெற்றி பெற்று இருந்தாலும், தற்போது வட மேற்கு பகுதியில் தீவிரவாத வளர்வதற்கு “பங்ளாதேஷ்” காரணமாக இருப்பது இந்தியாவுக்கு தலைவலியாக இருக்கிறது. இதே விஷயம் இலங்கையிலும் நடக்கலாம் என்று அவர் நினைத்திருக்கலாம் என்று ஒரு சிலர் கருத்து கூறிகிறார்கள்.

“ஈழம்” மலர்ந்து, அவர்கள் அந்நிய சக்திகளோடு கைகோர்த்தால் இந்திய தென்பகுதியில் பாதுகாப்பு இல்லாமல் இருக்கும் என்று இராஜீவ் காந்தி கருதியிருக்கலாம் என்று இன்னும் சிலர் கருத்து கூறிகிறார்கள். இந்த காரணத்திற்காக ராஜீவ் காந்தி எதிர்த்தார் என்ற காரணம் குறிப்பிட்டு சொல்லப்படவில்லை.

1987ல் அன்றைய இலங்கை அதிபர் ஜெயவர்தனேவுடன் விடுதலை புலிகள் சமாதான ஒப்பந்தம் போடுவதாக இருந்தது. ஒப்பந்தத்தில் இருந்த கருத்துக்கள் போராளிகளுக்கு எதிராக இருந்ததால் பிரபாகரன் ஒப்பந்தத்தை ஏற்காமல் நாடு திரும்பினார். தன்னை அவமதித்து விட்டதாகவே இராஜீவ் நினைத்தார்.

மற்ற போராளிகள் ராவின் கை கூலிகளாக செயல்படுவதாக பிரபாகரன் குற்றம் சாட்டினார். இது எல்லாவற்றிக்கும் மேலாக இலங்கையில் அமைதி ஏற்படுத்துவதாக சொல்லி IPKP என்ற இந்திய அமைதிப்படை அனுப்பி வைத்தது. இதுவரை சிங்கள இராணுவம் செய்த கொடுமைகளை விட இந்திய இராணுவ கொடுமை செய்ததாக கூறப்படுகிறது. சிங்கர்களுக்கே இந்தியா மீது வெறுப்பு வந்தது. அத்னால் தான் சிங்கள வீரன் இராஜீவ் காந்தியை தாக்கிய சம்பவம் நடந்ததாக கருத்து நிலவுகிறது.

இலங்கையில் விடுதலை புலிகளை ஒடுக்க மற்றும் பிரபாகரனை கைது செய்ய “ஆப்ரேஷன் பவன்” என்ற பெயரில் தாக்குதல் நடத்த திட்டமிட்டனர். இதில், இந்திய அமைதிப்படைக்கும், ரா அமைக்கும் தகவல் பரிமாற்றங்கள் தெளிவின்மை, காழ்ப்புணர்ச்சிகள் அதிகம் இருந்தன. சில இடங்களில் தாக்குதல் ரா அமைப்பிடம் ஆலோசனை பெறாமல் இந்திய அமைதிப்படை தனிச்சையாக தாக்குதல் நடத்தியது. அதிகப்பட்சமாக விடுதலை புலிகளை வவ்னியாக்குள் பதுங்க வைக்க முடிந்ததே தவிர, அவர்களின் கொரில்லா தாக்குதலை சமாளிக்க முடியவில்லை.

தாங்கள் பயிற்சி கொடுத்த ஒரு இயக்கத்தை தங்களால் அழிக்க முடியாததை ராவுக்கு சங்கடமாக இருந்தது. தகவல் தொழிநுட்பம் வளராத காலம் என்பதால், ரா அமைதிப்படைக்கு தகவல் அனுப்புவது, உடனே செயல்படுவது காலதாமதம் இருந்தது. பின்னாளில், ராவுக்கு அமைதிப்படை ஒத்துழைப்பு வழங்கவில்லை என்ற விமர்சனம் எழுந்தது.

1990ல் பிரதமராக இருந்த வி.பி.சிங்யிடம் அப்போதிய இலங்கை அதிபர் கேட்டுக் கொண்டதின் பெயரில் இந்திய அமைதிப்படை திரும்ப பெற்றுக் கொண்டது.

ஒரு காலத்தில் தாலிபன், அல் கொயிதா போன்ற அமெரிக்காவின் செல்ல குழந்தைகளாக தான் இருந்தது. இரட்டை கோபுர தாக்குதலுக்கு பிறகு அமெரிக்காவே அவர்களில் கழுத்தை நசுக்க வேண்டியதாக இருந்தது. அதேப் போல் தான் இந்தியாவுக்கு விடுதலை புலிகள். அவர்கள் மட்டுமல்ல, ஈழப் போராளிகள் அனைவரும் ராவின் செல்லப்பிள்ளைகளாக இருந்தனர். ஆனால், வெளியுறவு கொள்கை மாற்றத்தால் ரா ஈழப்போராளிகளை மாறச் சொன்னது. மற்ற போராளிகள் ஏற்றுக் கொண்டது போல் விடுதலைப் புலிகள் ஏற்றுக் கொள்ளவில்லை.

IPKP செய்த தாக்குதல்களால் ராஜீவ் காந்தி மீது விடுதலைப் புலிகளுக்கு வெறுப்பு இருந்தது. ஒரு வேளை அவர் மீண்டும் பிரதமரால் தங்கள் போராட்டத்திற்கும், தனி தேசக் கொள்கைக்கும் எதிராக இருப்பார் என்று அவர்கள் நினைத்தனர்.

***

இந்திரா காந்தி மரணத்திற்கு பிறகு பிரதமரை பாதுகாப்பதற்காகவே சிறப்பு பாதுகாப்பு படை ஒன்று உருவாக்கினார். அதுவரை பிரதமர் பாதுகாப்பில் பார்த்துக் கொண்டு இருந்த ஐ.பி தங்கள் பொறுப்புகளை புது பாதுகாப்பு படையினரிடம் ஒப்படைத்தனர். இந்த பாதுகாப்பு படையினரின் பெயர் எஸ்.பி.ஜி (Special Protection Group).

பிரதமர் மட்டுமில்லாமல் அதிகார வர்க்கத்தை சேர்ந்தவர்களுக்கு பாதுகாக்கும் பொறுப்பும் இவர்களுக்கு இருந்தது. இதன் இயக்குனராக ஐபியில் பணியாற்றிய எச்.சுப்பிரமணியன் நியமிக்கப்பட்டார். பிரதமர் பாதுகாப்பு விஷயத்தில் இனி ஐ.பியின் தலையீட்டு இருக்கக்கூடாது என்று நினைத்தனர். அமெரிக்கா அதிபர் பாதுகாப்புக்கு எப்படி யுஸ்

சீக்ரெட் சர்வீஸ் இருக்கிறதோ இந்திய பிரதமருக்கு எஸ்.பி.ஜி என்று உருவானது.

பிரதமர் பாதுகாப்பு விஷயத்தில் எஸ்.ஜி.பி தான் முடிவு எடுப்பார்கள். ராஜீவ் பிரதமராக இருந்த போது பாதுகாப்பு வழங்கிய இந்த பாதுகாப்பு குழு, அவர் பிரதமர் பதவியில்லாத போது பாதுகாப்பு அழிக்கவில்லை. அதனால், ராஜீவ் காந்தி சராசரி அரசியல்வாதிக்கு அளிக்கப்படும் பாதுகாப்பு வழங்கப்பட்டு. அவரும் மனித வெடிக்குண்டு தாக்குதலால் இறந்தார்.

அதன் பின், பிரதமர் மட்டுமல்லாமல் முன்னாள் பிரதமருக்கும், அவரது குடும்பத்திற்கும் எஸ்.பி.ஜி பாதுகாப்பு வழங்கிறது. அவர்களது பாதுகாப்பு நடவடிக்கையிலும் இவர்கள் கவனம் செலுத்தினர்.

ராஜீவ் காந்தி படுகொலை இந்தியாவுக்கு மட்டுமல்ல ஈழப் போராட்டத்தை பற்றி மக்கள் வைத்திருந்த பார்வையையும் மாற்றிவிட்டது. அதனால், விடுதலைப் புலி அவர்கள் நாட்டுக்கு போராளியாக இருந்தாலும், ராவுக்கு தீவிரவாதிகளாக தெரிந்தனர். இந்தியாவுக்கும் எதிரியாக பேசப்பட்டனர்.

*****

# 12. ராவின் இன்னும் சில வெற்றிகள்

மற்ற அமைப்பு போல் உளவுத்துறை தங்கள் வெற்றி கதைகளை பகிரங்கமாக பகிர்ந்துக் கொள்ள முடியாது. கொண்டாட முடியாது. வேலை செய்து முடித்து, கூட்டத்தோடு கூட்டமாக ஒன்றும் தெரியாமல் பார்க்க வேண்டும். இதை நாங்கள் செய்து முடித்தோம் என்று சொன்னால், வெளி உலககிற்கு இந்தியா மீது இருக்கும் அபிபிராயங்கள் மாறும். இன்று, அமெரிக்கா எதிராக எழுப்பப்படும் பல விமர்சனங்களுக்கு காரணமாக இருப்பது அவர்களது சி.ஐ.ஏ எனும் உளவுத்துறை. அவர்கள் வேலை என்று எடுத்து கூறும் அளவிற்கு ஆதாரத்தோடு சில சமயம் மாட்டிக் கொள்வது தான் காரணம்,

இந்தியாவின் ராவின் பல வெற்றிகளை குவித்துள்ளது. ஆனால், இதை வெளியே அதிகாரப் புர்வமாக சொன்னால் அவர்கள் ஆப்ரேஷன் நடத்திய நாட்டுக்கும், நமக்கும் உறவு பாதிக்கப்படும். அதனால், சமக்கால வெற்றிகள் ரகசியமாகவே பாதுகாக்கப் படுகிறது.

இருந்தாலும், இருபது, முப்பது வருடங்களுக்கு முன்பு ரா குவித்த ஒரு சில வெற்றிகளை தெரிந்துக் கொள்வது அவசியம். அப்போது தான் ராவின் முக்கியத்துவம் புரியும். ராவின் வெற்றி என்று ஐ.எஸ்.ஐயே அதிகாரப் புர்வமாக ஏற்றுக் கொண்டதை பார்க்கலாம்.

**கஹூடா ஆராய்ச்சி**

கஹூடா ஆராய்ச்சி கூடம் பாகிஸ்தானின் முக்கியமான ஆராய்ச்சிக் கூடம். தூரம் செல்லும் ஏவுகனைகளை மட்டுமல்லாமல் அணு ஆயுதம் பரிசோதனையில் ஈடுபடும் மிக முக்கியமான இடம். 1974ல் இந்தியா பொக்ராம் அணு ஆயுத சோதனையில் வெற்றிப் பெற்ற பிறகு, பாகிஸ்தானும் அணு ஆயுத ஆராய்ச்சியில் இறங்கியது. ஆனால், இந்தியாவை இவர்களால் ரகசியமாக செய்யமுடியவில்லை. காரணம், ரா உளவாளி அவர்கள் ரகசியத்தை பெற்றது தான்.

கஹூடா ஆராய்ச்சி கூடத்தில் சக்தி வாய்ந்த யூரேனியம் பயன்படுத்ததுவதை அறிந்த ரா உளவாளி அதை உறுதி செய்ய நினைத்தனர். இதற்காக கஹூடா ஆராய்ச்சி கூடத்தில் நுழைந்து தகவல் எல்லாம் சேகரிக்கவில்லை. ஆராய்ச்சிக் கூடத்தில் அருகில் இருக்கும், முடி திருத்தக் கடைக்கு சென்று முடியை எடுத்து வந்து பரிசோதனை செய்தனர். பரிசோதனையில், யூரேனியத்தின் கதிர்வீச்சு இருப்பது தெரிந்தது.

1978ல் இருந்தே இந்தியாவுக்கு கஹூடா ஆராய்ச்சிக் கூடத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். அங்கு, அணு ஆயுத பரிசோதனை நடப்பதை உறுதி செய்துக் கொண்ட ரா அவர்களை உளவு பார்க்க மேலும் தீவிரப்படுத்தியது.

இந்திரா காந்தி பிரதமராக இருந்த போது பாகிஸ்தான் அணு ஆராய்ச்சி கூடத்தில் தாக்குதல் நடத்த திட்டமிட்டதாகவும் (ஆப்ரேஷன் பாத்காத்), அதற்குள் சீக்கிய தீவிரவாதிகளால் படுகொலை செய்யப்பட்டதால் அத்திட்டம் கைவிடப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இத்திட்டம் செயல்படாமல் இருக்கவே அந்நிய சக்தி சீக்கியர்க்ளை தூண்டி விட்டு இந்திரா காந்தியை கொன்றதாகவும் கூறுகிறார்கள் (ஆதாரம் “இந்திரா காந்தியை கொன்றது யார்?” - தாகூர் அலி).

இந்தியாவின் பொக்கிராம் அணு ஆராய்ச்சி இந்திய அமைச்சர்களுக்கே தெரியாமல் நடந்தது. ஆனால், பாகிஸ்தான் அணு ஆராய்ச்சி அவர்கள் எதிரி நாடான இந்தியாவுக்கு தெரிந்தது அவர்களின் பாதுகாப்பின் குறையல்ல. நமது ரா உளவாளிகளின் வெற்றி என்பது மறுக்க முடியாது.

***

ஆப்ரேஷன் மேகதூதன்

சிம்லா ஒப்பந்தம் தோல்வி அடுத்து இன்ந்தியா - பாகிஸ்தான் எல்லை பகுதியில் பாகிஸ்தானுக்கு எதிரான எல்லை சண்டை இன்று வரை

தொடர்ந்து கொண்டு தான்இருக்கிறது.

1984ல் தொடங்கிய ஆப்ரேஷன் மேகதூதன் (மேகதூத்) சியசென் பகுதியை இந்திய இராணுவ கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. இன்று வரை யுத்தம் தொடர்ந்தாலும், இந்தியாவின்கை ஓங்கியிருப்பதற்கு காரணம் ராவின் உதவி என்று மறுக்க முடியாது.

**தென் ஆப்பிரிக்கா**

இரண்டாம் உலக யுத்தத்திற்கு பிறகும், கறுப்பர்களை ஒதுக்கி வைப்பதை தென் ஆப்பிரிக்காவில் தொடர்ந்து கொண்டு தான் இருந்தது. உலக நாடுகள் பல கண்டித்தும் தென்ஆப்பிரிக்காவில் கறுப்பர்களுக்கு எதிரான சட்டங்கள் மாறவில்லை. அதனால், உலக நாடுகள் தென் ஆப்பிரிக்காவை நட்பு உறவுக் கொள்ளவதை புறக்கணித்தது. தென்ஆப்ரிக்காவில் ஆண்ட தேசிய கட்சி ஆட்சியில் இருக்கும் வரை (1948-1994), நிலைமை இப்படி தான் இருந்தது.

அப்பிரிக்கா நாடுகளில் நடக்கும் போராட்ட குழுக்களுக்கு ஓய்வு பெற்ற ரா அதிகாரிகள் பயிற்சி அளித்தனர். போராட்ட மக்களுக்கு உதவினர். ராவில் உதவியால், நபிபியா தென் ஆப்பிரிக்காவிடம் 12 மார்ச், 1990 அன்று விடுதலை பெற்று தனி நாடானது. நபிபியா தனி தேசம் வெற்றிக் கொண்டாடத்தில் இந்தியாவுக்கும், ராவுக்கும் தங்களின் நன்றியை தெரிவித்தனர்.

இமயமலை சாகசம்

16 ஆக்டோபர், 1964 அன்று சீனா தனது முதல் அணு ஆயுத சோதனையை வெற்றிகரமாகநடத்தியது. 1961ல் சீனாவுடன் யுத்தத்தில் தோல்வியுற்ற இந்தியாவுக்கு கவலைப்படும்படியான செய்தியாக இது இருந்தது. இன்னொரு கம்யூனிச தேசத்தின் (முன்பு ரஷ்யா) கையில் அணு ஆயுதம் இருப்பது அமெரிக்காவுக்கு தொல்லையாக அமைந்துவிடுமோ என்று அஞ்சியது. அதனால், இந்தியா - அமெரிக்கா

இரண்டு நாட்டு உளவுத்துறையான சி.ஐ.ஏ- ரா சேர்ந்து சீனாவை கண்காணிக்க தீர்மானித்தது.

சீனாவை உளவு பார்க்க மனித சக்திகளால் (HUMINT) எளிதான காரியமில்லை. அதனால், செய்குறி (ELINT - SIGNIT ஒரு பகுதி) வைத்து சீனாவை கண்காணிக்க முடிவு செய்தார்கள். இமயமலையில், மலையேறும் நந்த தேவி என்பவரின் உதவியை கொண்டு இமயலையில் சீனாவை கண்காணிக்கும் கருவியை பொருத்தினர். அந்த கருவி மூலம் ராவின் கீழ் இயங்கும் ஏ.ஆர்.சியில் சீனாவின் ஒவ்வொரு அசைவுகளையும் கண்காணித்தது.

ஆனால், சமிபக்காலமாக சீனாவை கண்காணிக்க வைக்கப்பட்ட கருவி இருந்த இடத்தில் இல்லை என்பது அதிர்ச்சிகரமான தகவல்.

ஆப்ரேஷன் சக்தி

பொக்ரான் அணு ஆயுத சோதனைக்கு பிறகு இந்தியா நடத்திய இரண்டாவது அணு ஆயுதசோதனை. இந்திரா காந்தி காலம் போல் இல்லை. தகவல் தொழில்நுட்பம் வளர்ந்து வரும் காலம். கொஞ்சம் தவல் கசிந்தாலும், விரைவாக பரப்பிவிட முடியும். சர்வ ஜாக்கிரதையாக செய்ய வேண்டிய காரியம்.

இந்தியா வானில் சுற்றிவரும் அமெரிக்க சாட்டிலைட் கண்களில் மண்ணை தூவுவது சவாலான விஷயம். ராவுக்கு ஐ.எஸ்.ஐ, சி.ஐ.ஏ உளவாளிகளை பற்றி நன்கு தெரியும். கொஞ்சம் சந்தேகம் வந்தாலும் மோப்பம் பிடித்து தகவல் சேகரித்து விடுவார்கள். அதனால், இந்த முறை அணு ஆயுத சோதனை நிலத்து கீழ் நடத்த திட்டமிட்டனர்

1995ம் ஆண்டு இந்தியாவின் அமெரிக்கத் தூதராக இருந்தவர் ஃபிராங்க் விஸ்னர். அப்போது, இந்தியாவின் அணு ஆயுத சோதனைகளை அவர்களின் உளவு சாட்டிலைட்கள் எப்படி படமெடுத்தன என்று சொல்லி இந்திய அதிகாரிகளுக்கும், விஞ்ஞானிகளுக்கும் அந்த படங்களைக்

காட்டினார். அதை வைத்துக் கொண்டு அமெரிக்க சாட்டிலைட்டின் கண்களிலிருந்து எப்படி தப்பிக்கலாம் என்பதை ஆராய்ந்து செய்தனர்,

இராணுவ முகாம் அமைப்பது போலவே இடத்தை வடிவத்திருந்தனர். ஒவ்வொருவிஞ்ஞானிகளுக்கும் இராணுவ உடை கொடுத்தனர். அணு ஆராய்ச்சிக்காக வேலைகள் இரவிலே நடத்தப்பட்டது. காலையில், எல்லா பொருட்களையும் இருந்த இடத்தில் வைத்துவிடுவார்கள்.

அப்ரேஷன் சக்தி என்ற பெயரில் நடத்தப்பட்ட சோதனை, மே 11, 1998 அன்று ஐந்து அணுகுண்டுகள் வெற்றிகரமாக நிலத்தடி பரிசோதனை செய்தனர். வழக்கம் போல், எல்லாநாடுகளும் இந்தியாவை கண்டித்தது. இந்தியா யுத்தத்துக்கு தயார் படுத்தி வருகிறது என்று பாகிஸ்தான் கூறியது.

அமெரிக்கா நினைத்திருந்தால் விஞ்ஞானி குழுவுக்குள் கருங்காலியை உருவாக்கி திட்டத்தை தோல்வி அடைய செய்திருக்க முடியும். அவர்களுக்கு இது பெரிய விஷயமில்லை. ஆனால், அவர்களுக்கு சந்தேகம் வந்தால் தானே இதை எல்லாம் செய்வார்கள். இப்படி ஒரு திட்டம் வெளியே தெரியாமல் பார்த்துக் கொண்டது தான் ராவின் வெற்றி என்று சொல்லலாம்.

அன்றைய பா.ஜ.க அரசு விமர்சனங்களை பற்றி கவலைப்படவில்லை. ஆப்ரேஷன் சக்தியின் தலைமை வகித்த அப்துல் கலாம் அதிபர் பதவிக்கு முன் நிறுத்தினர். கலாமும் அதிபர் தேர்தலில் வெற்றிப் பெற்றார்.

***

## தீவிரவாதிகளுக்கு எதிரான போர்

இந்தியாவில் தீவிரவாத தாக்குதல் நடக்கிறது எனால் ஒன்று பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ ஆசியுடன் நடந்திருக்க வேண்டும் அல்லது பாகிஸ்தானே நடத்தியிருக்க வேண்டும். 9/11 அமெரிக்க தாக்குதலுக்கு

பிறகு தீவிரவாதத்திற்கு எதிரான போர் நடத்த போவதாக அறிவித்து உலக நாடுகளின் ஆதரவை கேட்டது.

தீவிரவாத எதிரான போர் என்று அமெரிக்க சொன்னாலும், தாலிபனையும், ஒசமா பின் லெடனையும் அழிப்பதற்கான யுத்தம் என்பது சொல்ல வேண்டியதில்லை. இந்தியாவும் பல தீவிரவாத தாக்குதலில் பாதிக்கப்பட்டுள்ளதால் அமெரிக்காவுடன் கை கோர்த்தது. ஆனால், பாகிஸ்தன் அமெரிக்காவுக்கு உதவுவதில் கொஞ்சம் தர்ம சங்கடம் இருந்தது. காரணம், பாகிஸ்தனுக்கும், ஆப்கானிதானுக்கு டூர் போவதுப் போர் தாலிபன் வீரர்கள் வந்து சென்று இருக்கிறார்கள். ரஷ்ய ஆக்கிரமிப்பின் போது ஆப்கானிஸ்தனுக்கு உதவுவத சொல்லி அமெரிக்காவிடம் பல லட்ச டாலர்கள் சம்பாதித்துள்ளது. எல்லாவற்றிக்கும் மேல் ஆப்கான் ஒரு இஸ்லாமிய தேசம்.

ஒரு இஸ்லாமிய தேசத்தை இன்னொரு இஸ்லாமிய தேசம் எப்படி உதவாமல் இருக்க முடியும் என்று முஷ்ரப் யோசித்தார். அமெரிக்காவுடன் சேராவிட்டால், அவர்களை பகைத்து கொள்வதோடு மட்டிமில்லாமல் தீவிரவாத தேசப்பட்டியலில் பாகிஸ்தானும் சேர்ந்துவிடும் என்று அஞ்சினார். இறுதியாக, பாகிஸ்தானும் அமெரிக்காவுக்கு உதவுவதாக அறிவித்தது. முதல் முறையாக இந்தியாவும், பாகிஸ்தானும் ஒரே அணியில் இருந்து தீவிரவாதத்திற்கு எதிராக போர் புரிந்தது.

ஆப்கானிஸ்தானுக்கு எதிரான போரில் இரண்டு நாடுகளையும் அமெரிக்க பயன்படுத்தினாலும், பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐயை விட இந்தியாவின் ராவின் தகவலையே அதிகம் நம்பியது. ஐ.எஸ்.ஐ மீது உள்ளூர அமெரிக்காவுக்கு இருந்த சந்தேகம் ஒரு காரணம் என்று சொல்லலாம். அந்த சமயத்தில், முஷ்ரப்பை கொல்ல நடந்த தாக்குதலை தடுக்க, ரா அதிகாரி கொடுத்த தகவல் முக்கிய காரணமாக இருந்தது. இதனால், அமெரிக்காவுக்கு ரா மீது மேலும் நம்பிக்கை அதிகரித்தது.

*****

# 13. கருப்பு வெள்ளி: RAW vs ISI ஒரு நாள் ஆட்டம்

“என் கடத்தல் பொருளை வெளியே விட வேண்டும்”

“கடத்தல் சரக்கா…அப்படி ஒன்று பிடித்து வைத்ததாக தெரியலையே”

“எனக்கு தெரியும். என் பொருளை அடித்தவர்களை கண்டுபிடிப்பது பெரிய விஷயமில்லை. ஆனால், வெளியே கொண்டு வர உங்கள் ஒத்துழைப்பு வேண்டும் என்று எனக்கு தெரியும்”.

“நீ எத பத்தி பேசுற புரியல்ல…”

“உங்களுக்கா? எத்தனையோ முறை உங்கள் வலையில் சிக்க வைக்கப்பார்த்தீர்கள். நான் நழுவும் மீனாக இருந்தேன். இப்போது, என் சரக்கை வைத்து விளையாட்டு காட்டுகிறீர்கள். சரி! நான் என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள். ஆனால், அதற்கு முன்பு இந்த சரக்கு மத்தியக் கிழக்கு நாடுகளுக்கு போக வேண்டும்”

“இப்போதாவது புத்தி வந்ததே. பாகிஸ்தானில் தொழில் செய்ய நினைக்கும் பொது எங்களை பகைத்துக் கொள்ளக் கூடாது என்பது உனக்கு புரிந்ததா?”

“நேரே விஷயத்துக்கு வாருங்கள்”

“நீ கடத்தல்காரனாக இருந்தாலும், நீ உண்மையான முஸ்லிம். இந்தியாவில் முஸ்லிம்களை எப்படி நடத்துகிறார்கள்? பாபர் மசூதி இடித்தவர்களை இந்தியா என்ன செய்தது? அங்கு இறந்து நம் இனத்தவர்களுக்காக நாம் பதிலடி கொடுக்க வேண்டாமா?”

“உங்கள் மத பிரச்சாரம் வேண்டாம். என் கடத்தல் சரக்குக்கு பதில் உதவி என்ன வேண்டும் என்பதை சீக்கிரம் சொல்லுங்கள்.”

மும்பையில் முக்கியமான பகுதியில் வெடிக் குண்டு வைக்க வேண்டும் என்று ஐ.எஸ்.ஐ தாவூத் இப்ராஹிமிடம் கூறியது.

மும்பை. புது டெல்லி இந்தியாவின் அரசியல் தலைநகரம் என்றால், மும்பை பொருளாதார தலைநகரம். கடத்தல், ரியல் எஸ்டேட், சினிமா என்று தன லட்சுமி வாழும் தொழில் இருக்கும் முக்கிய நகரம். எதற்கும் துணிந்தவர்கள் இங்கு வந்து பணம் பார்க்கலாம் என்று இருந்தது. அப்படிப்பட்ட நிழல் உலகத்தின் மூடி சுடா மன்னனாக இருப்பவன் தாவூத் இப்ராஹிம்.

ப்ளேட் பக்கிரியாக இருக்கும் போதே இவனை கவனித்திருந்தால் இப்படி ஒரு திட்டத்திற்கு எதிரி நாட்டிடம் உதவி செய்திருக்க மாட்டான். அவன் கொடுக்கும் பணம், பயம் மும்பை கண்களை மறைத்தது.

கராச்சிக்கும், மும்பைக்கும் தாவூத்தின் கடத்தல் சரக்கு கப்பலில் பிரச்சனையில்லாமல் சென்று வரும். தாவூத்துக்கு அரசியவாதிகளிடம் நெருக்கம் உண்டு. பல சினிமா படங்கள் தாவூத்தின் ஆதரவுடனே தயாரிக்கப்பட்டது. சினிமாக்காரர்களை மிரட்டி பணமும் பரிக்கப்பட்டது.

எந்த வித கலப்படம் இல்லாமல் நூறு சதவீதம் அக்மார்க் கடத்தல்காரன். மதரீதியான எந்த சிந்தனையும் கிடையாது. இவனை வளைக்க ஐ.எஸ்.ஐ எத்தனையோ முறை முயன்றும் அவர்கள் வழிக்கு கொண்டு வர முடியவில்லை. அதனால், அவனது நாடி துடிப்பான அவனது கடத்தல் பொருளில் கை வைத்து அவர்கள் வழிக்கு கொண்டு வந்தனர். வேறு வழியில்லாமல் தன் தொழிலுக்காக ஐ.எஸ்.ஐக்கு உதவ வேண்டியதாக இருந்தது.

ஐ.எஸ்.ஐ கொடுக்கும் வெடிபொருளை எந்த சேதாரம் இல்லாமல் மும்பைக்கு கொண்டு வர வேண்டியது தான் தாவூத்தின் பொறுப்பு. அதன் பின், நடக்க போவதை எல்லாம் டைகர் மேமோன் பார்த்துக்கொள்வான். டைகர் தாவூத்தை போல் கடத்தல்காரன்.

தாவூத்தின் நண்பன். வெடிபொருளை கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பது ஐ.எஸ்.ஐ முன்பே அவனிடம் சொல்லியிருந்தது.

வெடிபொருளை மும்பைக்கு கொண்டு ஐ.எஸ்.ஐயால் முடியாதது என்பதில்லை. தகவல் ராவுக்கும், ஐபிக்கும் கொஞ்சம் கூட கசியக் கூடாது. டிசம்பர் 6 பிறகு இப்போது தான் இந்திய முஸ்லிம் தங்கள் வழிக்கு வர தொடங்கியிருக்கிறார்கள். இதை விட்டுவிட கூடாது. அதனால் தான் தாவூத்தின் உதவி தேவைப்பட்டது. அதுமட்டுமல்ல, கடல்வழி ரகசிய பாதை தாவூத்துக்கு மட்டுமே தெரிந்த சிதம்பர ரகசியம். ஆபத்தான பாதை, படகு சவாரி சாத்தியமில்லாத பாதை. இந்த பாதையில் கொண்டு வர முடியுமா என்று யோசிக்க முடியாத அளவிற்கு கடத்தல் செய்வதில் தாவூத் நிகர் தாவூத் தான்.

கராச்சியில் இருந்து வந்த வெடிபொருளை தனது ஆட்கள் கொண்டு மும்பை கடலோர பகுதிக்கு எடுத்து வந்தான். அங்கு இருந்து டைகர் ஏஜெண்ட்டுக்கள் பத்திரமாக வெடிபொருளை பெற்றுக் கொண்டனர். இடையில், போலீஸ் கண்ணில் இவர்கள் படவில்லையா என்று கேட்கக் கூடாது. எல்லாம் தனலக்ஷ்மி நாமம்!!!

வெடிபொருளை கலந்து பிசைந்து எப்படி வெடிகுண்டு தயாரிக்க வேண்டும் என்பதை டைகர் மேமோன் ஆட்களுக்கு முன்பே ஐ.எஸ்.ஐ பயிற்சி அளித்திருந்தது. ஐ.எஸ்.ஐயின் எஸிப்பி பிரகாரம் வெடிகுண்டை தயாரித்தனர்.

வெடிகுண்டி வெடிப்பதற்காக தேதியை ஐ.எஸ்.ஐ குறித்தது.

மார்ச் 12,1993 வெள்ளிக்கிழமை.

ஜாவேத் ஸிக்னா என்பவனிடம் திட்டத்தை பொறுப்பில் விட்டுவிட்டு டைகர் மேமோன் முன் தினமே குவைத்துக்கு தப்பி சென்றான்.

காலை ஒன்பது மணியில் மும்பையில் முக்கிய பகுதியில் வெடிகுண்டுகளை கார்கள், ஸ்கூட்டர் கொண்டு ஜன நடமாட்டம் அதிகம்

இருக்கும் பகுதியில் நிறுத்தினர். சுமாரி பத்து குண்டுகள் முக்கிய பகுதியில் வெடித்தது. இதுபோக சஹாரா ஏர்போர்ட்டில் சில கையெறி குண்டுகள் வெடித்தன.

275 மரணம், 713 பேர் உடலில் படுகாயம் என்று அன்றைய செய்தியாக இருந்தது. இப்படி ஒரு வெடிகுண்டு தாக்குதல் நடந்த பிறகு உளவுத்துறையின் தலை உருட்டாமல் எப்படி இருக்க முடியும்.

சீக்கியர்களின் தீவிரவாத தாக்குதலையும், காலிஸ்தான் ஆதரவு குரலை கொஞ்சம் குறைய தொடங்கிய நேரத்தில், ஐ.எஸ்.ஐ நமது இன்னொரு விரலை வைத்து இரண்டாவது கண்ணை குத்தும் என்று யாரும் எதிர்பாத்திருக்க மாட்டார்கள்.

ஐ.எஸ்.ஐ, அரசியல் பிரமுகர்கள், எல்லை பகுதி என்று எல்லாவற்றையும் கவனமாக தகவல் சேகரித்த உளவுத்துறை, கடத்தல்காரர்கள் கொண்டு இப்படி குண்டு வெடிப்பு செய்வார்கள் என்று எதிர்பார்த்திருக்கவில்லை. கடத்தல் செய்து சம்பாதிக்க நினைப்பவர்கள், வெடிகுண்டு வைத்து தப்பி வெளிநாட்டுக்கு ஓடக் கூடியவர்களாக உளவுத்துறை அவர்களை நினைத்து பார்க்கவில்லை.

1993 மும்பை குண்டு வெடிப்பு ஐ.எஸ்.ஐயின் வெற்றி மட்டுமல்ல... ரா, ஐபியின் தோல்வியும் கூட.

*****

# 14. கார்கில் யுத்தம்: RAW vs ISI டெஸ்ட் மெட்ச்

எந்த ஒரு குண்டு வெடிப்பு சம்பவம் நடந்தப் பிறகு, காவல் துறையினரும் அதை சார்ந்தவர்களும் முதலில் சொல்லுவது, உளவுத் துறை எங்களுக்கு தகவல் கொடுக்கவில்லை" என்பது தான். ஒவ்வொரு தீவிரவாத தாக்குதலுக்கு பிறகு, பலியாகும் மக்களை அடுத்து பலி ஆடாக மாறுவது உளவுத்துறை தான்.

ரா சரியாக தகவல் திரட்டவில்லை. சொல்லவில்லை என்பது எல்லாம் பெரும்பாலும் அரசியல்குற்றச்சாட்டாகவே இருந்திருக்கிறது. சில தாக்குதல் எதிரிகள் தாக்கப் போகிறார்கள் என்பது ரா கணிக்காமல் போயிருந்தால், அது ராவின் தோல்வி என்று சொல்லலாம். ஆனால், ரா தகவல் கொடுத்து சரியான நேரங்களில் நடவடிக்கை எடுக்காமல் இருப்பது உள்ளூர் காவலர்களும், தேசிய பாதுகாப்பில் இருப்பவர்கள் பொறுப்பு. தங்கள் தவறை மறைக்க ரா மீது பழி பொடுவது பலமுறை தொடர்ந்து இருக்கிறது.

ராவின் தோல்விகள் பட்டியலிடும் போது கனிஷா விமான விபத்து, கார்கில் யுத்தம், 26/11 மும்பை தாக்குதல் போன்ற சம்பவங்களை பெரும்பாலும் சொல்வார்கள். இதில் கனிஷா விமான விபத்தை முன்பே பார்த்துவிட்டோம். அடுத்து முக்கியமானது கார்கில் யுத்தம்.

உளவுத்துறை அதிகம் விமர்சிக்கப்பட்டது கார்கில் யுத்தத்தின் போது தான். தீவிரவாதி தாக்குதலாவது பரவாயில்லை எங்கு தாக்குதல் நடத்தப் போகிறார்கள், யார் நடத்தப் போகிறார்கள், என்னநோக்கம் போன்ற பல விஷயங்கள் இருக்கிறது. இதில் தவறு நடக்க வாய்ப்பிருக்கிறது. ஆனால், ஒரு நாட்டின் இராணுவம் தாக்கவருவது வெளியுறவு பார்த்துக் கொள்ளும் ரா அமைப்பு எப்படி தெரியாமல் போனது, என்ன செய்துகொண்டு இருந்தார்கள் போன்ற கடுமையான விமர்சனத்தை ரா சந்திக்க வேண்டியதாக இருந்தது.

நாவஸ் ஷெரீப் நட்பு கரம் நீட்டி வாஜ்பாய் வரவேற்றாரோ, இன்னொரு பக்கம் கார்கில் யுத்தம் நடத்த திட்டட்டிருக்கிறார் என்பது யாரும் யோசித்திருக்க முடியாது. இது சாமான்ய மனிதனுக்கு பொருந்தலாம். ஆனால், இந்த உளவுத்துறையான ரா எப்படி கண்டு பிடிக்காமல் போனது.

உண்மையை சொல்லுவதென்றால், இப்படி ஒரு தாக்குதல் பாகிஸ்தான் திட்டமிட்டுயிருக்கிறார் என்பது ராவுக்கு மட்டுமல்ல பாகிஸ்தான் பிரதமர் நாவாஸ் ஷெரிப்புக்கே தெரியுமா என்பது சந்தேகம் தான்.

கார்கில் யுத்தம் நடக்கும் போது, உலக நாடுகள் பாகிஸ்தானை கண்டித்தது. அப்போது, இந்தியாவுக்கு எதிராக எந்த தாக்குதலுக்கும் அனுமதி அளிக்கவில்லை என்று அவர் மறுத்தார். தீவிரவாதிகளின் உடுருவல் என்று கூறினார்.

ஆனால், போர் தொடங்கிய பிறகு பாகிஸ்தான் இராணுவ ஜென்ரல் முஷ்ரப் பிஜிங்கில் இருந்து தனது இராணுவத்துக்கு கட்டளை பிறப்பித்தது எல்லாம் இடை மறைத்து ரா பதிவு செய்து, பாகிஸ்தான் இராணுவம் கார்கில் யுத்தத்தில் சம்மந்தப்பட்டிருப்பதை வெளிச்சத்துக்கு கொண்டு வந்தனர்.

தன்னுடைய அனுமதியில்லாமல் இராணுவம் தாக்குதல் நடத்துகிறது என்றார். ஒரு நாட்டின் இராணுவம், அதிபருக்கு தெரியாமல் தாக்குதல் நடத்துகிறதா என்று நாவாஸ் பதிலை ஏளனமாக பார்த்தனர். யாரும் அவரின் பதிலை நம்புவதாக இல்லை.

பிஜிங்யில் இருந்து விமானத்தில் திரும்பிய முஷ்ரப்பை, தரை இறங்க அனுமதிக்கப்படவில்லை. நடுவானிலே சுத்திய விமானாம் ராவல்பாடியில் தரையிரங்கியது. நாவாஸ் ஜென்ட்ரல் முஷ்ரப்பை கைது செய்ய ஆணையிட்டார். ஆனால், அதற்கு நேர்மாறாக பாகிஸ்தான் இராணுவம் நாவாஸ் ஷெரீப்பை கைது செய்தது.

கார்கில் யுத்தம் வெற்றி தோல்வி இல்லாத யுத்தம். இதில் பாகிஸ்தான் சார்பாக பலியானது நாவாஸ் ஷெரீப்பின் பதவியும் மரியாதையும் தான். இந்தியாவின் சார்பில், ரா உளவுத் துறைசரியான தகவல் சேகரிக்கவில்லை என்று கடுமையான விமர்சனத்தை சந்திக்க வேண்டியதை அவர்களால் தவிர்க்க முடியவில்லை.

முஷ்ரப் இப்படி ஒரு தாக்குதல் நடத்த இருக்கிறார் என்பது நாவஸ் ஷெரீப்புக்கு தெரிந்திருக்க நியாயமில்லை என்று தான் தோன்றுகிறது.

கார்கில் யுத்தத்தில் ராவின் தோல்வியை ஆராய கே.சுப்பிரமணியன் தலைமையில் விசாரணை மேற்கொள்ளப்பட்டது. அப்போது, ராவின் கீழ் இயங்கும் ஏவியேஷன் ரிசர்ச் சென்டர் (ARC) விமானங்கள் திபெத்தை கண்ணாணிப்பதில் தீவிரமாக இயங்கியது. நவாஸ்ஸிடம் கை குலுக்கும் போது சீனா ஏதாவது செய்யுமோ என்ற சந்தேக கண்ணோடு சீனாவை உளவு பார்த்தார்கள்.

நடந்ததை பார்த்தால் கார்கில் யுத்தத்தில் பாகிஸ்தானுக்கோ அல்லது ஐ.எஸ்.ஐ எந்த உள்நோக்கமும் இல்லை. எல்லை விரிவுப்படுத்துவதற்காக நடந்த யுத்தமாகவும் இல்லை. மாறாக நவாஸ் ஷெரீப்பின் பெயரை கெடுத்து, முஷ்ரப் அதிபர் பதவியில் அமருவதற்காகவே நடத்தப்பட்ட யுத்தம் போல் இருந்தது.

இதில், இந்தியா சில வீரர்களை இழந்ததை தவிர பெரிய இழப்பு ஒன்றுமில்லை. உலகளவில் பாகிஸ்தான் தன் பெயரை கெடுத்துக் கொண்டது.

***

## 26/11 மும்பை தாக்குதல்

“கடலுக்கு போனவங்க இவ்வளவு நாளா கரை திரும்பல. என்னாச்சோ தெரியல….” என்று கவலையுடன் உனா கிராமத்து மீனவர்கள் கரையை பார்த்தப்படி இருந்தனர்.

புயலோ, கடல் சீற்றமோ எதுவும் நடந்ததாக தெரியவில்லை. திசை தெரியாமால் வேறு எங்காவது சென்றுயிருப்பார்களா என்ற சந்தேகம் ஒரு சிலருக்கு இருந்தது. பதட்டமும், பரபரப்பும் கரையில் தங்கள் நண்பரின் படகுக்காக காத்திருக்க…. கடலில் தீவிரவாதிகளால் சுட்டுக் கொல்லப்பட்டது தெரிந்திருக்க நியாயமில்லை.

முதல் தாக்குதல் லீயோ கஃபே தொடங்கினர். மும்பைவாசிகளும், வெளிநாட்டவர்கள் சந்தோஷமாக இருந்து இரவு பொழுது, தங்களை சுற்றி பிணங்கள் மட்டுமே இருக்க போகிறது என்று தெரிந்திருக்கவில்லை.

நாடி, நரம்பு எல்லாம் சேர்த்து இந்தியா மீது வளர்த்த வெறுப்புடைவர்களை தான் ஐ.எஸ்.ஐ தேர்வு செய்து அனுப்பியது. செல்லும் வழி எல்லாம் தூப்பாக்கியால் சுட்டுக் கொண்டே சென்றனர். தீவிரவாதிகளின் குண்டுகள் என்றும் பெண்கள், குழந்தைகள் என்று பேதம் பார்ப்பதில்லை. கண்ணில் பட்டவர்களை ஒவ்வொருவரை சுட்டு விழ்த்திக் கொண்டே இருந்தனர்.

தாஜ் ஹோட்டல், சத்திரபதி மும்பை ரயில் நிலையம், கமா மருத்துவமனை என்று அவர்கள் சென்ற இரத்த வெள்ளங்கள் நிரைந்தது.

ஒரு தாஜ் ஹோட்டலை ஆக்கிரமித்து கொலை வெறியாட்டத்தை நடத்திக் கொண்டு இருக்க, இன்னொரு இடத்தில் கமா மருத்துவமனையில் தாக்குதல் நடத்திய இரண்டு பேர் ஒருவன் மும்பை போலீஸால் கொல்லப்படுகிறான். இன்னொருவன் கைது செய்யப்பட்டான். அவன் பெயர் கசாப்.

இந்த இடத்தில் தீவிரவாதிகள் நடத்திய தாக்குதல் அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. 166 பேர் இறந்தனர், 300 பேர் மேல் படுகாயம் அடைந்தனர் என்ற புள்ளிவிபரத்தோடு முடித்துக் கொள்வோம். இதற்கு

மேல் 26/11 தாக்குதல் பற்றி பேசினால் ஐ.எஸ்.ஐ வெற்றி கதையை படிக்கிறோமா என்ற சந்தேகம் வரும்.

இப்படி ஒரு கொடூரமான தாக்குதல் நடத்த இருப்பது ரா, ஐபி போன்ற உளவுத்துறை எப்படி சேகரிக்காமல் விட்டனர். மூன்று நாட்களாக எத்தனை போலீஸ், எத்தனை கமண்டோக்கள் தூங்காமல் தாஜ் ஹோட்டல் வெளியே என்ன செய்வார்கள். யாரை கொல்லப்போகிறார்கள் என்று அஞ்சியிருப்பார்கள். அமெரிக்காவுக்கு 9/11 என்றால், இந்தியாவுக்கு 26/11 என்று சொல்லும் அளவிற்கு இந்த தினம் பிரசித்திப்பெற்ற தினமாகிவிட்டது. இந்தியாவே மறக்க நினைத்தாலும் மறக்க முடியாத தினம்.

உண்மையில், இப்படி ஒரு தாக்குதல் நடந்த பிறகு உளவுத்துறை தேவையா என்ற அர்த்தத்தில் இதை அனுகப்பட்டது.

மூன்று மாதங்களுக்கு முன்பே, பாகிஸ்தான் தீவிரவாதிகள் தாக்குதல் நடத்தக் கூடும் என்று ரா தகவல் சொல்லியிர்ந்தது. அதுவும், தீவிரவாதிகளின் தாக்குதலுக்கு முன்பு அவர்கள் தொலைப்பேசியில் பேசுவதை இடைமறித்து (SIGINT) தேசிய பாதுகாப்பு ஆலோசகரிடம் தகவல் கொடுக்கப்பட்டது. ஆனால், இந்த தகவலை பெரிதாக எடுத்துக் கொள்ளப்படவில்லை என்று இன்னொரு கருத்தும் உண்டு. எது என்ன பேசினாலும், கருத்து கூறினாலும் நடந்த சம்பவத்தை மாற்ற முடியாது. இறந்த உயிர்களை மீட்க முடியாது.

26/11 தாக்குதலில் உளவுத்துறை பெயர் சரிந்தது என்பதை யாராலும் மறுக்க முடியாது. மும்பை தாக்குதல் ஈடுப்பட்ட ஹூஜி முக்கிய பொறுப்பில் இருக்கும் ஷேக் அப்துல் க்வாஜாவை கைது செய்ய ரா உளவாளி கொடுத்த தகவல் தான் உதவியாக இருந்தது. சரிந்த தங்களது பெயரை கொஞ்சம் ரா காப்பாற்றிக் கொண்டது.

இருந்தும், 26/11 இந்தியாவை பொருத்தவரை கருப்பு தினம் என்பதை கல்வெட்டி பொரிக்கப்பட்டுவிட்டது.

# 15. கருப்பு புலி கருப்பாடான கதை

எந்த துறையில் சார்ந்தவராக இருந்தாலும் தங்கள் வெற்றியை நாலு பேருக்கு சொல்லி சொந்தஷப்படுவார்கள். குறைந்தது தன் அப்பா, அம்மா, மனைவியிடமாவது சொல்ல வேண்டும் என்று இருக்கும். நண்பர்களோடு பகிர்ந்து கொண்டு கொண்டாட வேண்டும் போல இருக்கும். ஆனால், இதை எல்லாம் ஒரு உளவாளி செய்ய முடியாது.

தான் ஒரு உளவாளி என்று வெளியே சொல்ல முடியாத போது, அவர்களால் தங்கள் வெற்றியை எப்படி கொண்டாட முடியும். "ஒசூரை மீட்ட சுந்தர பாண்டியா", "காவேரி தமிழகத்திற்கு தந்த வள்ளலே", "வெற்றி நாயகனே", “எழுச்சி நாயகனே” என்று உளவுத் துறை தங்கள் வெற்றியை கட் அவுட்டாக அல்லது சுவரொட்டியாக ஒட்டிக் கொண்டு இருக்க முடியாது. தலைமை அதிகாரிகளின் பாராட்டை தவிர அவர்களுக்கு ஊக்க மருந்து என்று எதுவுமில்லை. அதே சமயம் மாட்டிக் கொண்டால், ரா உளவாளியை அனுப்பியதை இந்திய அரசு ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

இந்திய அரசு மட்டுமல்ல. உளவாளி உளவு பார்க்க சென்ற இடத்தில் மாட்டிக் கொண்டால், எந்த அரசும் உளவு பார்க்க அனுப்பியதை ஒப்புக்கொள்ளாது. அதே சமயம், தங்கள் நாட்டு பிரஜையை திருப்பி அனுப்ப வேண்டும் என்பதை போல் தான் அனுகுவார்கள். பல முறை, நம்மிடம் மாட்டிய ஐ.எஸ்.ஐ அதிகாரிகளை பாகிஸ்தானிடம் ஒப்படைக்கும் போது ரா உளவாளிகளை இந்திய அரசு மீட்டுக் கொள்ளும். சில சமயம் இருந்த இடம் தெரியாமல் இருத்தரப்பிலும் கொல்லப்பட்ட உளவாளிகளும் உண்டு.

ரவிந்தர கௌஷிக் அழகான இளைஞன். ராஜஸ்தானில் இருக்கும் கங்கநகரில் பிறந்தவர். மேடை நடிகர். தன் திறமையால் எளிதில் கவரக்குடியவர். அவனது திறமையை பார்த்து ரா உளவு இவனை வேலைக்கு சேர்த்துக் கொண்டது.

அப்போது, இந்தியா - பாகிஸ்தான் போர் நடந்து முடிந்தக் காலம். பாகிஸ்தான் மீண்டும் இந்தியா மீது தாக்குதல் நடத்தலாம் என்று சந்தேகம் இருந்தது. ரவிந்தரை பாகிஸ்தானுக்கு உளவு பார்க்க அனுப்பியது.

பிறப்பால் இந்துவான ரவிந்த்தரை முஸ்லிமாக மாற பயிற்சி அளித்தார்கள். அவனுக்கு உருது கற்று தரப்பட்டது. குரான் போதிக்கப்பட்டது. சுன்னத் செய்துக் கொண்டார். கடுமையான இரண்டு வருட பயிற்சிக்கு பிறகு பாகிஸ்தானில் நமி அஹமத் ஷகிர் என்ற பெயரில் பாகிஸ்தான் குடி புகுந்தார்.

பாகிஸ்தான் கராட்சி பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்று, பாகிஸ்தான் இராணுவத்தில் பணிக்கு சேர்ந்தார். எல்லோருடைய நம்பிக்கை பேற்று, மேஜர் பதிவிக்கு இராணுவத்தில் உயர்ந்தார். பாகிஸ்தான் பெண்ணை திருமணம் செய்துக் கொண்டு, பெண் குழந்தை பெற்றுக் கொண்டார்.

முழுக்க முழுக்க பாகிஸ்தான் குடிமகனாக மாறிய ரவிந்தர், பாகிஸ்தான் இராணுவ நடவடிக்கைகளை ரா அமைப்புக்கு ரகசியமாக அனுப்பிக் கொண்டு இருந்தார். ஒரு வருடம், இரண்டு வருடம் அல்ல.... நான்கு வருடங்கள் (1979 - 1983) பாகிஸ்தான் இராணுவத்தில் இருந்து கொண்டு ரா உளவாளியாக இந்தியாவுக்கு தகவல் அனுப்பியிருக்கிறார். அப்போதைய, அமைச்சர் சவான் இவரை "கருப்பு புலி" என்றே பட்டம் வழங்கினார். பிரதமர் இந்திரா காந்தி இவரை பாராட்டியிருக்கிறார்.

பாகிஸ்தான் இராணுவம் ராஜஸ்தான் வழியாக உடுருவ செய்யும் போதெல்லாம், இவர் வழங்கிய தகவலால் பல முறை இந்திய இராணுவம் முறியடித்திருக்கிறது. சாகசம் நிறைந்த உளவு வாழ்க்கையில் சங்கடங்களும் நிறைந்து இருக்கும். ரவிந்தர் வாழ்க்கையிலும் அது நடந்தது.

செப்டம்பர் 1983ல் இந்திய உளவுத்துறைக்கு தகவல் கொடுக்கும் போது ஐ.எஸ்.ஐ உளவுளிகள் கண்டுபிடிக்கப்பட்டு ரவிந்தரை கைது செய்தது.

சிறையில் அடைக்கப்பட்ட ரவிந்தர் பல கொடுமைக்களுக்கு ஆளானார். 1985ல் பாகிஸ்தான் நீதி மன்றம் மரண தண்டனை வழங்கியது. பின்னர், ஆயுள் தண்டனையாக குறைக்கப்பட்டது.

பதினாறு வருடங்கள் பாகிஸ்தானில் பல சிறைகளுக்கு அடைக்கட்டு இன்னலை சந்தித்தார். ஆஸ்மா, டிபி என்று வியாதிகளாலும் அவதைப்பட்டார். உடல் நல கோளாறால் 21 நவம்பர் 2001ல் பாகிஸ்தான் சிறையில் இறந்தார். அவரின் உடலும் பாகிஸ்தான் சிறையின் பின்புறத்தில் புதைக்கப்பட்டது.

இறக்கும், ரவிந்தர் தன் குடும்பத்துக்கு எழுதிய கடிதத்தில், " நாட்டுக்காக உழைத்தவனை இந்தியா இப்படி தான் வெகுமதி தருமா?" என்று கண்ணீர் மலுக எழுதினார்.

ரவிந்தர் கௌஷிக்கின் தியாகம் 'உளவாளி' என்ற காரணத்தால் பதிவு செய்யப்படவில்லை. அவரின் உடலுக்கு இராணுவ மரியாதை கிடைக்கவில்லை. எந்த நாட்டுக்காக உழைத்தாரோ அந்த நாட்டில் அவர் உடல் புதைக்கப்பட வில்லை. ஆனால், நாட்டுக்காக உளவு வாழ்க்கையை மேற்கொள்ள வருபவர்கள் இதை எல்லாம் தெரிந்துக் கொண்டு தான் சேர்கிறார்கள்.

***

சரப்ஜித் சிங் ஒரு விவசாயி. திருமணமானவர். அழகான இரண்டு பெண் குழந்தைகள். அன்பான சகோதரி. இந்தியா - பாகிஸ்தான் எல்லை பகுதியில் இருக்கும் தர்ன் தரன் மாவட்டத்தில் இருக்கும் பிகிவிந்த் என்ற இடத்தில் குடும்பத்தோடு வசித்து வந்தார். மல்யுத்தம் என்றால் அலாதி பிரியம். நேரம் கிடைக்கும் போதெல்லாம் நண்பர்களோடு மல்யுத்தம் விளையாடுவது சரப்ஜித்துக்கு பிடிக்கும்.

குடும்பதோடு மகிழ்ச்சியாக வாழ்ந்த சரப்ஜித் சிங் ஒரு நாள் மாயமாய் மறைந்தார். குடும்பத்திறனர் ஒவ்வொருவரும் அவனை தேடாத இடமில்லை. விசாரிக்காத உறவினர்கள் இல்லை. எங்கு சென்றார்.

எப்படி சென்றார் என்று எந்த விபரமும் இல்லை. இரண்டு பெண் குழந்தையை சரப்ஜித் சிங் மனைவி செய்வதறியாமல் இருக்க அவர்களுக்கு துணையாக இருந்தது சரப்ஜித் சிங்கின் சகோதரி தல்பிர் சிங் தான்.

1991ல் ஒரு நாள் சரப்ஜித் சிங்யிடம் இருந்து கடிதம் வந்தது. அதில் தான் பாகிஸ்தான் இராணுவத்தால் சந்தேகிக்கப்பட்டு கைது செய்யப்பட்டதாகவும், தன் பெயரை பாகிஸ்தான் சிறை பதிவு ஏட்டில் “மன்ஜித் சிங்” என்ற பெயரில் இருப்பதாகவும் எழுதியிருந்தார். தன்னை எப்படியாவது காப்பாற்றுங்கள் என்று தன் கண்ணீர் துளிகள் குறிப்பிட்டிருந்தான். அன்றில் இருந்து தன் சகோதரனின் விடுதலைக்காக தல்பீர் போராடினாள்.

இந்திய அரசு, பாகிஸ்தான் அரசு, கருணை மனு, மக்கள் உதவி என்று ஒவ்வொருவராக கெஞ்சி தன் சகோதரனின் விடுதலைக்காக கேட்டு பார்த்தார். ஒரு வருடம், இரண்டு வருடம் அல்ல..... இருபத்தி இரண்டு வருடங்களுக்கு மேல் தன் சகோதரனின் விடுதலைக்காக போராடினார்.

பாகிஸ்தான் இராணுவம் பிடித்திருப்பது இந்திய ஏழை விவசாயி என்று நினைத்து தான் சரப்ஜித் சிங்கை கைது செய்தனர். பின்னர் பாகிஸ்தான் அரசு சரப்ஜித் சிங்யை 'ரா உளவாளி' என்று கூறியது. அது மட்டுமில்லாமல் லாகூர், பைசிலாபாத் இடங்களில் வெடுகுண்டு தாக்குதல் நடத்தியது குற்றத்திற்காக சரப்ஜித் சிங்க்கு மரண தண்டனை விதித்தது.

சரப்ஜித் சிங் ரா உளவாளி அல்ல என்று இந்திய அரசு மறுத்தது. வெடிகுண்டு தாக்குதலுக்கும் அவனுக்கும் எந்த சம்மந்தமும் இல்லை என்று அவர்கள் குடும்பம் மறுத்தனர். ஆனால், பாகிஸ்தான் சரஜித் சிங்யை விடுதலை செய்ய உதவவில்லை.

நாடெங்கும் சரப்ஜித் சிங் மரண தண்டனை எதிர்த்து போராட்டங்கள் வெடித்தது. சரப்ஜித் சிங்யின் மரண தண்டனை ரத்து செய்யக் கோரி

போராட்டம் நடந்தது. பாலிவுட் நடிகர் சல்மான் கான் கூட சரப்ஜித் சிங் ஆதரவாக இணையத்தில் ஆதரவு கேட்டார். இந்திய அரசு சரப்ஜித் சிங் விடுதலை செய்ய கோரியது. ஆனால், பாகிஸ்தான் எதற்கும் செவி சாய்கவில்லை. தங்கள் நாட்டில் வெடிகுண்டு நிகத்திய சரப்ஜித்தை தண்டிக்காமல் விட மாட்டோம் என்று தான் சொன்னது.

இங்கிலாந்து வழக்கறிஞர் "freesarabjitsingh.com" என்ற இணைய்தளத்தை தொடங்கி சரப்ஜித் சிங் விஷயத்தை மனித உரிமை குழுவுக்கு கொண்டு சென்றார். உலகில் பல இடங்களில் இருந்து ஆதரவு கிடைத்தது. பாகிஸ்தான் வழக்கறிஞர் ஒருவர் கூட சரப்ஜித் விடுதலை செய்ய வேண்டும் என்று கோரிக்கை வைத்தார்.

சரப்ஜித் கருணை மனு இழுவையில் இருக்கும் சமயத்தில் 29 ஏப்ரல் 2013 அன்று பாகிஸ்தான் சிறைச்சாலையில் கைதிகளுக்குள் நடந்த சண்டையில் சரப்ஜித் சிங் பலமாக தாக்கப்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். சிறுது நாட்களில் அவரது உயிர் பிரிந்தது.

இறந்த சரப்ஜித் சிங் உடல் இந்தியாவுக்கு கொண்டு வரப்பட்டது. அவரது இறுதி ஊர்வலத்தில் பெரிய பெரிய தலைவர்கள் கலந்துக் கொண்டனர். பெரிய தலைவர் இறந்தால் எவ்வளவு கூட்டம் கூடுமோ அந்த அளவுக்கு இறுதி ஊர்வலத்தில் கூடியது. பாகிஸ்தான் எதிரான கோஷங்கள் எழுப்பட்டது. இருபது வருடங்களுக்கு மேல் காத்திருந்த ஒரு குடும்பத்தின் கண்ணீர் துடைக்க அரசு என்ன செய்தாலும் சரப்ஜிட் சிங் உயிருக்கு ஈடாகாது.

அவரது சகோதரி இது திட்டமிட்ட மிட்ட கொலை என்றார். அரசியல் பிரமுகர்கள் "அப்ஸல் குருவை தூக்கில் போட்டதற்காக பாகிஸ்தானின் பழி வாங்கும் நடவடிக்கை” என்றனர். பிரதமர் மன்மோகன் சிங் "துக்கக்கரமான செய்தி" என்று சரஜித் சிங் மரணத்திற்கு இறங்கல் தெரிவித்தார். இந்திய அரசு அவரது குடும்பத்திற்கு ஒரு கோடி உதவித்தொகை அளித்தது.

மே 3, 2013 ஜம்மு சிறைச் சாலையில் இருக்கும் பாகிஸ்தான் கைதியான சனுல்லா ஹக் முன்னாள் இராணுவ வீரன் தாக்கப்பட்டு மருத்துவமனையில் இறந்தான். இதனால், இந்திய சிறையில் இருக்கும் பாகிஸ்தான் கைதிகள் பாதுகாப்பு அதிகரிக்கப்பட்து.

சரப்ஜித் சிங்க்காக இத்தனை பேர் போராடினார்கள். ஆனால், நிஜமாகவே அவர் ரா உளவாளி தானா என்ற சந்தேகம் அவருக்காக போராடியவர் மனதில் இருந்துக் கொண்டு தான் இருந்தது. 1990ல் பாகிஸ்தானில் வெடித்த குண்டு வெடிப்புக்கு சரப்ஜித் சிங்க்கு சம்மந்தம் இருக்கிறதா இல்லையா என்ற உறுதியான தகவல் இல்லை. ஆனால், சரப்ஜித் சிங் இறந்த பிறகு அவர் ரா உளவாளி தான் என்ற உண்மையை ரா தலைமை அதிகாரி ஏற்றுக் கொண்டுள்ளார். முக்கியமான பணிக்காக பாகிஸ்தானுக்கு உளவு பாக்க அனுப்பி வைக்கப்பட்டார் என்பதை ஒத்துக் கொண்டுள்ளார். பாகிஸ்தான் வெடிகுண்டு பற்றியும், சரப்ஜித் சிங் பங்கு பற்றியும் எந்த விபரமும் கூறவில்லை.

http://indiatoday.intoday.in/story/surjeet-singh-admits-he-was-a-spy-raw-agent-in-pakistan/1/202866.html

***

சரப்ஜித் சிங் விடுதலைக்காக போராட்டம் நடந்துக் கொண்டு இருக்கும் போது வேடிக்கை கலந்த வேதனையான விஷயம் ஒன்று நடந்தது.

"பாகிஸ்தான் சரப்ஜித் சிங் விடுதலை செய்ய சம்மதித்து விட்டது"

அவருக்காக போராடிய அமைப்புகளும், அவரது குடும்பமும் சந்தோஷத்தில் முழ்கினர். ஆனால், அந்த சந்தோஷம் நீண்ட நேரம் நிலைக்கவில்லை. காரணம், பாகிஸ்தான் விடுதலை செய்வதாக சொன்னது சரப்ஜித் சிங் அல்ல. சர்ஜித் சிங் என்ற இன்னொரு ரா உளவாளியை.

சர்ஜித் சிங் குடும்பத்திற்கு இது ஏமாற்றமாக இருக்கலாம். ஆனால், சர்ஜித் சிங் குடும்பத்திற்கு எவ்வளவு மகிழ்ச்சியான செய்தி. கிட்டதட்ட முப்பது வருடங்களுக்கு மேல் பாகிஸ்தான் சிறையில் இருந்து இந்தியாவுக்கு திரும்பியிருக்கிறார். தன் பாதி வாழ்க்கை தொலைத்தவர் இந்தியா திரும்பிகிறார் என்பதை நினைத்து சந்தோஷப்படுவதா? அல்லது சர்ஜித் சிங்க்கு விடுதலை கிடைக்கவில்லை நினைத்து வருந்துவதா? என்று பலருக்கு புரியவில்லை.

தான் இரண்டு வயது இருக்கும் போது அப்பாவை பார்த்தது, முப்பது வருடம் கலித்து இப்போது தான் பார்க்கிறேன் என்று சர்ஜித் சிங் மகன் கூறியிருக்கிறார்.

http://indiatoday.intoday.in/story/surjeet-singh-admits-he-was-a-spy-raw-agent-in-pakistan/1/202866.html

***

சிறையில் இறந்த சரப்ஜித் சிங்க்காக அவரது குடும்பம் அழுதுக் கொண்டு இருக்கும் வேளையில் இன்னொரு இந்திய குடும்பம் பதரத் தொடங்கியது. தன் மகனுக்கும் இப்படி நடந்து விட்டுமோ அஞ்ச தொடங்கினாள் ரா உளவாளியின் தாய். தன் சகோதரனுக்கு இப்படி நடந்து விடக்கூடாது என்று கடவுளை வேண்டிக் கொண்டாள்.

குல்தீப் யாவ். குஜராத் அகமுகபாத்தில் பிறவந்தவர். குஜராத் மாநிலத்தில் பிறந்ததால் என்னவோ இந்தியா மீது அதிகப் பற்று. அதற்காக தனது வாழ்க்கையை தொலைத்து நிற்கிறார்.

ரா உளவாளியான இவர் பாகிஸ்தானுக்கு பல முறை தகவல் சேகரிக்க சென்று வந்திருக்கிறார். அப்படி தகவல் சேகரிபதற்காக தனது பதிமூன்றாவது பயணத்தில் 22 ஜூன், 1994ல் பாகிஸ்தானில் கைது செய்யப்பட்டார்.

பாகிஸ்தானை உளவு பார்த்தக் குற்றத்திற்காக இருபத்தியைந்து வருடங்கள் சிறை தண்டனை வழங்கியது. இது வரை கூல்தீப் யாதவ் 19 வருடங்கள் சிறையில் களித்துவிட்டார்.

குல்தீப் யாதவ் லாகூர் சிறையில் இருப்பது 1997ல் தான் அவரது குடும்பத்திற்கு தெரிந்தது. மூன்று வருடங்கள் தொலைந்த மகனை பற்றி தகவல் தெரிந்ததும் தந்தை துடித்தார். மகனை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டும் என்று நினைத்தார். மகனின் விடுதலைக்காக அகமுகபாத்துக்கும், டெல்லிக்கும் பல முறை பயண செய்தார். இறுதியில் உடல் நலக்குறைவால் 1999ல் இறந்தார்.

அவரது தாயார் மாயாதேவி தனிமரமாக வாடிக் கொண்டு இருக்கிறார்.

ஏப்ரல் 10, 2007 தனது மகனை பற்றிய விபரங்களுடன் குஜராத் உயர் நீதி மன்றத்தில் ஒரு மனு கொடுத்திருக்கிறார். அந்த மனு வாங்கிய குஜராத் உயர் நீதி மன்றம் வெளியுறவு அமைச்சகத்திற்கு பதில் கேட்டு மனுக் கொடுத்தனர்.

குல்தீப் யாதவ்வின் விடுதலைக்காக சமூக சேகவர் பால் என்பவர் தனது வழக்கறிஞர் மகனான கிஷோர் மூலம் இடைக்கால உதவி நிதியாக மாயாதேவிக்கு ஐந்து லட்சம் பணம் வாங்கிக் கொடுத்திருக்கிறார். மேலும் உதவி தோகை கேட்டு மனு கொடுக்கப்பட்டிருக்கிறது.

யாதவின் சகோதரி "குல்தீப் வழக்கறிஞர் வேலை தான் செய்து வருகிறான் என்று நினைத்திருந்தோம். வேலை நிமித்தமாக அடிக்கடி டெல்லி செல்வான். ஆனால், அவன் ரா உளவாளி என்பது எங்களுக்கு தெரியாது" என்று கூறினார்.

மேலும், "அரசு வழங்கும் உதவி இதற்கு தீர்வு அல்ல. என் சகோதரனை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டும்" என்று கூறியுள்ளார்.

இந்தியா குதீப் யாதவை விடுதலை செய்யக் கோரி கேட்டுயிருக்கிறது. ஆனால், பாகிஸ்தான் அரசு குதீப்பை விடுதலை செய்வதாக இல்லை.

சரப்ஜீத் சிங் கொலைக்கு பிறகு குல்தீப்பின் குடும்பம் அச்சத்தில் இருக்கிறார்கள்.

Kuldeep yadav

http://www.indianexpress.com/news/mother-fights-for--spy--son-s-release-from-pak-jail/816306/1

http://www.youtube.com/watch?v=SNcrdCqxwvA

***

இது ரவிந்தர் கௌஷிக், சரப்ஜித் சிங், சர்ஜித் சிங், குல்தீப் யாதவ் போன்ற ரா உளவாளிகளின் தனிப்பட்ட கதையல்ல. ரா உளவாளிகளின் வாழ்க்கை. பணத்திற்காக தேசம் தாண்டி வேலை செய்பவர்கள் கூட என்றோ ஒரு குடும்பத்தை சந்திப்போம் என்ற நம்பிக்கை இருக்கும். வாரம் ஒரு முறையாவது தொலைப்பேசியில் பேசுவார்கள். ஆனால், ரா உளவாளி அப்படி இருக்க முடியாது.

உளவு பார்க்க சென்ற இடத்தில் குடும்பத்தினரை தொடர்பு கொள்வது அவரது பாதுகாப்புக்கு பிரச்சனை வரும். அந்த மிஷன் தோல்வியில் முடியலாம். அதனால், குடும்பத்துடன் எந்த தொடர்பும் இல்லாமல் தான் இவர்கள் வேலை செய்ய வேண்டும்.

இவர்களை போல் எத்தனையோ ரா அதிகாரிகள் வாழ்க்கை வெளியே தெரியாமல் நாட்டுக்காக சேவை செய்து வருகிறார்கள். மற்ற அரசு அதிகாரிகளைப் போல் ‘உளவாளி’ வேலையை உறவினர்களிடம், நண்பர்களிடம், இவ்வளவு ஏன் மனைவிகளிடம் கூட பெருமையாக சொல்லிக் கொள்ள முடியாது. அப்படி தெரிந்திருந்தால், அந்த ரா அதிகாரியை தங்கள் பக்கம் இழுக்க அவரின் மனைவி மூலமாக அனுகலாம். வெளிநாட்டு பயணம் செய்யும் உளவு அதிகாரிகள் மனைவிகள் சில சமயம் வெகுளிதனமாக ரகசியங்களை வெளியே சொன்ன கதைகளும் உண்டு.

அரசு பணியில் பதிவியில் இருப்பவர்கள், கடிதம் எழுதுபவர் தங்கள் கடிதத்தை லெட்டர் ஹெட்டில் தான் எழுத வேண்டும். அப்போது தான் இன்னார் எழுதினார் என்று நம்ப முடியும். ஆனால், ரா அதிகாரிகள் ஒரு லெட்டர் எழுதுவதாக இருந்தாலும் அவர்கள் லெட்டர் ஹெட் கிடையாது. பெயர், பதவி, முகவரி என்று பகிரங்கமாக தங்களை பற்றிய தகவலை அவர்களே வெளியே சொல்லுவது போல் அமைந்துவிட கூடாது. அதனால், பாதுகாப்பு கருத்தில் கொண்டு லெட்டர் ஹெட் வைத்துக் கொள்ள அனுமதில்லை.

வெளியூருக்கு மிஷனுக்கு செல்பவர்கள் தங்குவதற்கு அலுவலக அறையோ விடுதியோ கிடையாது. கிடைக்கும் இடத்தில், மிஷனுக்கு தகுந்தாற்போல் தங்க வேண்டும். கிடைக்கும் உணவைத் தான் சாப்பிட வேண்டும். இந்திய அரசாங்க ஊழியன் என்று சொல்லிக் கொண்டு எந்த சலுகையும் பெற முடியாது. பெரும்பாலும், ‘இந்தியன்’ என்ற அடையாளத்தை மறைத்து தான் அவர் மிஷனில் இறங்க வேண்டியதாக இருக்கும். அதனால், இந்தியாவில் இருந்து மறைமுக ஆதரவு இருக்கமே தவிர, சலுகைகள் எதிர்பார்க்க முடியாது.

இவ்வளவு கஷ்டமான வேலையை, ரா அதிகாரிகள் மாத சம்பளத்திற்காக மட்டும் செய்யவில்லை. சம்பளத்தை மீறி அவர்கள் உடம்பில் தேசபற்று இரத்த ஊறிப்போய் இருக்கிறது. அப்படிப்பட்டவர்களை தான் ‘ரா’ வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள். இவர்களின் தேச பக்திக்கும், தியாகத்திற்கு இந்தியா என்று தலைவங்கும்.

*****

# 16. ட்புள் ஏஜென்ட் ஏகாம்பரம்

தமிழ் சினிமாவில் பழக்கப்பட்ட க்ளைமெக்ஸ் காட்சி

ஹீரோவும் வில்லனிடம் இருந்து முக்கியமான ஆதாரத்தை எடுத்து ஓடுவார். அப்போது, ஹீரோ தலைக்கு பின் துப்பாக்கி வைத்து ஒருவன் மிரட்டுவான்.

“கையில இருக்குற ஆதாரத்த என் கிட்ட கொடு"

ஹீரோ திரும்பி பார்த்தால், அவன் உயிருக்கு உயிராக பலகிய நண்பன். வில்லனின் பணத்துக்காக நண்பனை காட்டிக் கொடுக்கும் துரோகியாக மாறியிருப்பான். நண்பனை விரோதியாக பார்க்கு அதிர்ச்சியில் ஹீரோ சிலையாக நின்று இருப்பான்.

ஏறக் குறைய இதுப் போன்ற காட்சிகள் உளவு நிறுவனத்தில் நடந்திருக்கிறது. பல டபுள் ஏஜென்ட் ஏகாம்பரம் கூடவே இருந்து நமது நாட்டின் தகவலை எதிரி நாட்டுக் கொடுத்திருக்கிறார்கள். பிடிப்பட்டு தண்டனைக்கு உள்ளாகியிருக்கிறார்கள்.

பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன் என்பது போல் ஒரே சமயத்தில் தன் நாட்டிலிருந்து எதிரி நாட்டுக்கும், எதிரி நாட்டிலிருந்து தன் நாட்டுக்கும் உளவறிவது தான் டபுள் ஏஜென்ட். லஞ்சம், ஊழல் அரசியல்வாதிகள், அதிகாரிகளுக்கு மட்டுமல்ல உளவாளிகளுக்கு சொந்தம் என்று சொல்லும் அளவிற்கு சில சம்பவங்கள் நடந்திருக்கிறது. அவை வெளிச்சத்திற்கு வந்திருக்கிறது. வழக்கம் போல் ரா அமைப்பு அப்படி ஒரு சம்பவம் நடக்கவில்லை என்று மறுத்தும் இருக்கிறது.

ஒரு அரசியல்வாதியோ அல்லது அதிகாரியோ ஊழலில் ஈடுபடும் போது குறிப்பிட்ட மக்களுக்கு பலன் கிடைக்காமல் போகிறது. ஆனால், உளவாளி பணத்திற்காக தவறு செய்தால் அது நாட்டின் பாதுக்காப்பையே பாதிக்கும். களவு போன தகவல் வைத்துக் கொண்டு எதிரி நாடு நம்மை எப்படி தாக்க போகிறார்கள், நம் வளர்ச்சியை எப்படி

தடுக்க போகிறார்கள், என்ன பிரச்சனை செய்வார்கள் என்று யூகிக்க முடியாது. தகவல் கொடுத்த உளவாளியை அடித்து உதைத்து கேட்டாலும் கிடைக்காது.

"கேட்டார்கள். பணத்திற்காக கொடுத்தேன்" என்பான்.

என்ன தகவல் திருடு போனது தெரிந்தால், கொஞ்சம் மாற்று திட்டத்தை யோசித்து நம் நாட்டை பாதுக்காதுக் கொள்ளலாம். சில சமயம் களவு போனது என்ன தகவல் என்று தெரியாத போது, கடலில் விழுந்த குண்டு உசியை தேடும் கதை தான். எதிரி அந்த தகவலை வைத்து என்ன செய்ய போகிறான் என்பதை நமக்கு தெரியாது.

அப்படி ஒரு சம்பவம் ராவில் நடந்து பெரிய அதிர்ச்சிக்குள்ளாகியது.

கருப்பு கோர்ட் அணிந்துக் கொண்டு எப்போதுப் போல் வேலைக்காக புது டெல்லியில் இருக்கும் ரா அமைப்பு கட்டிடத்திற்குள் நுழைந்தார் ரபின்ந்தர் சிங். மிக திறமையான மனிதர். குறுகிய காலத்தில் ராவின் முக்கிய பதவியை அடைந்தவர். இராணுவத்தில் பணியாற்றும் போது, 1984ல் சீக்கியர் தீவிரவாதிகளுக்கு எதிராக தாக்குதலில் சிறப்பாக செயல்பட்டவர். இந்திய இராணுவத்தில் பணியாற்றி மேஜர் வரை பதவி உயர்வு அடைந்தவர். கௌன்டர் இன்டலிஜன்ஸில் தனது திறமையை நிருபித்து ராவில் தற்காலிகமாக பணிக்கு சேர்ந்தவர். பிறகு, தன் உழைப்பால் நிறந்தரமாக ராவில் வேலையும் பெற்றார்.

இப்படி, முக்கிய பொருப்பில் இருப்பவர் என்பதால் அவரை வணக்கம் வைத்து ஒவ்வொருவரும் கடந்து சென்றனர். தன் வேலை சம்பந்தமில்லாத ஒரு பைலை எடுத்து, அதை நகல் எடுத்துக் கொண்டு இருந்தார். அதன் பின் மனிதர் கொஞ்ச நாட்களாக யார் கண்ணில் படாமல் இருந்தார். ரா அதிகாரிகள் யார் கண்ணில் படாமல் இருப்பது பெரிய விஷயமில்லை. ஆனால், முக்கிய கோப்புகள் நகல் எடுத்த பிறகு அவர் காணாமல் போயிருப்பதால் அவர் மீது சந்தேகத்தை

ஏற்ப்படுத்தியது. அவரை கண்காணிக்க அவர் செல்லும் இடங்களும், அவரது தொலைப்பேசி பேசுவதையும் உளவு பார்த்தனர்.

ரபீந்தர் சிங்யை விசாரிக்க வேண்டும் ஏப்ரல், 2004 குரல் எழுப்பப்பட்டது. தேர்தல் சமயமாக இருந்ததால், அவரை விசாரிக்க அனுமதிக் கிடைக்கவில்லை. ஆனால், மே மாதம் அவரை விசாரிக்க உத்தரவு வழங்குப்பட்டது. அதே சமயத்தில் மே 14, 2004 திடீர் என்று மனிதர் காணவில்லை. எங்கு சென்றார். எப்படி சென்றார் என்று ரா அமைப்புக்கூட தெரியவில்லை. அவரது குடும்பம், உறவினர் எல்லாம் கண்கணிக்கலாம் என்று நினைத்தால் அவரது குடும்பமும் இல்லை. ராவுக்கு அவர் மேல் மேலும் சந்தேகம் வலுவானது.

ரபீந்தர் சிங்யை பற்றி பல விதமாக தகவல்கள் ராவுக்கு வந்துக் கொண்டு இருந்தது தவிற பிடிக்க முடியவில்லை. கடைசியாக அவரை பார்த்தவர் சென்னை ரெயிலுக்கு இறக்கிவிட்ட டிரைவர் தான். அதை வைத்துக் கொண்ட என்ன செய்வது நினைக்கும் போது சில முக்கிய தகவல்கள் ராவில் இருந்தே கிடைத்தது.

1992-93 வாக்கில் ராபிந்தர் சிங் அமெரிக்காவில் இருக்கும் வாஷிங்டன் தூதுரகத்திற்கு பணி மாற்றம் கேட்டுயிருக்கிறார். ஆனால், அப்போது அவரது வேண்டுகோள் மறுக்கப்பட்டது. அதுமட்டுமில்லாமல், இடைநிலை ஊழியாக இருக்கும் சந்திரசேகர் என்பவர் ராபிந்தர் சிங் தனக்கு தேவையில்லாத தகவல் பற்றி கேட்கிறார் என்று சில மாதங்களுக்கு முன்பு உயர் அதிகாரியிடம் சொல்லியிருக்கிறார். அப்போது இது பெரிதாக எடுத்துக் கொள்ளப்படவில்லை. ராபிந்தர் காணாமல் போனப்பிறகு, சந்திரசேகர் சொன்ன மிக முக்கியமாக பட்டது. காரணம், ராபிந்தர் கேட்டது அமெரிக்காவில் ரா உளவு அமைப்பு செய்யும் வேலைகளைப் பற்றியது.

அதன் பின் கிடைத்த தகவல் எல்லார் ராபிந்தரையும், அமெரிக்காவையும் சம்மந்தப்பட்டதாகவே இருந்தது. உளவுத்துறையில் டபுள் ஏஜென்டாக மாறியவர்களாய் 'மோல்' என்று அழைப்பார்கள்.

ராபிந்தர் 'மோல்' என்று தெரிந்த பிறகு, விசாரித்தில் அவர் அமெரிக்காவுக்கு தான் பணி செய்திருக்கிறார் உறுதியானது.

ரபீந்தர் சிங் நேபால் வழியாக அமெரிக்காவுக்கு தப்பி சென்று இருக்கலாம் என்று சந்தேகித்தனர். அதை வலுவுட்டும் வகையில் சி.ஐ.ஏவில் சுரேந்தர்ஜித் சிங் என்ற பெயரில் நீயூ ஜெர்ஸியில் ஒருவர் பணிபுரிவது கண்டுபிடிக்கப்பட்டது. ரபிந்தர் சிங் தான் சுரேந்தர் சிங் என்ற பெயரில் சி.ஐ.ஏவில் பணியாற்றுகிறார் என்பதை ராவால் நிருப்பிக்க முடியவில்லை.

ரபீந்தர் தப்பி சென்றது பல கேள்விகளுக்கு விடை தெரியாமல் இருக்கிறது. 'மோல்' என்று சந்தேகிக்கும் உளவாளி எப்படி தப்பிக்க முடிந்தது? ரா ரபீந்தர் மீது நடவடிக்கை எடுக்க ஏன் அரசாங்க அனுமதிக்காக காத்திருந்தது? அவரை கைது செய்ய உத்தரவு வரும் சமயத்தில் எப்படி சரியாக தப்பித்தார்? அமெரிக்காவில் இருப்பது உண்மை என்றால் ஏன் அவரை இதுவரை கைது செய்து விசாரிக்கவில்லை? ரபீந்தர் தப்பித்ததில் வேறு ரா உளவாளிகள் சம்மந்தப்பட்டுள்ளார்களா? போன்ற பல கேள்விகளை முன்னாள் ரா அதிகாரியான வி.கே.சிங், வெளியுறவை பற்றி அவர் எழுதிய புத்தகத்தில் (India's External Intelligence) எழுதியுள்ளார். ஒரு வேளை ரபீந்தரை விசாரித்தால், ராவில் இருக்கும் சில பெயருக்கு ஆபத்து வருமா என்று சந்தேகத்தையும் எழுப்பியிருக்கிறார்.

இந்த புத்தகத்தில், அவர் பணி செய்த தொலை தொடர்பு விபரங்களை பற்றி குறிப்பிட்டதால், அலுவலக ரகசிய சட்டத்தை (Offical Secret Act) மீறியதற்காக கூறி வி.கே.சிங் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டது. ஆனால், அவர் கேட்ட கேள்விகளுக்கு இன்று வரை பதில் கிடைக்கவில்லை.

ரா அதிகாரி 'மோலாக' மாறியது இது தான் முதல் முறையா? இதுப் போல் சம்பவம் ராவில் முன்பு நடந்திருக்கிறதா என்று கேட்டால் 'ஆம்' என்று தான் சொல்ல முடியும்.

***

பெயரில் மட்டுமல்ல.. நிஜமாகவே இவர் ‘கிருஷ்ணர்’ தான். எத்தனை அழகான பெண்கள் இவர் வலையில் விழுகிறார்கள். இவருக்கு மட்டும் இந்த வயதில் எப்படி நடக்கிறது என்று பலர் இவரை பொறாமை படுவார்கள். அவர் வலையில் விழுந்தவர்கள் பெரும்பாலும் விமான பணிப் பெண்கள். அழகைப் பற்றி சொல்லவா வேண்டும்.

ஒருவர் பல பெண்களுடன் மன்மத லீலை நடத்துவது அவரது சொந்த விஷயம். அவர் மனைவி கேள்வி கேட்கலாம். நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்று நினைத்து ஒதுக்க முடியாது. ஏனென்றால், மன்மத லீலையில் ஈடுப்பட்ட அந்த கிருஷ்ணர் ஒரு ரா அதிகாரி. அவரது முழு கே.வி. உன்னிகிருஷ்ணன்.

இவர் தமிழ்நாட்டில் பணியாற்றிய காலக்கட்டமும் மிகவும் சவாலான காலக்கட்டம். 1981ல் இந்தியா ஈழப் போராளிகளுக்கு ரா மூலம் உதவியதும், பிறகு இந்தியா ஈழப் போராளிகளுக்கு எதிராக செயல்ப்பட்ட காலம்.

1981ல் இவர் கொழும்பில் ‘ரா’வுக்காக வேலை செய்த போது, அமெரிக்க தூதரக பெண் அதிகாரி ஒருவருடன் அவருக்கு நட்பு ஏற்பட்டது. இருவரும் நெருக்கமாகவும், உறவில் இருந்த விபரங்கள் தெரிய வந்தது. அந்த பெண்ணோடு மட்டுமில்லாமல் பல பெண்களுடன் பாலியல் உறவில் இருந்திருக்கிறார் என்ற தகவல் கிடைத்தது.

1983ல் இலங்கையில் தாக்கப்பட்ட தமிழர்கள் பாதுகாப்பு தேடி இந்தியாவுக்கு அகதிகளாக வந்த நேரம். அப்போது, பல ஈழப் போராளிகள் உருவாகியிருந்தனர். அவர்களுக்கு இந்தியாவில் அடைக்கலம் தந்து, பல்வேறு இடங்களில் இந்திய உளவு நிறுவனம் அவர்களுக்கு இராணுவப் பயிற்சிகளை அளிக்கும் வேலையை ரா ஏற்றுக் கொண்டது. அதில், முக்கிய பணியில் ரா அதிகாரி தான் ‘கே.வி.உன்னிகிருஷ்ணன்’.

இந்தியா போராளிகளுக்கு தரும் இராணுவ பயிற்சிகள் மட்டுமல்லாமல் குழுக்களுடன் நேரடி தொடர்பு கொண்டு செயல்படும் பொறுப்பில் இருந்தார். அந்த ரா அதிகாரியாக மட்டுமல்லாமல், சி.ஐ.ஏவுக்கு வேலை செய்தார். டபுள் எஜென்ட் வேலை!!!

இந்தியா ஈழப் போராளிகளுக்கு அளிக்கும் பயிற்சிகள், போராட்டங்கள் போன்ற விபரங்களை அமெரிக்காவுக்கு அனுப்பி வந்தார். இவர் அனுப்பும் தகவல்கள் சி.ஐ.ஏவுக்கும், இலங்கைக்கு இராணுவத்திற்கும் உதவியாக இருந்தது. அதன் பிறகு, இந்தியாவுக்கு வேலை மாற்றலாகி டெல்லியில், பிறகு சென்னையில் குடிப்புகுந்தார்.

[ 1985 ல் தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர்கான தர்மலிங்கம், ஆலாலசுந்தரம் விடுதலைப் புலிகள் படுகொலை செய்யப்பட்டதாக கூறப்படுகிறது. ஜே.என். தீட்சித் என்பது தனது 'Prabhakaran Phenomenon' என்ற புத்தகத்தில் உன்னி கிருஷ்ணன் கொடுத்த தகவல் பெயரில் நடந்திருக்க வாய்ப்பு உள்ளது என்கிறார். ஆனால், எதுவும் உறுதியாக சொல்ல எந்த ஆதாரமில்லை.]

ஒரு நாள் மும்பையில் இருக்கும் 'பான் விமான சேவை'யில் வேலை செய்த ஒரு அமெரிக்கப் பெண்ணுடம் இருந்து உன்னிகிருஷ்ணனுக்கு தொலைப்பேசி அழைப்பு வந்தது. அடுத்த விமானத்தில் அவர் மும்பைக்கு பறந்தார். ஒரு ஹோட்டல் விடுதியில் அந்த பெண்ணுடன் தனது மன்மத லீலையை தொடர்ந்தார். அடிக்கடி சென்னைக்கும், மும்பைக்கு பறந்துக் கொண்டு இருந்தது உள்ளூர் உளவு அமைப்பான ஐ.பி உருத்தியது.

சென்னையில் இருக்கும் ஐ.பி உளவு அமைப்பு உன்னிகிருஷ்ணனின் நடவடிக்கைப் பற்றி ராவுக்கு தகவல் கொடுத்தது. அமெரிக்காவில், சி.ஐ.ஏ – எஃப்.பி.ஐ எப்படி டாம் அன்ட் ஜெர்ரி போல் அடித்துக் கொள்வார்களோ, இந்தியாவில் ராவும், ஐ.பியும் ஆடு – புலி ஆட்டம் ஆடுவார்கள். இருந்தாலும், ஐ.பியில் புகாரை ரா நிராகரிக்கவில்லை.

அதுமட்டுமில்லாமல், சிங்கப்பூரில் அந்த பெண்ணுடன் உன்னிகிருஷ்ணன் உல்லாசமாக இருந்த புகைப்படங்கள் சிக்கியது.

ரா அவரை கைது செய்து விசாரித்ததில் ரா அமைப்பு இலங்கையில் மேற்க்கொண்ட நடவடிக்கைகளை சி.ஐ.ஏவுக்கு தகவல் கொடுத்ததாக தெரிகிறது. அவரை பதவியில் இருந்து நீக்கி திஹார் ஜெயிலில் ஒரு வருடம் அடைக்கப்பட்டார். பின்னாளில், ஈழப் போராளிகள் விஷயத்தில் இந்தியாவின் நிலை மாறியதால், அவர் விடுவிக்கப்பட்டார். ஆனால், மீண்டும் பணியில் அமர்த்தப்படவில்லை.

ராவில் மட்டுமே டபுள் ஏஜென்ட் இருக்கிறார்கள் என்பதில்லை. உள்ளூர் உளவு அமைப்பான ஐ.பியிலும் இதுப் போன்ற சம்பவங்கள் நடந்திருக்கிறது. 1996ல் ஐ.பி உயர் பதவியில் இருக்கும் ரட்டன் ஷெகல் என்பவர் அமெரிக்க தூதுரப் பெண்மணியிடம் தொலைப்பேசி மூலம் இந்திய தகவல் கொடுத்ததை கண்டறியப்பட்டு வேலை நீக்கம் செய்யப்பட்டார்.

'மோல்' என்ற சந்தேகிக்கப்பட்டும் எந்த ரா அதிகாரியும், அவர் குற்றமற்றவர் என்று உறுதியாகும் வரை ரா அலுவலகத்தில் அனுமதிக்கப்படுவதில்லை. விசாரனை முடியும் வரை வீட்டில் தான் இருக்க வேண்டும்.

இதுவரை பார்த்த ரா அதிகாரி உன்னிகிருஷ்ணனாட்டும், ஐ.பி. ரட்டன் ஷெகலாகட்டும் கைது செய்யப்பட்டு பணி நீக்கம் செய்யப்பட்டனர். அவர்கள் கொடுத்த தகவல் என்னவென்று கண்டறிய முடிந்தது. ஆனால், ரபீந்தர் சிங் விஷயம் அப்படி இல்லை. அவரை பிடிக்க முடியவில்லை. என்ன தகவல்கள் கொண்டு சென்றார் என்ற எந்த துப்பும் கிடைக்கவில்லை.

தங்களுக்குள் இருக்கும் ஒரு கருப்பாட்டை கண்டுபிடிக்காமல் விட்டது ராவின் தோல்வி என்று தான் சொல்ல வேண்டும்.

*****

# 17. தேன் வலை

பார்க்க சப்பையான முகமாக இருந்தாலும், அழகாக தான் இருக்கிறாள்.

சீனப் பெண்கள் என்றாலே வெள்ளை தோளும், அழகு சிரிப்பும், குடைப் பிடித்து நடந்து போகும் அழகு தான் நினைவுக்கு வரும். பார்க்காமல் இருக்க முடியாது. குனிந்து வணக்கம் சொல்லும் போது கைப் பிடித்து தூக்கி அனைத்து முத்தம் கொடுக்க வேண்டும் என்று கூட தோன்றலாம்.

ஆனால், வந்திருப்பது சுற்றுலா பயணமல்ல, இந்திய அரசு அதிகாரியாய். நாம் செய்யும் தவறு இந்திய - சீனா உறவை பாதிக்கும். ஊடகங்களுக்கு திணிப்போடும் என்று எல்லாம் யோசிக்க வேண்டும்.

மோகன் ஷர்மா சீனப் பெண்கள் பார்க்கும் போது ஆரம்பத்தில் அப்படி தான் யோசித்தான். கட்டுப்பாடாக இருந்தான். மனைவிக்கு துரோகம் செய்யக் கூடாது என்று ஐம்புலங்களையும் அடக்கிக் கொண்டான். ஆனால், எத்தனை நாளைக்கு காமத்தை வெல்ல முடியும். சாமியார் என்று சொல்பவர்கள் கூட காமத்தில் ஈடுப்படும் போது சராசரி மனிதனால் காமத்தை எப்படி வெல்ல முடியும். ஆரம்பத்தில் இருந்த கட்டுப்பாடு அந்த சீனா ஆசிரியை பார்த்த பிறகு ஆசையை அடக்க முடியவில்லை.

அவளுடன் பார்க்க வேண்டும், பேச வேண்டும். பழக வேண்டும் என்று நினைத்தார். அந்தப் பெண்ணும் மோகன் ஷர்மா வந்து பேசுவதை விரும்பினாள். அவளும் கொஞ்சி கொஞ்சி பேசினாள். சிரிப்பால் வசிகரித்தாள். அவனுடன் பழக அவன் ரா உளவாளி என்ற ஒரு தகுதி பொதுமானதாக இருந்தது.

ரகசியங்களை பெற பணம், பொருள் ஆசை காட்டுவதை விட பெண் ஆசைக் காட்டுவது எளிமையானது. பணத்திற்கு மயங்காதவர்கள் கூட

பெண்ணுக்கு மயங்கிவிடுவார்கள். மோகன் ஷர்மா ஒரு சீனப் பெண்ணுடன் பழகுவதை இந்திய தூதுரகத்திற்கு உறுத்தியது. அவரை உடனே டெல்லி வர வழைக்கப்பட்டார்.

அந்தப் பெண்ணுடன் இருக்கும் தொடர்ப்பை விசாரித்தனர். சொந்த விஷயம் என்று சொல்லி தட்டிக் கழிக்க முடியவில்லை. சீனா அரசு விரித்த தேன் வலையில் விழுந்து விட்டாரோ என்ற அச்சம். சீனத்தரப்பில் விசாரித்ததில் சரியான பதில் வரவில்லை.

“உன் அதிகாரி. நீ தான் விசாரிக்க வேண்டும்” என்ற தோரணையில் தான் பதில் வந்தது. அந்த சீனா ஆசிரியை விசாரிக்க அனுமதி கிடைக்கவில்லை. மீறி விசாரணை நடத்தினால், இரண்டு நாட்டின் உறவு பாதிக்கப்படும்.

அந்த சீன ஆசிரியை சீன உளவாளியின் ஏற்பாடா? மோகன் ஷர்மா அவர்களால் மிரட்டப்படுகிறாரா? போன்ற சந்தேகங்கள் எழுந்தது.

எதற்கு இந்த பிரச்சனை. மீண்டும் சீனாவுக்கு செல்ல அவன் அனுமதிக்கப்படவில்லை.

***

ஷீபா, சிபா என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். எப்படி அழைத்தாலும், திரும்பி பார்ப்பாள். சிரிப்பாள்.

பங்களாதேஷ் பெண். இரத்தம் சுண்டும் வெள்ளை நிறத்தைப் பற்றி சொல்ல வேண்டியதில்லை. அவ்வளவு அழகு. வசிகரமாக முகம்.

லெப்டினட் கலோன் சன்ஜய் சாண்டில்யாவுக்கு அந்த பெண்ணை பார்த்து விட வேண்டும் என்ற ஆவல். பேஸ்புக்கில் தான் பழக்கம். அதில் தான் பேச்சு. காதல். என்ன கர்மமோ என்று கூட சொல்லலாம். அவளுடன் ஒரு நாளாவது இருந்து விட வேண்டும் என்ற அவனுக்கு ஆசை இருந்தது.

தில்லி ஹோட்டலில் பார்க்கலாமா என்று சன்ஜய் கேட்டான். அவளும் சம்மதித்தாள். இருவரும் சந்தித்துக் கொண்டனர். ஒரு அறையில் இருவரும் சல்லாபமாகவும் இருந்தனர்.

லெப்டினட் சந்தோஷம் தாளவில்லை. கஷ்டப்பட்டு பார்த்து பலகிய பெண்கள் கூட இதற்கு இணங்குவதில்லை. பேஸ்புக் பழக்கத்திலேயே வந்துவிட்டாள். தனக்கு எங்கையோ மச்சம் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டான்

ஆனால், அது மச்சம் அல்ல... துரதிஷ்டம் என்பது பிறகு தான் தெரிந்தது.

கொஞ்ச நாட்களில் ரா அதிகாரிகள் சன்ஜய்யை விசாரணைக்கு அழைத்தனர். அந்தப் பெண்ணுடன் சல்லாபமாக இருந்த வீடியோப் படம் சிக்கியது. கூடவே அந்த அதிகாரி வைத்திருந்த லெப்டாப்பும் இல்லை. அந்த பெண் களவாடியிருக்கலாம் என்ற சந்தேகம்.

விசாரணையில் தான் சன்ஜய் உண்மை தெரிந்தது. ஷீபா என்ற பங்களாதேஷ்யில் இருக்கும் பெண் பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ உளவாளி என்று!!!

அந்த பெண் சன்ஜய் வலையில் விலவில்லை. சன்ஜய் தான் அந்த பெண்ணின் வலையில் விழுந்திருக்கிறார்.

ரா அதிகாரிகள், இராணுவத்தில் முக்கிய பொருப்பில் இருப்பவர்கள் பொது இணையத்தளங்களின் தங்கள் அடையாளத்தை வெளியே காட்டக் கூடாது. போலி ஐ.டி வைத்து தான் தொடர்பு கொள்ள வேண்டும். சன்ஜய் சாண்டில்யா தனது உண்மையான அடையாளத்தை பொது இணையத்தில் காட்டினால் தான் அவர்களால் கண்டுபிடித்திருக்க முடியும்.

அந்த பெண்ணிடம் என்ன ரகசியம் கொடுத்தார், லெப்டாப்பில் என்ன மாதிரி ரகசியங்கள் இருந்தது போன்ற விசாரணைகள் நடந்தது.

இது எல்லாவிற்றுக்கும் மேலாக ஒரு விஷயம். ஷீபா என்ற ஐ.எஸ்.ஐ உளவாளி ஏற்கனவே ஒரு இந்திய இராணுவ லெப்டனட்டை தனது வலை வீழ்த்தியிருக்கிறாள். சன்ஜய் இரண்டாவது இந்திய இராணுவ வீரன்!!!

முதல் இராணுவ லெப்டனட் வலையில் விழுந்ததை தெரிந்ததுமே அந்த பெண்ணைப் பற்றிய விபரங்கள் ரா கண்காணிப்பில் இடம் பெற்றது. அதையும் மீறி இன்னொரு இந்திய இராணுவ வீரனை தன் வலை வீழ்த்தி காரியத்தை சாதித்திருக்கிறாள்.

***

சுக்ஜிந்தர் சிங் விமான உற்பத்தியை மேற்பார்வை பார்க்கத்தான் 2005ல் ரஷ்யா சென்றார். நல்ல விருந்து சாப்பாடு. உற்சாகமான உபசரிப்பு.

இதேப் போல் 2007ல்லும் ரஷ்யாவுக்கு வேலை விஷயமாக சென்று வந்தார். இந்தியா திரும்பியது முக்கிய பதவி உயர்வும் கிடைத்தது. 2009 வரை சுக்ஜிந்தர் சிங் வாழ்க்கை நன்றாக தான் இருந்தது. ஆனால் அவரின் போறாத காலம் ரஷ்யாவில் சில பெண்களோடு உல்லாசமாக இருந்த புகைப்படங்கள் சிக்கியது.

அவர் முக்கியமான தகவலை ரஷ்யா அரசுக்கு கொடுத்திருப்பாரோ என்ற சந்தேகம் வந்தது. ஆனால், அதை நிருபிக்க முடியவில்லை. இருந்தாலும், இவர் பதவியில் இருப்பது எப்போது இருந்தாலும் இந்திய பாதுகாப்புக்கு ஆபத்து தான். அதனால், ஒழுங்கு நடவடிக்கை காரணம் காட்டி பணி நீக்கம் செய்தனர்.

***

இந்த தேன் வலையில் ஆண்கள் மட்டும் மாட்டியதில்லை. பெண்களும் மாட்டியிருக்கிறார்கள்.

மாதுரி குப்தா இஸ்லாமபாத்தில் இருக்கும் இந்திய தூதுரகத்தில் இரண்டாம் நிலையில் இருக்கும் செயலாளர். 30 வருடங்களாக

வெளியுறவு அமைச்சகத்தில் பணியாற்றியவர். அவருடைய பணியை பாராட்டி இந்தியன் ஃபாரின் சர்வீஸ் (IFS) குரூ B பதவி உயர்வு வழங்கினர்.

இப்படிப்பட்டவர் இந்திய ரகசியங்களை பாகிஸ்தானுக்கு கொடுப்பார் என்று யாரும் எதிர்பாத்திருக்க மாட்டார்கள். அவருடன் பழகியவர்களுக்கு அவர் செய்த துரோகம் அதிர்ச்சியாக இருந்தது. அதை விட அதிர்ச்சி, ஒரு பெண்ணாக ஹனி ட்ரெப்பில் மாட்டியது!!!

இஸ்லாமபாத்தில் இருக்கும் போது இவருக்கு ஐ.எஸ்.ஐ உளவாளியோடு நெருக்கம் ஏற்பட்டது. அந்த நெருக்கத்தில் இந்தியா ஜம்மு காஷ்மீர் மேற்கொள்ளும் திட்டங்கள், ஆப்கானில் செயல்பாடுகள் போன்ற ரகசியங்களை தாரை வாத்துக் கொடுத்துவிட்டார்.

ஐ.எஸ்.ஐ உளவாளியோடு நெருங்கி பழகுவதை ஆதராத்துடன் டெல்லி போலீஸ் அவரை ஏப்ரல் 22, 2010 அன்று கைது செய்தது.

***

சர்வதேச நிழல் உலகத்தில் இதை 'தேன் வலை' என்று சொல்லப்படும் 'Honey trap' இது தான்.

தேன் சாப்பிடுவதற்கு இனிமையாக, சுவையாக இருக்கும். ஆனால், அதை சாப்பிட தேன் கூட்டில் கை வைத்தால் தேனீக்கள் கொத்தி உடம்பை உடம்பை ரனக்கலமாக்கிவிடும். ஏறக்குறைய இந்த 'Honey trap' அப்படி தான்.

தேன் போல் அழகாக, இனிமையாக பேசி பழகி எல்லாவற்றிக்கும் சம்மதிக்க யாராக இருக்கும் பெண்கள். கவர்ச்சியான பெண்கள் கொண்டு வலை விரிப்பார்கள்.

ஒரு நாள் அவளுடன் இருந்தால் என்னாகும் என்று சபலப்பட்டால் போதும். சர்வமும் நாசம். அந்த அதிகாரியின் எதிர்காலமே அழிந்துவிடும்.

சர்வதேச நிழல் யுத்தத்தில் உளவுத்துறை பயன்படுத்தும் இன்னொரு ஆயுதம். மிக பெரிய வசிகரமான ஆயுதம். பெண்.

அடுத்த நாட்டு அரசு அதிகாரிகள், அரசியல்வாதிகள், உளவாளிகள், முக்கிய பொருப்பில் இருப்பவர்கள் போன்றவர்களுடன் பழகவிட்டு அதை ரகசியமாக படமாக்கி, பின்பு அவர்களை மிரட்டி ரகசியங்களை பெறுவார்கள். தங்கள் நாட்டுக்கு தேவையான காரியத்தை சாதித்துக் கொள்வார்கள்.

உளவாளியாக வரும் பெண்கள் பெரும்பாலும் அழகாக இருக்க வேண்டும். தற்காப்பு தெரிந்திருக்க வேண்டும். எதற்கு துணிவோடு இருக்க வேண்டும். எல்லாவற்றிக்கும் மேலாக எதற்கும் தயாராக இருக்க வேண்டும்!!!

இது தான் உலகளவில் பெண் உள்வாளியின் தகுதியாக இருக்கிறது. ஒரு ஆண்ணை அனுப்பி ரகசியத்தை பெருவதை விட பெண் உளவாளியை வைத்து தகவல் திறட்டுவது சுலபமாகனது. குறைவான காலத்தில் சாத்தியமானது. அதே சமயம், மிக எளிதில் மாட்டிக் கொள்ள கூடியது.

ஒரு அரசு அதிகாரி பெண் வலையில் சிக்க வைப்பது பெரிய விஷயமில்லை என்று தோன்றலாம். ரா அதிகாரி அழகான வெளிநாட்டு பெண்ணிடம் பேசினாலே தகவல் மேலிடத்துக்கு பொய்விடும். சந்தேகம் வந்துவிடும். விளக்கம் கேட்பார்கள். சந்தேகம் ஏற்பட்டால் பெண்ணையும் விசாரிப்பர்கள். அதையும் மீறி அந்த பெண் ரா அதிகாரி வலையில் வீழ வைக்க வேண்டும் என்பது தான் அவளுக்கு சவாலான காரியம்!!!

ஒரு பெண்ணை அனுப்பி தகவல் பெருகிறார்களே! இதெல்லாம் கேவலமாக இல்லையா! என்று பத்தாம் பசிளிதனமாக கேள்வி எல்லாம் இங்கு கேட்பது வீண்.

சாணக்கியர் நமக்கு சொல்லிக் கொடுத்த அர்த்தசாஸ்திரத்தில், "போரில் நீதி, நேர்மைக்கு இடமில்லை. எல்லாமே தர்மம் தான்".

நிழல் யுத்தத்தில் ஆயுதங்களுக்கு வேலையில்லை. முளைக்கு மட்டுமே வேலை. யாரைப் பற்றி யார் அதிகம் தகவல் திரட்டுகிறார்கள். அந்த தகவல் வைத்து எப்படிப்பட்ட அரசியல் முடிவுகள் எடுக்கப்படுகிறது என்பது முக்கியம். அந்த தகவலை வைத்து கொண்டு தற்காத்து கொள்ள வேண்டும் அல்லது லாபம் சம்பாதிக்க வேண்டும். அது தான் குறிக்கோள். இவைகள் பிரதான இலக்காக இருக்கும். அதை செயல்ப்படுத்தும் வழி முறைகள் அல்ல…!!

ஒரு பெண்ணுக்கு இருக்கும் கற்பு, பண்பாடு என்னாவது? ஏன் பெண்கள் உளவு இப்படி தான் இருக்க வேண்டாமா போன்ற கேள்விகள் அர்த்தமற்றது. மன்னர் காலத்தில் இருந்தே பெண்கள் உளவாளிகள் இப்படி இருந்திருக்கிறார்கள். அந்தப்புர நாயகியாக இருந்து எதிரிக்கு தகவல் கொடுத்திருக்கிறார்கள்.

'நிழல் உலகில்' செக்ஸ் என்பது பெரிய விஷயமில்லை. அதுவும் பணத்தை போன்ற பொருள். அதை கொடுப்பதால் கிடைக்க போகும் லாபம் பெரிது. அதுவும், இந்தியா போன்ற பண்பாடு, கலாச்சாரம் கட்டுகோப்பாக வாழ்ந்தவர்களை கொஞ்சம் சபலப்பட வைத்தால் போதும், வலையில் வீழ வைப்பது எளிது.

இதுப் போன்ற நிழல் உலகில் இருக்கும் உளவாளிகள் பெண் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருப்பது அவசியம்.

இந்த ஹனி ட்ரெப்பில் உன்னி கிருஷ்ணன் போல் ஒரு சில ரா அதிகாரிகள் மாட்டியிருக்கிறார்கள். பலர் தப்பித்திருக்கிறார்கள். தங்களை வலையில் மாட்டிவிட எதிரி நாட்டவர்கள் பெண்களை வைத்து சிக்க வைப்பார்கள் என்பது நன்கு தெரியும். அதனால், பெண் விஷயத்தில் ஜாக்கிரதையாகவே இருப்பார்கள்.

ஆனால், பெரும்பாலான ஐ.எஃப்.எஸ் (IFS) அதிகாரிகள், இந்திய தூரத்தில் பணி செய்பவர்கள், வெளிநாட்டுக்கு செல்லும் அரசியல்

தலைவர்கள் போன்றவர்களுக்கு பெண் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று பயிற்சி அளிக்கப்படுவதில்லையே!!

வெளிநாட்டுக்கு வந்தால் விஸ்கி, சாப்பாடு சுவை எப்படி இருக்கும் தெரிந்துக் கொள்ளும் ஆர்வம், பெண்கள் விஷயத்தில் இவர்களுக்கு இருக்கிறது. அவர்களின் ஆர்வத்தை தூண்டுவது போலவே பெண்கள் நெருங்கி பலகுவார்கள். இதுப் போன்ற அந்நிய தொடர்புகளை இந்திய அரசு அதிகாரிகளை நெருங்கவிடாமல் ரா செய்திருக்கிறது. மாட்டாமலும் காப்பாற்றியிருக்கிறது.

ஹனி ட்ரெப்பில் மாட்டி நமது நாட்டின் ரகசியங்களை கொடுக்கும் போது ரா தடுத்து போலீஸ் உதவியுடன் அவர்களை கைது செய்திருக்கிறது.

பெண்களை வைத்து தகவல் திரட்டுவதில் அமெரிக்காவின் சி.ஐ.ஏ மிக கில்லாடிகள். அடுத்து அவரது தம்பி மோஸாட்!!

இயற்கையிலே அமெரிக்க, இஸ்ரேல் பெண்கள் அழகாக தெரிவததால் அதிகாரிகள் மயங்குவதில் வியப்பில்லை.

சரி! வெளிநாட்டு உளவாளிகள் பெண்களை வைத்து தகவல் திரட்டுவது போல் இந்திய ராவும் பெண்களை வைத்து தகவல் திரட்டுகிறார்களா? அதிகாரப் புர்வமாக ஆதாரம் இல்லை என்று சொல்ல வேண்டும். நம் எதிரியான பாகிஸ்தான் ஐ.எஸ்.ஐயிடம் இருந்துக் கூட பகிரங்கமாக இந்த குற்றச்சாட்டு வந்ததில்லை.

பி.ராமன் எழுதிய “The Kaoboys of RAW & Down Memory Lane” புத்தகத்தில் பாகிஸ்தான் அதிகாரி ஒருவர், பஞ்சாபி பெண்களை தகவல் திரட்டுவதை குத்திக் காட்டியதையும், எங்களுக்கும் பஞ்சாபி பெண்கள் பிடிக்கும் என்று கிண்டலாக சொன்னதையும் வருத்தப்பட்டு பதிவு செய்திருக்கிறார். அதே சமயம், அந்த குற்றச்சாட்டை அந்த புத்தகத்தில் பி.ராமன் அவர்கள் மறுத்திருக்கிறார்.

இதுப் போன்ற ஹனி ட்ராப்பில் மாட்டிய ரா அதிகாரிகள் நீண்ட நாட்கள் தப்பிக்க முடியாது. சிறு சந்தேகம் வரும் நடவடிக்கை தெரிந்துவிட்டால் போதும். அதை வைத்து எப்படியாவது கண்டுப்பிடித்துவிடுவார்கள். அந்த உண்மை தவறு செய்த அதிகாரிகளுக்கும் தெரியும். இருந்தும், எப்படியாவது அந்த வீடியோ பதிவை அழித்து விட முடியாதா என்ற ஆசையில் எதிரியின் மிரட்டலுக்கு பணிந்து போவார்கள்.

மாட்டுக் கொண்ட அரசு அதிகாரிகள் இந்த வேலை முடித்துக் கொடுத்தால் விட்டுவிடுவார்கள், வீடியோ ஆதரத்தை அழித்துவிடுவார்கள் எப்படி நம்புகிறார்கள் என்பது புரியவில்லை. எதிரிக்கு இந்திய ரகசியங்கள் தான் முக்கியம். வலையில் விழுந்த அதிகாரி, அரசியல்வாதி என்ன ஆனாலும் அவர்களுக்கு கவலையில்லை. அவர்கள் மாட்டிக் கொள்ளக் கூடாது என்று எதிரி அக்கரை காட்டினால், அவர்கள் மூலம் கிடைக்க வேண்டிய தகவல் இன்னும் இருக்கிறது என்று அர்த்தம்.

ஹனி ட்ரெப்பில் மாட்டிய அதிகாரிகள் எதிரி நாட்டின் உளவாளி பயந்து வேலை செய்கிறோம் என்பதை உணர வேண்டும். இவர்களை கண்காணிக்காமல் இருப்பது ரா ஒன்றும் விபரம் தெரியாதவர்கள் இல்லை. எதிரிக்கு வேலை செய்யும் உள்நாட்டு உளவாளிகள் நம்மை கண்காணிக்க தொடங்கி விடுவார்கள் என்ற உண்மையை புரிந்துக் கொள்ள வேண்டும்.

தீவிரவாதிகள், எதிரி நாடு என்று போன்றவர்கள் கண்காணித்து தகவல் திரட்டுவது மட்டும் ராவுக்கு முக்கியமான வேலை. நமது ரகசியத்தை எதிரியிடம் கொடுக்காமல் பார்த்துக் கொள்ள சொந்த இந்திய அதிகாரிகள், அரசியல்வாதிகள் மீது ஒரு கண் வைத்திருப்பது அவசியம் என்பது தான் இதுப் போன்ற 'ஹனி ட்ராப்' சம்பவங்கள் நமக்கு உணர்த்துகிறது.

*****

# 18. எதிரியின் குற்றச்சாட்டு

இந்தியாவில் நடக்கும் இஸ்லாமிய தீவிரவாத தாக்குதலுக்கு பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ பங்கு இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ரா, ஐ.பி இரண்டுமே முதலில் ஆராய்வது பயன்படுத்தப்பட்ட ஆயுதம் ஐ.எஸ்.ஐ அமைப்பில் இருந்து வாங்கியதா, ஐ.எஸ்.ஐ அமைப்புக்கு என்ன தொடர்பு என்பது தான். காரணம், நம் வளர்ச்சி எந்த அளவுக்கு கவனம் செலுத்துகிறோமோ அதை விட நம் வளர்ச்சியை கெடுப்பதில் ஐ.எஸ்.ஐ கவனம் செலுத்துகிறது.

எப்படி இந்தியாவில் நடக்கு தீவிரவாத தாக்குதலுக்கு ஐ.எஸ்.ஐ காரணமாக இருக்கிறது என்று நாம் நினைக்கிறோமோ, அதேப் போல் பாகிஸ்தானில் நடக்கும் தீவிரவாத தாக்குதலுக்கு ரா காரணம் என்று அவர்கள் நினைக்கிறார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால், அல் கொயிதா / தாலிபன் நடத்தும் தாக்குதலைக் கூட ராவின் பின்னனி இருக்கிறது என்று பாகிஸ்தன் கூறுவது தான்.

அல் கொயிதா/ தாலிபன் தாக்குதல் பட்டியலில் இந்தியா இருப்பது உலகம் அறிந்த உண்மை. அப்படிப்பட்ட அமைப்புடன் இந்திய ராவுக்கு தொடர்பு கிடைத்தால் அவர்களை ஒழிக்க நினைப்பார்களே தவிர, அவர்களை வைத்து பாகிஸ்தான் மீது தாக்குதல் நடத்த நினைக்க மாட்டார்கள்.

2001 இரட்டை கோபுரம் தாக்குதல் பிறகு, பாகிஸ்தான் தீவிரவாதத்துக்கு எதிரான தேசம் என்று அறிவித்துக் கொண்டு அமெரிக்காவுக்கு ஆதரவாக இருந்தது. இவ்வளவு நாள் தங்களுக்கு ஆதரவாக இருந்தவர்கள் திடீர் என்று அமெரிக்கா பக்கம் சாய்ந்தது அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதனால், அவர்கள் அவ்வப்போது பாகிஸ்தான் மீது தாக்குதல் நடத்துகிறார்கள். இதில் ராவின் பங்கு எங்கிருந்து வந்தது?

தீயவர்களின் நட்பு தீமையில் முடியும் என்பது போல் தாலிபனின் நட்பு பாகிஸ்தானுக்கு கெட்டதில் முடிந்தது. அவர்கள் நாட்டில் இருக்கும் தாலிபனை தாக்க அமெரிக்கா இராணுவம் வர வேண்டியதாக இருக்கிறது.

ஒரு முறை இஸ்லாமபாத்தில் தற்கொலைப்படை தாக்குதல் நடந்தது. அதை செய்தவர்கள் ஆப்கானிச்தான் தீவிரவாதிகள் என்று சொன்னதோடு பாகிஸ்தான் நிற்கவில்லை. அவர்களை பயிற்சி அளித்த ரா அமைப்பு என்று குற்றம் சாட்டியது. அப்கானிஸ்தானில் ரா அமைப்பு 171 பேருக்கு பயிற்சி அளித்திருக்கிறது. அவர்களில் 25 பேர் தாக்குதலி ஈடுப்பட்டதாக கூறியது. எந்த ஆதாரம் அற்ற பாகிஸ்தானின் இந்த குற்றச்சாட்டை இந்தியா மறுத்தது.

இந்தியாவில் நடக்கும் பெரும்பாலான தீவிரவாத தாக்குதல் இந்தியாவின் வளர்ச்சியை கெடுப்பதற்கு தான். ஆனால், பாகிஸ்தானில் நடக்கும் தீவிரவாத தாக்குதலுக்கு முக்கிய காரணம் வளர்ச்சியை கெடுப்பதை விட அல்-கொயிதா/ தாலிபனின் பழி வாங்கும் நடவடிக்கை என்பது பாகிஸ்தானுக்கே தெரியும்.

ஆப்கானில் தாலிபனின் வீழ்ச்சிக்கு பிறகு அவர்களுடைய காட்(Khad) உளவுத்துறையுடன் இந்தியாவின் ராவுக்கு நல்ல உறவு முறை இருந்து வருகிறது. ரா தங்களால் முடிந்த உதவியை காட் உளவுத்துறைக்கு செய்து வருகிறது. இந்தியா - பாகிஸ்தான் எல்லை பிரச்சனைப் போலவே, ஆப்கான் - பாகிஸ்தான் எல்லை பிரச்சனை இந்து வருகிறது.

அதுமட்டுமில்லாமல், ஒரு காலத்தில் தாலிபன்களுக்கு பாகிஸ்தான் உதவியிருக்கிறது என்ற அவர்கள் மனதில் ஆழமாக இருக்கிறது. தாலிபான்களுக்கு எதிரான போரிலும் பாகிஸ்தான் உதவியிருக்கிறது. ஆப்கானிஸ்தான் எதிரான இரண்டு போரிலும் பாகிஸ்தான் பங்கு இருப்பதால், ஆப்கான் பாகிஸ்தானை எதிரியாகவே பார்க்கிறது. அதனால், எல்லைப்பகுதில் ஆப்கான் இராணுவ தாக்குதல் நடத்துவதும், அவர்கள் பதிலுக்கு தாக்குதல் நடத்துவதும் அன்றாட விஷயமாக

இருக்கிறது. குறிப்பாக டுரன்ட் லைன் (Durant Line) பகுதில் இரண்டு நாடுகள் அவ்வப்போது சண்டை வந்துக் கொண்டு இருக்கிறது.

பாகிஸ்தானில் அதிகப்படியான பிரச்சனைக்கு பதில் தெரியவில்லை என்றால் அவர்கள் கை காட்டுவது இந்தியாவையும், ரா அமைப்பும் தான்.

பாகிஸ்தான் கூற்றுப்படி 1983 முதல் 1993 வரை 35,000 ரா உளவாளிகள் பாகிஸ்தானில் ஊடுருவி இருக்கிறார்கள். அதில், 12,000 பேர் சிந்து பகுதிகளிலும், 10,000 பேர் பாகிஸ்தானின் பஞ்சாப் பகுதிகளிலும், 8000 பேர் வட மேற்கு பகுதிகளிலும், 5000 பேர் பலோசிஸ்தான் பகுதியில் இருப்பதாக கூறுகிறார்கள். பாகிஸ்தானை தாக்குதல் நடத்துவதற்காகவே 40 ரகசிய பயிற்சி அமைப்பு இருப்பதாகவும் கூறுகிறது.

இந்தியாவின் பங்கு இருப்பதாக பாக். அரசு குற்றம் சாட்டும் சில தாக்குதல்

டிசம்பர் 21, 1995 பெஷ்வார் சத்தர் பகுதியில் நடந்த கார் குண்டு வெடிப்பில் 37 பேர் இறந்தார்கள், 50 பேர் படுகாயம் அடைந்தார்கள்.

14 ஏப்ரல் 1996ல் ஷவ்கத் கானும் மருத்துவமனையில் வெடிக்குண்டி தாக்குதலில் 7 பேர் இறந்தார்கள், 34 பேர் படுகாயம் அடைந்தார்கள்.

28 ஏப்ரல், 1996ல் லாகூரில் இருந்து சாஹிவால் வரை செல்லும் பெருந்து பாய் பெரு என்ற இடத்தில் வெடித்து சிதறியது. சம்பவ இடத்திலே 44 பேர்கள் இறந்தார்கள். 30 பேர் உயிருக்கு போராடியப்படி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்கள்.

8 மே, 1996ல் ஷேக்புரா மருத்துவமனையில் வெடிகுண்டு தாக்குதல் நடத்தப்பட்டு 9 பேர் இறந்தார்கள். 29 பேர் படுகாயம் அடைந்தார்கள்.

10 ஜூன், 1996ல் குஜ்ரன்வாலா என்ற பகுதியில் நடந்த குண்டு வெடிப்பில் மூன்று பேர் இறந்தார்கள்.

அதே நாளில் காரியன் அருகே இருக்கும் ஜி.டி.ரோட் ஒரு பஸ் வெடித்து இரண்டு பேர் இறந்தார்கள்.

27 ஜூன், 1996ல் ராவல்பாடியில் இருக்கும் மெட்ராஸ்ஸா பைசல் இஸ்லாம் குண்டு வெடித்து ஐந்து பேர் இறக்க, 50 பேர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்கள்.

8 ஜூலை, 1996ல் பைசலாபாத் ரயில் நிலையத்தில் இருக்கும் பயணிகள் பெட்டிகள் காப்பகத்தில் குண்டு வெடித்து மூன்று பேர் இறந்தார்கள்.

1996 பாகிஸ்தானில் நடந்த தொடர் குண்டு வெடிப்புகளுக்கு பாகிஸ்தான் இந்தியா ரா மீது குற்றம் சுமத்தியது. ஆனால், இந்திய ரா அமைப்பு மறுத்தோடு இல்லாமல் பாகிஸ்தான் காஷ்மீர் அருகே இந்தியாவுக்கு எதிராக பயிற்சி அளிக்கும் தீவிரவாதிகளைப் பற்றி கேள்வி எழுப்பது.

இந்த குற்றச்சாட்டுகளை கூறிய பாகிஸ்தான் இந்தியாவிடம் சரியாக ஆதாரத்தை காட்டவில்லை. அந்த சமயத்தில் பாகிஸ்தானுக்கு தாலிபனுடன் நல்ல உறவு இருந்ததால், தங்களை தாக்கியது ரா அமைப்பினர் என்பது பாகிஸ்தானின் கருத்து.

http://www.globalsecurity.org/intell/world/india/raw.htm

*****

# 19. இந்தியா – பாகிஸ்தான் திரை மறைவு யுத்தம்

அடுத்த ஒரு மாதத்திற்கு பத்திரிக்கைகளுக்கு பரப்பரப்பான செய்தி கிடைத்திருக்கிறது என்று தான் முதலில் நினைத்தார்கள். ஆனால், தங்கள் நாட்டையே வேவு பார்க்கும் வேலை நடக்கிறது ஒரு சிறு பொறி தட்டியதில் ஐ.எஸ்.ஐ உஷாராகிவிட்டார்கள்.

இஸ்லாமாபாத்தில் ஒர் இந்திய பள்ளிக்கூடம். பெரும்பாலும் இந்தியத் தூதரக அதிகாரிகள் மற்றும் ஊழியர்களின் பிள்ளைகள் படிக்கிறார்கள். பொதுவாக, அந்நிய நாட்டு அலுவலகங்கள், இடங்கள் எல்லாம் கொஞ்சம் சந்தேக கண்ணோடு பார்ப்பது தான் அந்த நாட்டின் உளவுத்துறையின் வேலை. அதையே தான், பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ உளவு அமைப்பும் செய்தது.

அந்த இந்திய பள்ளியில் ஒரு அழகானப் பெண். பார்த்த மாத்திரத்தில் கொஞ்சம் தடுமாற வைக்கும் அழகு. ஐ.எஸ்.ஐ உளவாளி அவள் அழகை ரசிப்பதற்காகவோ அல்லது நிஜமாக அவளை உளவு பார்க்க சென்றார்களோ தெரியாது. ஆனால், அவள் அடிக்கடி ஒரு பெரிய ஹோட்டலில் ஒரு பாகிஸ்தானியனிடம் சிரித்து பேசும் செய்தியை கண்டுபிடித்தனர்.

இந்தியப் பெண் பாகிஸ்தானியர் ஒருவரை காதலிக்கிறாரா? இன்னொரு சானியா – சோயிப் மாலிக் ஜோடி. ஐ.எஸ்.ஐ உளவுத்துறை பத்திரிக்கைக்கான தலையங்கத்தை இவர்களே யோசிக்க தொடங்கினர். எதற்கும் கொஞ்சம் விசாரித்து பார்க்கலாம் என்று விசாரித்தார்கள்.

அந்தப் பெண் சந்திக்கும் பையனின் ஜாதகத்தை கொண்டு வந்தார்கள். ராகு, கேது இல்லாத ஜாதகம். அவன் இது வரை வேலை செய்த இடங்கள், படிப்பு என்று எல்லா விபரங்களும் இருந்தது. அவன் வேலை செய்தது எல்லாம் தனியார் நிறுவனங்கள். காதலாக தான் இருக்கும்

என்றே உறுதி செய்யும் நிலையில்... ஒரு இடம் அவர்கள் கண்ணை உறுத்தியது. அவன் இதற்கு முன் கொஞ்ச நாட்கள் அணு ஆய்வு மையத்தில் வேலைப் பார்த்திருக்கிறான்.

இரண்டு ஐ.எஸ்.ஐ உளவாளிகள் அந்த இந்தியப் பெண் வீட்டுக்கு சென்றே விசாரித்தனர். முதலில், எதையும் சொல்ல மறுத்த அவள், பிறகு உண்மையை சொல்லத் தொடங்கினாள். அவள் ஒரு இந்திய உளவாளி. Research and Analysis Wing என்கிற ராவில் பணி செய்பவள்.

வேறு நாட்டு உளவாளி என்றால் சுட்டுவிடலாம். இல்லை என்றால் கைது செய்து அந்த நாட்டின் தூதரக சொல்லியிருக்கலாம். மாட்டியது இந்திய உளவாளியாயிற்றே!!

விஷயம் சர்வதேச மீடியாவுக்கு கொண்டு சென்றார்கள். இந்தியா மறுத்தது. இரண்டு பரப்பரப்புக்கு பின் மீடியா நீயூஸ் குறைந்தது. அந்தப் பெண் இந்தியா திரும்பவில்லை. ஐ.எஸ்.ஐ அந்தப் பெண் பேசி, மிரட்டி தங்கள் நாட்டுக்கு வேலை செய்ய வைத்தனர். டபுள் ஏஜெண்ட் வேலை. தன்னை காப்பாற்றாத இந்திய அரசு, மாட்டிக்கொண்டது பாகிஸ்தானிடம். அந்த பெண்ணால் என்ன செய்ய முடியும்.

***

கொண்டாட்டங்கள் நிறைந்த தினம். இராணுவ அணி வகுப்பு, கலை நிகழ்ச்சி, கோலாக்கலம், ஆயுத எந்திய வீரர்களின் ஊர்வலம். அப்படி சுபயோக தினம். மார்ச் 23. பாகிஸ்தான் தினம்.

அன்றைய நிகழ்ச்சி தொடங்கும் முன் அதிகாலை இரண்டு பேர் எல்லைக்கடக்க முயற்சித்தனர். மாட்டியவர்கள் இந்தியர்கள். அதுவும் பாகிஸ்தான் அரசு நிகழ்ச்சி நடக்கும் அன்று!!

ஐ.எஸ்.ஐ அடித்து விசாரிக்க அதிக நேர எடுத்துக் கொள்ளவில்லை. இருவரும் இந்திய உளவாளிகள். இன்றைய நிகழ்ச்சியில் பாகிஸ்தானின்

புதிய ஆயுதங்கள், வாகனங்கள் பற்றிய விபரங்களை சேகரித்து ஒரு ரிப்போர்ட் கொடுக்க வேண்டும் என்றனர். மாட்டிய இந்திய உளவாளிகளை அவர்கள் ஒன்றும் செய்ய விரும்பவில்லை. அதற்கு மாறாக அவர்களே ஒரு ஆயுதப்பட்டியலை தயார் செய்து சீல் வைத்த ஒரு ரிப்போர்ட்டை கொடுத்து இந்தியாவுக்கு அனுப்ப சொன்னார்கள்.

அதில் என்ன ஆயுதம் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று அந்த இருவருக்கும் தெரியாது. உயிருக்கு ஆபத்து இல்லாததால், அவர்கள் கொடுத்த பட்டியலை இந்தியாவுக்கு அனுப்பி வைத்தனர். இப்படி, மாட்டிய இந்திய உளவாளிகளை தண்டிப்பதற்கு பதிலாக, அவர்களை வைத்து தவறான தகவல்களை அனுப்பி வைத்தது ஐ.எஸ்.ஐ.

***

ஒரு காலத்தில் உளவுத்துறையில் சி.ஐ.ஏவுக்கும், கே.ஜி.பிக்கும் ஏழாம் பொறும் ஏழாம் பொருத்தமாக இருக்கும். அமெரிக்கா, ரஷியா இரண்டு நாடுகளுக்குள் நடக்கும் பணிப்போரில் அவரவர் நட்டை பக்கபலமாக இருந்தது அவர்களது உளவுத்துறை தான். சி.ஐ.ஏவுக்குள் கே.ஜி.பி ஊருவதும், கே.ஜி.பிக்குள் சி.ஐ.ஏ ஊடுவரல் செய்வதும் சகஜமாக விஷயமாக இருந்தது. அதேப் போல், ஐ.எஸ்.ஐவுக்கும், ராவும் ஏழாம் பொருத்தம் தான்.

சி.ஐ.ஏவிடம் கே.ஜி.பி உளவாளி மாட்டினாலும், கே.ஜி.பியிடம் சி.ஐ.ஏ உளவாளி மாட்டினாலும் அவர்கள் வைத்திருக்கும் தகவல் பொருத்து அவர்களை விடுவிப்பதா வேண்டாமா முடிவு எடுப்பார்கள். தங்கள் பணிப்போரில் உளவாளிகள் வேறும் பகடைக்காய் என்பது இரண்டு நாடுகளுமே நன்கு உணர்ந்தவர்கள். குறைந்த அளவு இந்த நேர்மையாவது ஐ.எஸ்.ஐ – ரா உளவாளிகளுக்குள் இருக்கிறதா சந்தேகம் தான்.

காரணம், அமெரிக்கா – ரஷ்யாவுக்குள் இருந்தது பணிப்போர். உலகில் யார் பெரிய சக்தி என்று நிருப்பிப்பதற்கான போர். ஆனால், இந்தியா –

பாகிஸ்தான் இடையே இருப்பது பகை. சந்தர்ப்பம் கிடைத்தால் ஒருவரை ஒருவர் அழிக்க தயங்காதவர்கள். இரண்டு நாடுகளுக்கும் தங்களுக்கு செய்த செயல்களை பெரிய பட்டியல் போட்டு வைத்திருக்கிறார்கள். அவர்கள் நம் குற்றம் சாட்டினால், பதிலுக்கு நாம் குற்றம் சொல்ல ஒரு பட்டியலை எடுத்துவிடுவோம்.

இரண்டு நாடுகளுக்கு நடக்கும் அரசியல் சண்டையை அவரவர் நாட்டுக்கு பக்க பலமாக நின்று தகவல் சேகரிப்பதில் இரண்டு உளவுத்துறையும் செம்மையாக தங்கள் பணியை செய்து வருகிறார்கள்.

இந்தியாவில் மட்டுமல்ல உலகளவில் ஐ.எஸ்.ஐ பற்றி தெரிந்த அளவிற்கு ராவை பற்றி பெரிதாக யாருக்கும் தெரியாது. காரணம், ஐ.எஸ்.ஐக்கு அந்த அளவுக்கு நல்லவர்களுடைய தொடர்பு இருக்கிறது. Lakshae-E-Taliba, Hizb-Al-Mujakit, Harkat-Ul-Ansar, ஆப்கான் மூஜாஹிதின் போன்ற தீவிரவாத அமைப்புகளுடன் ஐ.எஸ்.ஐக்கு தொடர்பு இருக்கிறது.

சி.ஐ.ஏவுக்கு பிறகு இரண்டாம் தர வேலைகளை செய்ய ஐ.எஸ்.ஐ அஞ்சுவதில்லை. ஏதாவது பிரச்சனை வந்தாலும் பிரதமர் பேசி சமாளித்து தான் ஆக வேண்டும். பல சமயம் ஐ.எஸ்.ஐ செய்வது பிரதமருக்கே தெரியாது. என்ன பதில் சொல்ல வேண்டும் என்று பிரதமர் விழிபிதுங்குவார். அப்படியே அவர்களை எதிர்த்து பிரதமர் கேள்வி கேட்டாள் அடுத்த நாள் பிரதமருக்கு பதிலாக இராணுவ ஆட்சி நடக்கும். பாகிஸ்தானில் ஐ.எஸ்.ஐ வைப்பது தான் சட்டம். பாகிஸ்தான் அரசியல் நிர்ணயம் செய்பவர்கள் ஐ.எஸ்.ஐ. தான்.

ஐ.எஸ்.ஐ ஒப்பிட்டு பார்க்கையில் ரா அந்த அளவுக்கு மோசமான குழந்தை கிடையாது. தீவிரவாத அமைப்புகளுடன் பெரிய நெருக்கம் வைத்துக் கொள்ளவில்லை. இந்திரா காந்தி காலத்தில் இலங்கை போராளிகள் ஆயுதம் வழங்கி பயிற்சி கொடுத்திருக்கிறதே தவிர, அவர்களை பயன்படுத்தி எந்த தீயக்காரணங்களுக்கும் இறங்கவில்லை.

ரா அமைப்பு பிரதமருக்கு கீழ் இயங்கும் அமைப்பு. ஐ.எஸ்.ஐ போல் தனிச்சையாக முடிவு எடுக்க முடியாது.

இந்திய அரசியல் சட்டத்தின் ரா இயங்குவதால் எது செய்வதாக இருந்தாலும் இந்தியாவுக்கு கெட்ட பெயர் வருவது போல் செய்ய முடியாது. அப்படியே செய்வதாக இருந்தால் வெளியே தெரியாமல் செய்ய வேண்டும்.

ஐ.எஸ்.ஐ காட்டிலும் ராவின் என்று பார்த்தால் நவீன தொழிநுட்பத்தை பயன்படுத்தும் வல்லுநர்கள் இந்தியாவில் அதிகம் இருக்கிறார்கள். ஐ.எஸ்.ஐக்கு இருக்கும் பணபளத்தைக் காட்டிலும், ராவுக்கு பணபலம் அதிகம். ஆனால், நாட்டின் பாதுகாப்புக்கு வேலைகளை தவிர அடுத்த நாட்டை அழிக்கும் வேலையில் ரா ஈடுபடாது என்று சொல்ல முடியாது. பிரதமர் அனுமதியில்லாமல் செய்ய முடியாது.

மற்ற நாட்டு உளவாளிகள் ஐ.எஸ்.ஐ காட்டிலும் ரா உளவாளிகளுடன் நல்ல தொடர்பு வைத்திருக்கிறார்கள். இஸ்ரேலின் மோஸாட் பாகிஸ்தான் எதிரான நடவடிக்கைகளுக்கு ராவுக்கு பயிற்சி அளிக்கிறது. இஸ்லாமிய தேசங்களுக்கு அமெரிக்காவுக்கு அடுத்து அவர்கள் எதிரியாக பார்ப்பது இஸ்ரேலை தான். அதேப் போல் இஸ்ரேலும் எந்த இஸ்லாமிய நாடும் தங்களுடன் நட்பு பாராட்ட நினைக்க மாட்டார்கள் என்பது நன்கு தெரியும். நாளைக்கே பாகிஸ்தான் தனக்கு எதிராக செயல்படலாம், எதிரி நாடுகளுக்கு உதவி செய்யலாம் என்ற சந்தேகம் இஸ்ரேலுக்கு எப்போதும் இருக்கும். அதனால், பாகிஸ்தானுக்கு எதிரான நடவடிக்கையில் இஸ்ரேலின் ஆதரவு இந்தியாவுக்கு என்றும் இருக்கும்.

பாகிஸ்தானால் ஆப்கானிஸ்தான் பாதிக்கப்பட்டிருப்பதால், ஆப்கானின் காட் உளவு அமைப்பும் இந்தியாவுக்கு ஆதரவாக தான் இருக்கும். அதுமட்டுமில்லாமல், காட் உளவுக்கு பயிற்சி அளிப்பதே ரா என்பதால் நம்மை அவர்கள் பகைத்துக் கொள்ள மாட்டார்கள். 9/11 தாக்குதல் முன்பு வரை அமெரிக்கா பாகிஸ்தானை ஆதரத்தது என்பது சந்தேகமில்லை. அதற்கு, கார்கில் யுத்தத்தில் அவர்கள் நடந்துக்

கொண்டதே சாட்சி. ஆனால், அதன் பின் அவர்களின் நேசப்பார்வை இந்தியா மீது திரும்பியது என்பதை மறுக்க முடியாது.

அதேப் போல், சீனாவுக்கு எதிரான பணிப்போரில் பாகிஸ்தானை விட இந்தியா தான் அவர்களுக்கு உதவ முடியும். அமெரிக்கா, இஸ்ரேல் நாடுகளே இந்தியாவுக்கு ஆதரவாக இருக்கும் போது பிரிட்டன் தனிச்சையாக என்ன முடிவு எடுத்துவிட முடியும். அவர்களின் எம்.ஐ6 உளவு அமைப்பும் இந்தியாவுக்கு தான் ஆதரவு அளிக்கிறது. எப்படி வல்லரசு நாடுகளின் ஆதரவு இந்தியா ராவுக்கு இருக்கிறதோ, இஸ்லாமிய நாடுகளின் ஆதரவு ஐ.எஸ்.ஐக்கு இருக்கிறது.

இந்தியாவை பொறுத்தவரை பாகிஸ்தான் குறித்து நிரந்தரப் பார்வை என்று எதுவும் கிடையாது. அங்கு ஆளும் ஆட்சியாளர்களும், சூழ்நிலைகளும் வைத்து தான் தீர்மானிக்கப்படும். ஆனால், பாகிஸ்தான் இந்தியா மீது வைத்திருக்கும் பார்வை அப்படியில்லை. யார் ஆட்சி செய்தாலும் இந்தியாவை அவர்கள் எதிரியாக தான் பார்ப்பார்கள். அதை வைத்து தான் அவர்கள் அங்கு அரசியல் செய்ய முடியும்.

இந்த திரைமறைவு யுத்தத்தில் யார் வெற்றிப் பெருவார்கள், யார் தோல்வி பெருவார்கள் சொல்ல முடியாது. சொல்லவும் மாட்டார்கள். எல்லாம் பரம ரகசியமாக தான் இருக்கும். இரண்டு நாடுகளும் கை குழுக்கிக் கொண்டு ரயில், பஸ் விட்டாலும், இந்தியா-பாகிஸ்தான் மீண்டும் அண்ணன் – தம்பியாக பழகத் தொடங்கினார்லும், இவர்களுக்குள் நடக்கும் யுத்தம் எப்போது முடிவுக்கு வரும் என்று யாராலும் சொல்ல முடியாது.

**ஐ.எஸ்.ஐ: நிழல் அரசின் நிஜ முகம் – பா.ராகவன்**

(http://www.youtube.com/watch?v=XM5BJj0w_Cc )

*****

# 20. ஐ.பி: பங்காளி சண்டை

சிறு வயதில் இருந்தே ஒன்றாக வளர்ந்த சகோதரர்கள். ஒன்றாக விளையாடி, பேசி, படித்து பழகியவர்கள். ஒரே பள்ளிக்கு சென்றவர்கள். ஒரே காலக்கட்டத்தில் திருமணம் செய்துக் கொண்டவர்கள். இரத்தமும் சதையுமாக இருந்தவர்கள்.

இப்படி, இருந்தவர்கள் திருமணம், குழந்தைகள் வந்தவுடன் அவர்களுக்குள் சொத்து பிரச்சனை வந்து கோர்ட்டில் வழக்கில் தொடர்வதை பார்த்திருக்கிறோம். ரோட்டில் கட்டிப் புரண்டு சண்டை போடுவதை கேள்விப் பட்டிருப்போம். பணத்திற்காக ஒன்றாக பிறந்தவர்கள் இப்படி அடித்துக் கொள்கிறார்களே என்று தோன்றும். அதையும் தாண்டி இவர்களுக்குள் ஒரு பிரச்சனை இருந்திருக்கிறது.

அது அப்போது அவர்களுக்கு புரியாது. இளமை முறுக்கோடு இருப்பார்கள். காலம் கடந்து இறக்கும் தருவாயில் பழசை எல்லாம் நினைக்கும் போது தான் புரியும். ஒற்றுமையாக வளர்ந்தவர்கள் சண்டைப் போட்டுக் கொண்டதற்கு காரணம் தங்களுடைய 'ஈகோ' என்று!!!

"ஒரு லட்ச, இரண்டு லட்சம் அப்பவே விட்டுக் கொடுத்திருந்தா... நாங்க ஒண்ணாயிருந்திருப்போம்" போன்ற ஏக்க குரல்கள் வயதான பிறகு தங்கள் சகோதர, சகோதரிகள் பேசுபவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்.

"இரண்டடி, மூனடி இடம் தான். விட்டுக் கொடுத்திருக்கலாம். இப்ப பாரு எவனோ சாப்பிடுறான்" அரசாங்கம் ரோடு போட இடத்தை எடுக்கும் போது அவர்களுக்கு தோன்றும்.

இவர்களுக்கு அடுத்து வரும் தலைமுறையினர் தங்கள் பெற்றோர்கள் ஒன்றாக வளர்ந்தது தெரியாது. ஆனால், அவர்கள் இரண்டு பேரும் அடித்துக் கொண்டது தெரியும். ஒருவரை ஒருவர் அவமானப்படுத்திக்

கொண்டு தெரியும். பேசிய கெட்ட வார்த்தை தெரியும். அவர்கள் விட்டுச் சென்ற கோபத்தை இவர்களும் தொடர்வார்கள்.

“எங்க அப்பா, அம்மா அவங்கக் கூட பேசுறது இல்ல. நாங்களும் அவங்க கிட்ட பேச மாட்டோம்” என்பார்கள்.

இப்படியே அடுத்த இரண்டு முன்று தலைமுறைகள் எதற்காக சண்டைப் போட்டோம் என்று கூட தெரியாமல் சண்டை போட்டுக் கொண்டும், கருத்து வேறுபாட்டோடு இருப்பார்கள். எப்படி சமாதானப்படுத்துவது என்பது யாருக்கும் தெரியாது.

இவர்களை பார்க்கும் மற்றவர்களுக்கு எதோ “பங்காளி சண்டைங்க விடுப்பா” என்று சொல்லி சென்றுக் கொண்டு இருப்பார்கள். ஆனால், இதேப் பிரச்சனை உளவுத் துறைக்குள் இருந்தால், நம்மால் எப்படி விட்டு செல்ல முடியும். அதை எப்படி சாதாரன விஷயமாக எடுத்துக் கொள்ள முடியும்.

இந்த ’பங்காளி சண்டைக்கு’ எப்படி முற்றுப் புள்ளி வைக்க வேண்டும்’ என்று இந்திய உளவுத்துறை மட்டுமல்ல… இரண்டு உளவுத்துறைகள் வைத்திருக்கும் எல்லா நாடுகளும் யோசித்துக் கொண்டு தான் இருக்கின்றன.

இன்று நேற்றல்ல… ரா உருவாகிய காலத்தில் இருந்தே ராவுக்கும், ஐ.பிக்கும் ஏழாம் பொருத்தம் தான். பிரதமர் இந்திரா காந்தி தயவால் ரா உருவானது தான் தெரியும். ஆனால், ராவில் வேலை செய்தவர்கள் பெரும்பாலும் உள்ளூர் உளவுத்துறையான ஐ.பியில் இருந்து சென்றவர்கள்.

ஐ.பி சிறப்பான பணியாற்றியவர்கள் பலர் ராவில் நியமிக்கப்பட்டார்கள். ஒரு சிலருக்கு ராவில் முக்கிய பொருப்பு கொடுக்கப்பட்டது. கூடுதல் பயிற்சி கொடுத்தனர். இதனால், ஐபி வேலை செய்யும் திறமையான அதிகாரிகளை அவர்கள் இழக்க வேண்டியதாக இருந்தது. கூடவே,

வெளியுறவு பார்த்துக் கொண்டு இருந்த அதிகாரத்தை ரா முழுவதுமாக எடுத்துக் கொண்ட கோபம் வேறு சேர்ந்துக் கொண்டது.

உள்துறை, வெளித்துறை என்று இரண்டையும் பார்த்துக் கொண்டு இருந்தவர்களிடம்... "நீ உள்நாட்டு பிரச்சனை மட்டும் பாரு. வெளிநாட்டு பிரச்சனையே இந்த தம்பிங்க பார்த்துப் பாங்க..." என்று பண்ணையார் தோரனையில் பிரதமர் கூறினால், அப்போதை கேட்டு கொண்டு "சரி தான்" ஐ.பியால் சொல்ல முடிந்தது. ஆனால், அதன் பின் நடக்க இருக்கும் 'பனிப் போர்' யாரும் யூகிக்க முடியாது.

உள்துறையில் வேலை செய்யும் திறமையான அதிகாரிகளை இழந்த கோபத்தில் இருந்த ஐ.பியிடம் இன்னொரு விஷயம் கோபமுட்டியது. அது, ஐ.பியில் ஒரு அதிகாரிக்கு கீழ் வேலை செய்தவர்கள் ராவுக்கு சென்றவுடன் ஐ.பியிடம் தங்களுக்கு தேவையான தகவலை தேடி தரச் சொல்லி கேட்பது.

"நேத்து வரைக்கும் நம்ம முன்னாடி கைக்கட்டி நின்னுக்கிட்ட பசங்க... அங்க போய் எனக்கு வேலை சொல்லுறாங்களா...!!" என்று ஐ.பியின் கோபம் இன்னும் அதிகமானது.

ஐ.பி மூத்த உளவுத்துறை. ஆங்கிலேயர் காலத்தில் இருந்தே நியமிக்கப்பட்ட உளவுத்துறை. சுதந்திரப் போராளிகள், புரட்சியாளர்கள், அரசியல் தலைவர்கள் போன்றவர்களை உளவுப் பார்த்து வெள்ளையர்களுக்கு தகவல் கொடுத்தவர்கள். இந்தியாவில் அறிவிக்கப்படாமல் நூற்றாண்டை கொண்டாடிய உளவுத்துறையாக ஐ.பி இருந்திருக்கிறது.

இவ்வளவு நாள் தங்களுக்கு அளித்து வந்த அதிகாரம், ஆட்கள் எல்லாம் எடுத்துக் கொண்டு புதுசாக 'ரா' என்று உருவாக்கிய கோபம் இருக்கத் தான் செய்யும். அவர்களது கோபம் நியாயம் தான். ஆனால், தம்பி 'ரா' அண்ணன் 'ஐ.பி' கோபத்தை புரிந்து அனுசரனையாக நடந்துக் கொண்டு இருக்கலாம். ஆனால் அதுவும் நடக்கவில்லை.

இவ்வளவு நாள் உள்துறை மந்திரியை தொடங்கி பலருக்கு பதில் சொல்ல வேண்டியதாக இருந்தது. இனி, பிரதமருக்கு மட்டும் பதில் சொன்னால் போதும். யாரும் நமக்கு கேள்வி கேட்க முடியாது என்ற சந்தோஷம் ஐ.பியில் இருந்து 'ரா'வுக்கு வந்தவர்களுக்கு இருந்தது. சுதந்திரப் பறவை. ஆனால், ஐபி உள்துறை மந்திரிக்கு கட்டுப்பாட்டில் இருந்தது.

இதனால், ரா சுதந்திரமாக செயல் படுவது போல் ஐ.பியால் சுதந்திரமாக செயல்பட முடியவில்லை. ஐ.பி செயல்பாடுகளில் அரசியல் தலையீடு அவ்வப் போது இருப்பது அவர்களுக்கு எரிச்சலாக இருந்தது. ராவை பார்க்கும் போது அவர்களுக்கு பொறாமையாக மாறியது.

ரா, ஐ.பி இரண்டு உளவுத்துறைக்கும் எதிரிகள் வித்தியாசமாக இருந்தார்கள்.

ராவைப் பொருத்தவரையில் யார் எதிரி சரியாக தெரியும். பாகிஸ்தான், சீனாவில் இருந்து இந்தியாவுக்கு எதிராக செயல்படுவார்கள் என்பது தெரியும். இந்தியா அதிக வளர்ச்சி அடைவதாக தெரிந்தால் அமெரிக்கா ஏதாவது செய்யலாம் என்பது தெரியும். உள்ளூர் ஜிகாத்திகளுக்கு இவர்களிடம் வரும் நிதி, ஆயுதங்கள் காண்கணிக்க தெரியும். ஒரளவுக்கு இந்தியாவுக்கு எதிராக எந்த நாடு செயல்படும் என்பது ராவுக்கு தெரியும். ஆனால், ஐபிக்கு அப்படி இல்லை.

மாவோயிஸ்ட், தெலுங்கானா பிரச்சனை மட்டும் உள்நாட்டு பிரச்சனையாக இல்லை. ஆர்.எஸ்.எஸ் அமைப்பு, இஸ்லாமிய அமைப்பு போன்றவர்கள் முன் வைக்கும் இந்து – முஸ்லீம் பிரச்சனை, சின்ன பொறியாக இருந்தாலும் பூதமாக மாறும் சாதி பிரச்சனை, அதில் ஆதாயம் தேடும் எதிர் கட்சிகளின் நடவடிக்கை, அரசு திட்டங்களை எதிர்ப்பவர்கள் என்று பெரிய பட்டியலே இருக்கிறது. இதில் ஐ.பி எதில் கவனம் செலுத்த வேண்டும். வேண்டாம் என்று முடிவு எடுப்பதே சிரமமாக இருக்கும்.

எது சின்ன பிரச்சனை. எது பெரிய பிரச்சனை. பாகுபாடுப் பார்ப்பதற்குள் பெரிதாகிவிடலாம். எந்த பிரச்சனையும் சாதாரனமாக எடுத்துக் கொள்ள முடியாது.

இந்தியாவுக்குள் பிரச்சனை என்றால் அதை பெரிதாக்கிவிடும் அந்நிய சக்திகள் வரும். இதையெல்லாம் சமாளிப்பதற்கான தகவல் திரட்டுவதற்கு கால அவகாசம் அவர்களுக்கு மிக குறைவாக இருக்கும். அந்நியர்களால் இந்தியாவுக்குள் நடக்கும் எந்த அசம்பாவிதத்திலும் ராவை விட ஐ.பி தான் அதிகம் பாதிக்கப்படுகிறது. ஊடகங்களும் அவர்களை தான் அதிகம் விமர்சிக்கிறது.

அதுமட்டுமில்லாமல், ஐ.பியை விட அதி நவீன சாதனங்கள் ராவுக்கு அதிகம் வழங்கப்பட்டுயிருக்கிறது. காரணம், அமெரிக்க, சீனா, பாகிஸ்தான் போன்ற நாடுகளை கண்காணித்து தகவல் திரட்டுவது என்பது எளிதான விஷயமில்லை. அதற்கு தகுந்த தொழில்நுட்பமும், மனித வளமும் ராவுக்கு தேவை. உளவாளிகளுக்கு உதவப் பணமும் தேவை.

ஆனால், ஐ.பி கண்காணிக்கப் போவது இந்தியாவினுள் தான். அதனால், இந்தியாவுக்கு தேவையான தொழில்நுட்பத்தை பயன்படுத்தினால் போதும் என்ற நிலைமை. ஐ.பி ராவுக்கு அதிக முக்கியத்துவம் தருகிறது என்று சில சமயம் எண்ணுகிறது.

வெளிநாட்டு முகாம்மில் தங்களுக்கு ஆதரவாக தகவல் திரட்டி தர ஆட்கள் பிடிப்பது ராவுக்கு சிரமமான காரியம். நமக்கு ஆதரவாக வேலை செய்வதாக செய்து ராவை மாட்டிவிடுவார்கள். ஆனால், ஐ.பி தங்களுக்கு ஆதரவாக உளவாளிகள் ஒரளவு எளிதாக பிடித்துவிடுவார்கள். பணம், பொருள் அல்லது அவனுக்கு எதிராக இருக்கும் வழக்கு போன்ற விஷயங்களை காட்டி தங்களுக்கு சாதகமாக உளவு பார்க்க வைப்பார்கள்.

இந்தியாவுக்கு இரண்டு உளவுத்துறையும் வேண்டும். ஒன்று வேண்டும். வேண்டாம் என்று ஒதுக்க முடியாது.

1971 பங்களாதேஷ் பிரிவினையில் ராவின் வெற்றி, 1974 போக்ரான் அணு சோதனையை ஐ.பியை நம்பாமல் ராவை நம்பியது போன்ற விஷயங்கள் இன்னும் ஐ.பியை கடுப்பேற்றியது. இதனால், இந்திரா காந்தி கொண்டு வந்த நெருக்கடி காலத்தில் தங்கள் திறமையை காட்டுவதை சரியான சந்தர்ப்பமாக நினைத்தனர். இந்திரா காந்திக்கு எதிராக யார் கிளர்ச்சி செய்வார்கள் போன்ற தகவல்களை திரட்டி, எந்த புரட்சி நடவடிக்கைகள் வராமல் ஐ.பி பார்த்துக் கொண்டது.

நெருக்கடி காலத்தில் வட இந்தியர்கள் பலர் பாதிக்கப்பட்டிருந்தாலும், அவர்கள் கோபத்தை ஒருங்கிணைத்து எந்த போராட்டத்தை இந்திரா காந்திக்கு எதிராக செய்ய முடியவில்லை. இதனால், ஐபி இந்திரா காந்தியிடம் நல்லப் பெயர் உயர்ந்தது. ஐபி பொருத்தவரை இது வெற்றி தான். ஆனால், தேர்தலில் இந்திரா காந்திக்கு தோல்வியை கொடுத்தது.

ரா வெளிநாட்டை பார்த்துக் கொள்கிறார்கள். ஐ.பி உள்நாட்டை பார்த்துக் கொள்கிறது. இவர்களுக்குள் கோபம், பொறாமை இருக்கிறது. இவர்கள் எங்கு சந்திக்க போகிறார்கள்? எதற்காக இவர்களுக்குள் 'ஈகோ' பிரச்சனை வருகிறது போன்ற சந்தேகங்கள் வரலாம்.

இருவரும் தங்கள் ஹோம் கிரவுண்டில் ஆடும் போது எந்த பிரச்சனையும் இல்லை. அவரவர் வேலைகளில் அவர்கள் ராஜா. இரண்டுக்கும் போதுவான சில விஷயங்கள் இருக்கிறது. அப்போது தான் இருவருக்குள் பிரச்சனையே வருகிறது.

வெளிநாட்டில் இருக்கும் காலிஸ்தான் தீவிரவாதிகள், பாகிஸ்தான் உளவாளிகளை ரா கண்காணிப்பதிலும், தெலுங்கானா, மோவோயிஸ்ட் போன்றவர்களை வளரவிட்டாமல் அடக்கும் முயற்சியில் ஐ.பி செயல்பாட்டிலும் அவரவர் சரியாக தான் செய்கிறார்கள். ஆனால், வெளிநாட்டில் இருந்து இந்தியாவுக்கு எதிரான அமைப்புக்கு வரும்

உதவியையும், இந்தியாவுக்கு எதிராக உள்நாட்டில் இருந்து கொண்டு அந்நிய நாட்டுடன் வைத்திருக்கும் தொடர்பு போன்ற காரியங்களில் ராவும், ஐ.பியும் ஒன்றாக வேலை செய்ய வேண்டியது இருக்கிறது. தகவல் பரிமாற வேண்டியது இருக்கிறது.

உதாரணத்திற்கு, ஐ.பியால் மாவோயிஸ்ட் அமைப்புகளை கண்காணித்து, அவர்கள் திட்டத்தை செயலிழக்க வைக்க முடியும். ஆனால், அந்நிய நாட்டில் இருந்து வரும் நிதி, ஆயுதங்கள் போன்ற விஷயங்களை தடுக்க ராவின் உதவி அவர்களுக்கு தேவை. இங்கிருந்து மாவோயிஸ்ட்டுக்கு பணம் வரப் போகிறது ரா ஐ.பிக்கு கூறினால் தான், ஐ.பி அந்த தகவலை கொண்டு காவல்துறையிடம் கூறி தடுக்க முடியும்.

அதேப் போல் அந்நிய தீவிரவாதி சக்தி இந்தியாவுக்குள் ஊடுருவி விட்டால், அவர்களை தடுக்க ஐ.பியின் உதவி ராவுக்கு தேவை.

:வெளிநாட்டில் இருக்கும் சில தீவிரவாதிகள் இந்தியாவுக்கு ஊடுருவி விட்டார்கள். இந்த இடத்தில் பதுங்கியிருப்பதாக சந்தேகம். நீங்கள் பார்த்துக் கொள்ள முடியும்" என்று ரா ஐ.பி சொல்லி தடுக்க வேண்டும்.

இந்தியாவுக்கு எதிராக ஒரு அமைப்பு இந்தியாவில் தொன்றுவதாக தெரிந்தால் போதும். பாகிஸ்தானும், சீனாவும் வரிந்துக் கட்டிக் கொண்டு ஆயுதமும், பணமும் தரத் தயாராக இருக்கும். இதை ஏற்பாடு செய்து தர உள்ளூர் தரகர்கள் பலர் இருக்கிறார்கள். இதையெல்லாம் முறியடிக்க வேண்டும் என்றால் ரா, ஐ.பி ஒன்றாக செயல்ப்பட்டால் தான் முடியும்.

கனிஷ்கா குண்டு வெடிப்பில் ராவை குறைக் கூறலாம். மாவோயிஸ்ட் தாக்குதலில் ஐ.பி குறை கூறலாம். ஆனால், பாகிஸ்தானின் இருந்து வந்து மும்பை தாக்குவதை இரண்டு உளவுத்துறையுமே குறை சொல்ல வேண்டிய இருக்கிறது.

அப்போது, ரா இப்படி ஒரு தாக்குதல் நடக்கலாம் என்று முன்பே குறிப்பிட்டிருந்தோம் என்று கூறுவார்கள். தங்களுக்கு எந்த தகவலும்

வரவில்லை காவலர்கள் மூலம் ஐ.பி சொல்லும். அவ்வப் போது அரசியல் தலைவர்கள் இவர்களை சரியாக ஒருங்கினைத்து வேலை வாங்குவார்கள். ஒருங்கினைக்க முடியாதவர்கள் எதாவது தாக்குதல், அசம்பாவிதம் வரும் போது உணர்வார்கள்.

இரண்டு உளவுத்துறையை மீண்டும் ஒன்றாக்கி ஒரு உளவுத்துறையாக மாற்றினால் இந்த பிரச்சனை முற்றுப் புள்ளி வந்துவிடும் தானே!!

உள் நாட்டு பிரச்சனைகளை பார்த்துக் கொள்ளும் ஐ.பி, வெளிநாட்டு உளவுப் பார்ப்பட்கற்கும் ராவும் இந்தியாவுக்கு தேவை. இரண்டு ஒருங்கிணைப்பதோ அல்லது இரண்டில் ஒரு உளத்துறையை வேண்டாம் என்று நினைப்பதோ அபத்தமான முடிவு. அது இந்தியாவுக்கு எதிராகத் தான் முடியும்.

இந்தியாவுக்காக பாடுப்படும் இரண்டு உளவுத்துறை இப்படி ஒரு பனிப்போரை உள்நாட்டில் அந்நியர்கள் பிரச்சனை செய்யும் போது அவ்வப்போது குறை கூறுவதில் பார்க்க முடியும்.

இந்தியாவில் மட்டும் இப்படி பிரச்சனை நடக்கவில்லை. உலகத்தின் காவலராக நினைக்கும் அமெரிக்காவின் உளவுத்துறையான சி.ஐ.ஏவுக்கும், எப்.பி.ஐவுக்கும் இதே பனிப் போர் நடந்துக் கொண்டு தான் இருக்கிறது. அதை மீறி உலகத்தையே உளவு பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். அடுத்தவர்களின் அந்தரங்கத்தில் வேவு பார்க்கிறார்கள்.

ரா, ஐ.பி இரண்டு பேரும் களத்தில் வேலை செய்தாலும், அவர்களது நோக்கம் இந்திய பாதுகாப்பு என்பது அவர்கள் உணராதவர்கள் இல்லை. இருந்தும், யார் பெரியவர்கள் என்ற ஈகோ, எதிரி திட்டத்தை யார் முறியடிக்க போகிறார் என்ற போட்டி சில சமயம் தலைத்தூக்க தான் செய்கிறது.

“இந்திய எல்லைப் பகுதியில் காண்காணிக்க பல சிக்னல் கருவிகளை ரா, ஐபி இரண்டு உளவு அமைப்பும் பக்கத்தில் பொருத்தப்பட்டிருக்கிறது. இரண்டு பேர் தங்கள் தகவலை பரிமாறிக்

கொள்ளாமல், ஒரு எதிரியை கண்காணிப்பதற்கு இரண்டு பேரும் பல சிக்னல் கருவிகள் பயன்படுத்துகிறார்கள். இதனால், இந்திய அரசுப் பணம் வீணாகிறது" என்று சிக்னல் இண்டலிஜன்ஸில் வேலை செய்த வி.கே.சிங் கூறுகிறார்.

ஒரு கருவியில் வரும் தகவலை ஏன் இரண்டு உளவுத்துறையும் பகிர்ந்துக் கொள்ளக் கூடாது? ஒரே விஷயத்தை ஏன் இரண்டு உளவுத்துறையும் செய்கிறது? நமக்குள் இருக்கும் போட்டி, பொறாமையை விட பொது எதிரியை ஒழிப்பது தான் முக்கியம் போன்ற விமர்சனங்கள் இவர்களுக்குள் நடக்கும் பனிப் போரில் எழுப்பாமல் இருக்க முடியவில்லை.

கார்கில் யுத்தத்திற்கு பிறகு பாகிஸ்தான் இராணுவம் எப்படி ஊடுருல் செய்தது, உளவுத்துறை கணிக்க தவறியதை விசாரணை நடத்தினர். அதில், நடந்த விசாரணையில் ரா, ஐபி மோதலில் டி.ஐ.ஏ (DIA – Defenese Intelligence Army) யும் சேர்ந்துக் கொண்டு ஒருவரை ஒருவர் குறைக் கூறிக் கொண்டார்கள்.

ரா – ஐ.பி இருவருக்கும் எப்போதும் சண்டை. ஒன்றாக சேர்ந்து வேலை செய்வதில்லை என்று சொல்ல விட முடியாது. எந்த அளவுக்கு இவர்களுக்குள் பனிப்போர் இருக்கிறதோ அந்த இரண்டு உளவுத்துறையும் சேர்ந்து அந்நிய ஊடுருவலை தடுத்தும் வருகிறது. குறிப்பாக, நேபால், பங்களாதேஷ் போன்ற பக்கத்து நாட்டில் இருந்து சட்டவிரோதமாக இந்திய எல்லை கடக்க முயற்சிப்பவர்கள் தடுத்து வருகிறது.

'தி வீக்' வார இதழ் ரா-ஐ.பி இதுவரை நானூறுக்கு மேற்ப்பட்ட இந்திய ஊடுருவல் தடுத்திருப்பதாக கூறுகிறது.

'கலாஸ்டெஸ்டைன் ஆப்ரேஷன்' (Clandestine Operation) என்று அழைக்கப்படும் இந்த ஆப்ரேஷன் தொடர்ந்து வெற்றிப் பெற்று வருவதற்கான காரணம் இரண்டு உளவுத்துறை தான். அதே சமயம்,

யாருக்கு அதிகப் பெயர் கிடைக்க போகிறது என்ற போட்டியும் நடக்கிறது.

பல சமயம் கலாஸ்டெஸ்டைன் ஆப்ரேஷன், கவர்ட் (Covert) ஆப்ரேஷன் இரண்டையும் போட்டு குழப்பிக் கொள்ப்படும். இரண்டு ஆப்ரேஷனும் விளைவுகள், நடவடிக்கைகள் ஒரே மாதிரியாக தான் இருக்கும். ஒரே வித்தியாசம். கலாஸ்டெஸ்டைன் ஆப்ரேஷனை யார் நடத்த சொல்கிறார்கள், எதாவது பிரச்சனை வந்தால் அதை செய்ய சொன்ன அரசு அல்லது உளவு நிறுவனம் பொறுப்பு ஏற்றுக் கொள்வார்கள். ஆனால், கவர்ட் ஆப்ரேஷனில் ஏதாவது பிரச்சனை அதை செய்ய சொன்னவருக்கும், அந்த ஆப்ரேஷனுக்கு சம்மந்தமில்லை என்று கலண்டுக் கொள்வார்கள்.

எல்லா அரசு நிர்வாகத்தில் இருக்கும் கோபம், ஈகோ பிரச்சனையை போல் தான் ராவுக்கும், ஐபிக்கும் இருக்கிறது என்பது இதை காட்டுகிறது.

நாட்டு பாதுக்காப்பில் ஈடுப்படுபவர்களுக்கு 'தேச சேவை' மனப்பான்மை தானே இருக்க வேண்டும். எதற்காக இவர்களுக்குள் 'ஈகோ' என்ற கேள்வி எல்லாம் அபத்தமாக இருக்கும். வேலையில் எதாவது சாதிக்க நினைப்பவர்கள் தான் இது போன்ற போட்டி மனப்பான்மையோடு இருப்பார்கள். ஆனால், அந்த போட்டி அவர்களின் பிரதான நோக்கத்தை கெடுத்து விடக் கூடாது என்பது தான் முக்கியம்.

ஆரம்பத்தில் குறிப்பிட்டது போல் சகோதர பிரச்சனை. அவ்வப்போது இரண்டு உளவுத்துறைக்கு வாய்கால் தகராறு வந்துக் கொண்டு தான் இருக்கிறது. இவர்களை கேள்விக் கேட்டு, ஒருங்கிணைத்து சரியாக வேலை வாங்கும் திறமையுள்ள தலைமை தான் வேண்டும்.

## Reference.

http://www.frontline.in/static/html/fl1801/18010240.htm

# 21. ராவுக்கு எதிரான விமர்சனங்கள்

அரசு அமைப்பு, அரசு நிறுவனம் என்றாலே ஊழலுக்கும், விமர்சனங்களுக்கும் பஞ்சமிருக்காது. ரகசியமாக செயல்படும் உளவு அமைப்பை பற்றி எதிரான விமர்சனங்கள் இல்லாமல் எப்படி இருக்கும். அவர்கள் மட்டும் விமர்சனங்களில் இருந்து எப்படி தப்பிக்க முடியும்.

'ரா' உளவு நிறுவனம் நாடாளுமன்றத்துக்கோ, நாட்டு மக்களுக்கோ கட்டுப்பட்ட நிறுவனமல்ல. மக்கள் கேள்விகளுக்கும், பத்திரிகை கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. பிரதமருக்கு மட்டுமே கட்டுப்பட்டவர்கள். ராவை கேள்வி கேட்க வேண்டும் என்றால் பிரதமர் மூலமாகவே கேட்க முடியும். இல்லை என்றால் நேரடியாக பிரதமரை கேட்க வேண்டும்.

இந்தப் புத்தகத்தில் ரா உளவு நிறுவனத்தின் வெற்றிக் கதைகளை கவனித்தால் ஒரு உண்மை புரியும். பெரும்பானான வெற்றிகள் இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி காலத்தில் கிடைத்த வெற்றிகள். அதன் பின் ரா உளவு அமைப்பு வெற்றியை பெறவில்லை என்பதல்ல.

தங்கள் வெற்றிகளை வெளியே சொன்னால், இந்தியாவின் வெளியுறவு கொள்கை பாதிக்கப்படும். ராவின் வெற்றி, தோல்வி இரண்டுமே பரம ரகசியம். நீங்கள் படித்த ராவின் வெற்றி கதைகள் எல்லாம் இணையத்தில் கிடைத்தது. பாகிஸ்தானே ராவின் வெற்றி என்று ஏற்றுக் கொண்டது. இருபது வருடம் முன் நடந்த வெற்றி, தோல்வி பற்றி தெரிந்துக் கொள்வதில் தவறில்லையே!!

இன்று ரா உளவுத்துறைக்குள் மிக பெரிய சவாலாக இருப்பது டபுள் ஏஜெண்ட் வேலை. கூட இருந்துக் கொண்டே எதிரி நாட்டுக்கு தகவல் கொடுப்பது. அதற்கு மிக முக்கிய காரணம் உலகமயமாக்கம்.

1971 இந்திய – பாகிஸ்தான் போரின் வெற்றிக்கு ரா உளவு நிறுவனத்தின் பங்கு பெரிய உதவியாக இருந்தது. அந்த போரின் இந்தியாவுக்கு ரஷ்யாவின் ஆதரவும், அமெரிக்கா மறைமுக எதிர்ப்பை சம்பாதித்தது. அதனால், உளவுத்துறைக்கு பல கட்டுப்பாடுகளை பிரதமர் கொண்டு வந்தார். ஒவ்வொரு அந்நிய நாட்டின் உளவுத்துறை உதவியை கோரும் போதும், உதவி செய்யும் போதும் தனிப்பட்ட அனுமதி பெற வேண்டும் என்று உத்தரவிட்டார்.

அதேப் போல், 'எந்த ஒரு அந்நிய நாட்டின் உளவு அமைப்பும் இந்திய அரசின் இலாக்காவுடன் நேரடி அல்லது மறைமுக தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது என்றார். அரசுத் துறைகளில் உயர் பதவியில் இருந்தவர்கள், பெரிய அதிகாரிகள் பணி ஓய்வுப் பெற்ற பிறகு அடுத்த மூன்று ஆண்டுகளில் எந்த சர்வதேச நிறுவனங்களிலும் பணியாற்றக் கூடாது போன்ற பல நிபந்தனைகள் இருந்தன. அதேக் கொள்கையை தான் ராஜீவ் காந்தி, நரசிம்மராவ் காலம் வரை பின்பற்றப்பட்டது. ஆனால், இப்போது நிலைமை அப்படி இல்லை.

பல வெளிநாட்டு நிறுவனங்கள் இந்தியாவுக்குள் காலூன்றிவிட்டது. இவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன பணி நடக்கிறது என்று அரசால் முழுமையாக கண்காணிப்பது என்பது சிரமம். மத்திய அரசு அதிகாரிகள், உயர் பதவியில் இருப்பவர்கள் ஓய்வுப் பெற்ற அடுத்த தினமே ஏதாவது ஒரு சர்வதேச நிறுவனத்தில் உயர்பதவியில் அமர்ந்துக் கொள்கிறார்கள். அதுமட்டுமில்லாமல் அவர்கள் பணியாற்றிய முந்தைய அலுவலகத்திலும் தொடர்புகள் நீடிக்கின்றன. இதனால், நம்முடைய ரகசியங்கள் சுலபமாக வெளியேறுகிறது.

பல இந்திய நிறுவனங்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் செக்யூரிட்டி சர்வீஸ் வெளிநாட்டின் முதலீடு அல்லது வெளிநாட்டின் பின்பலத்தில் இயங்குவதாக இருக்கிறது. அதில் பணி புரிபவர்களுக்கு வேற்று மாநிலத்தை சேர்ந்தவர்கள் பலர் இருக்கிறார்கள். பாதுகாப்புக்காக இருக்கும் தனியார் செக்யூரிட்டி நிறுவனங்களின் தகவலை

களவாடுகிறார்களா என்பதை அந்த அந்த நிறுவனங்கள் கண்காணிப்பது நடைமுறையில் சிரமமான காரியம்.

நமது நாட்டின் ரகசியம் என்று தெரியாமலே பல ரகசியங்கள் வெளியே சொல்லகிறோம். ஒரு பிரபல பத்திரிக்கை 26/11 தீவிரவாத தாக்குதலுக்கு பிறகு இந்திய விமான நிலையத்தில் எந்த எந்த பாதுகாப்பு இருக்கிறது, என்ன பாதுகாப்பு கருவிகள் பயன்படுத்துகிறோம், பாதுகாப்பு பலவீனமாக உள்ளது போன்ற கட்டுரை வெளியிட்டார்கள்.

பாதுகாப்பை பலப்படுத்துவதாக அவர்கள் நினைத்தால், பாதுகாப்பு அதிகாரிகளுக்கு தனிப்பட்ட முறையில் தந்திருக்க வேண்டும். பகிரங்கமாக பத்திரிக்கையில் வெளியிடக் கூடாது. இந்திய பாதுகாப்பு நடவடிக்கைகளை வெளியே சொல்கிறோம் என்ற எண்ணம் சமூக அக்கரை உள்ள பத்திரிக்கைக்கே தெரியாமல் இருக்கும் போது தனிமனிதனின் எண்ணங்களை நினைத்து பாருங்கள்.

அமெரிக்கா, இலங்கை இந்தியாவின் நட்பு நாடு என்று சொல்லிக் கொண்டாலும் அவர்களை இந்தியா உளவு பார்க்கிறது. அதேப் போல், அவர்களின் உளவாளி இந்தியாவில் இருந்துக் கொண்டு நம்மைப் பற்றி தகவல் சேகரித்து தான் வருகிறார்கள்.

எப்.பி.ஐ – சி.ஐ.ஏ, ரா – ஐ.பி என்று உள்நாட்டு, வெளி நாட்டு உளவு பார்க்கும் நிறுவனங்களுக்குள்ளே ஒற்றுமை இருப்பதில்லை என்பதிலே உளவாளிகளின் நட்பை பற்றி உங்களுக்கு புரியும்.

அடுத்து பொறுப்பு உணர்ச்சி. ராவின் செயல்பாடுகள் எல்லாமே ரகசியமாக இருப்பதால், அவர்கள் வேலை செய்யாமல் சும்மா இருந்தால் கூட 'மிஷன்' என்ற வார்த்தை பயன்படுத்துவார்கள். "இன்னைக்கு என்ன வேலை செஞ்ச" என்று அலுவலக மேலாளர் போல் பின்னாடி இருந்துக் கொண்டே கேள்வி கேட்க முடியாது. உளவாளி தகவல் கொண்டு வரும் வரை காத்துக் கொண்டு தான்

இருக்க வேண்டும். தகவல் கிடைக்காமல் போகலாம். ஆக, ரா உளவாளி சுய பொறுப்புணர்ச்சியோடு நடந்துக் கொள்ள வேண்டும்.

உளவாளி இப்படி தான் தகவல் சேகரிக்க வேண்டும் என்ற வரையறை எதும் கிடையாது. அதற்கான வழிமுறைகள் ஆவணங்கள் எதுவுமில்லை. அதனால், பல சமயம் உளவாளி தனக்கு தெரிந்த சொந்த வழியில், தனிச்சையாக தகவல் சேகரிக்க வேண்டியதாக இருக்கிறது.

உளவாளிகள் தங்களுக்கு வளங்கப்பட்டு வரும் சலுகைகளை தவறாக பயன்படுத்துவதாக முன்னால் இராணுவ மேஜருமான ராவில் பணியாற்றிய வி.கே.சிங் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். தனது மகன்/ மகள் வெளிநாட்டில் படிக்கிறார்கள் என்றால், அரசாங்க செலவில் வெளிநாட்டுக்கு செல்கிறார்கள். அங்கு செய்யும் செலவுகளை இங்கு மீண்டும் திரும்ப பெற்றுக் கொள்கிறார்கள்.

ராவுக்கு இந்தியா எவ்வளவு நிதி ஒதுக்கிறார்கள் என்பதை வெளியில் சொல்லப்படுவதில்லையோ, அவர்களுக்கு செய்யப்படும் செலவுகளும் தணிக்கை செய்யப்படுவதில்லை. இதனால், மக்கள் வரி பணம் வீணாக்குவதை அரசால் தவிர்க்கமுடியவில்லை என்கின்றனர். எதிரி நாடுகளுக்கு உளவு பார்ப்பதற்கு நாம் எவ்வளவு நிதி ஒதுக்குகிறோம் என்பதை தெரியாமல் இருப்பதற்காக தான் என்று அரசு தரப்பு கூறுகிறது. இதனால், எதிரி நாடுகள் நமது செயல்பாட்டை கணித்துவிட முடியும் என்று கூறப்படுகிறது.

ராவில் குறிப்பிட்ட பிரிவினர்களுக்கு அதிக வாய்ப்புகள் வழங்கப்படுகிறது என்று இன்னொரு விமர்சனம் சமிபக்காலமாக எழுந்துள்ளது. உயர் மட்ட அதிகாரத்தில் பிரமணர்களும், மலையாளிகள் தான் அதிகம் இருக்கின்றனர். உயர் அதிகாரி பொறுப்பில் ஒரு முஸ்லீம் கூட இல்லை என்று 'ராய்ட்டர்' செய்தி நிறுவனம் கூறியுள்ளது. கீழ் மட்டத்தில் மட்டும் சில முஸ்லீம் இருப்பதாகவும் கூறுகிறது.

சி.ஐ.ஏ, எப்.பி.ஐ, மோஸாட் என்று சர்வதேச உளவு நிறுவனங்களின் நடவடிக்கைகளை பற்றி பல ஹாலிவுட் படங்கள் வெளிவந்திருக்கிறது. ஆனால், ரா, ஐபி போன்ற இந்திய உளவு நிறுவனத்தை பற்றி திரைப்படங்கள் எடுக்கப்படுவதில்லை. சமிபத்தில் வெளியான விஸ்வரூபம் (ரா அதிகாரி), துப்பாக்கி (டி.ஐ.ஏ), தாண்டவம் (ரா) போன்ற படங்கள் உளவுத்துறையை மையமாக கொண்டு திரைப்படங்கள் வெளிவர தொடங்கியுள்ளது. ஹிந்தியில் சல்மான் கான் நடித்த 'ஏக் தா டைகர்' படம் ரவிந்தர் கௌஷிக் வாழ்க்கையை மையமாக கொண்டது என்ற சர்ச்சையை கிளப்பினாலும், ஒரளவுக்கு ரா அதிகாரி மனதை இந்த படம் சொல்லியிருக்கிறது.

இதுப் போன்ற படங்களில் முலம் ராவின் பற்றிய பார்வை பொதுமக்களுக்கு வந்திருக்கிறது. அவர்கள் என்ன வேலை செய்கிறார்கள் என்ற கேள்வியும் எழுப்பத் தொடங்கிவிட்டனர்.

எந்த அரசு நிறுவனம் மக்கள் விமர்சனத்தில் ஆப்பாற்பட்டவர்கள் இல்லை. ஆனால், இது வரை ராவை விமர்சிக்காமல் இருந்தவர்கள், இப்போது ராவை பற்றி தகவல் வெளியே தெரிய வர தொடங்கி இருக்கிறது. அதனால், இதற்கு முன் அவர்களை விமர்சிக்காமல் இருந்தவர்கள், இப்போது விமர்சிக்கப்படுகிறார்கள்.

விமர்சனங்கள் குறைக் கூறுவதல்ல. தவறை திருத்திக் கொள்வதற்கு என்பதை ரா அமைப்பு புரிந்துக் கொள்ள வேண்டும்.

*****

# 22. ரா எதிரியல்ல நண்பன்

“காவல்துறை உங்கள் நண்பன்” என்று காவல்நிலயத்தில் எழுதியிருந்தாலும், சில காவல் அதிகாரிகள் மக்கள் கொடுப்பதை பார்க்கிறோம். ஆனால், ரா அதிகாரிகள் இப்படி எழுதிக் கொள்வதில்லை என்றாலும் உண்மையாகவே இவர்கள் தேசத்தின் நண்பர்கள்.

இவர்களுடைய பெரும்பாலான வேலை தேசம் தாண்டியதாக தான் இருக்கும். தேசபக்திக்காக தேசம் தாண்டிய வேண்டிய வேலை.

இன்று தமிழ்நாட்டில் ரா அதிகாரிகளுக்கு எதிராக ஒரு அலை இருப்பதை பார்க்க முடிகிறது. ஈழப் போராட்டத்தில் விடுதலை புலிகளை பற்றி தகவல் கொடுத்ததற்கும், கடலோர பகுதிகளை வேவு பார்த்ததற்கும் இவர்கள் அதிகம் விமர்சிக்கப்படுகிறார்கள்.

ரா உச்சநீதி மன்றத்திற்கும், பிரதமருக்கும் கட்டுப்பட்ட அமைப்பு. அரசு என்ன சொல்கிறதோ அதை அப்படியே செய்ய வேண்டிய அரசு ஊழியனின் கடமை. அதை தான் அவர்கள் செய்தாக வேண்டும்.

இவர்களும் சராசரி அரசு ஊழியர்கள் தான். மற்றவர்களை காட்டிலும் இவர்களுக்கு அதிகாரம் அதிகமாக இருந்தாலும் அரசுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டியது இவர்களது கடமை.

நடராஜன் என்ற ரா அதிகாரி சென்னை வேளச்சேரியில் இருப்பவர். விடுதலை புலிகளுடன் தொடர்பில் இருந்தவர். உயர் அதிகாரி அரசு சாட்டிலைட் பயன்படுத்தி தனது குடும்பத்திற்கு தகவல் அனுப்ப கூறியிருக்கிறார். இவர் அரசு சாதனங்கள் சொந்த விஷயத்திற்கு பயன்படுத்த கூடாது என்று உயர் அதிகாரியின் கட்டளையை மறுத்தார். அதனால், மொழி தெரியாத பாகிஸ்தான் எல்லை பகுதியில் வேலைக்கு மாற்றப்பட்டார். 2005ல் வேலையில் இருந்து தற்காலிக பணி நீக்கம் செய்யப்பட்டார்.

இன்று வரை ஒன்பது வருடங்கள் மேலாகிறது. மீண்டும் வேலை கிடைக்கவில்லை. தன் குடும்பத்திற்காக பள்ளி மாணவர்களுக்கு வகுப்பு எடுத்து சம்பாதிக்கிறார். மற்ற அரசு அதிகாரிகளுக்கு நடப்பது போல் ரா அதிகாரிகளுக்கும் நடக்கும் என்பது நடராஜர் வாழ்க்கை ஒரு உதாரணம். (http://www.youtube.com/watch?v=XM5BJj0w_Cc )

நண்பர்களாக பழகாமல் தகவலை எப்படி உளவாளியால் சேகரிக்க முடியும் என்று தோன்றலாம். உங்களோடு பழகுபவர் ஒரு உளவாளி என்று தெரிந்தால், அவருடன் ஆட்டோகிராப்பா வாங்குவீர்கள். அவன் நம்மிடம் ஏதோ தகவல் சேகரிக்க தான் பழகுகிறான் என்று தான் உங்கள் உள்மனத்திற்கு தோன்றும். இவ்வளவு ஏன், ஒரு உளவாளி இன்னொரு உளவாளியும் நட்பாக இருப்பது கூட சந்தேகம். இருவரும் ஒரு கட்டத்தில் சந்தேக கண்ணோடு தான் பார்க்க தோன்றும். இதனால், ராவுக்கு வேலை ரீதியான நண்பர்கள் அதிகம் இருந்தாலும், தனிப்பட்ட முறையில் நண்பர்கள் மிக குறைவாக இருப்பார்கள்.

ராவின் உயர் பதவியில் இருப்பவர்கள் வெளிநாடுகளுக்கு குடும்பத்தோடு சுற்று பயணம் செய்து, வாங்கிய பொருட்களை வரி செலுத்தாமல் இந்தியாவுக்கு கொண்டு வருபவர்களும் உண்டு. நாடுக்காக குடும்பத்தை மறந்து வருடக்கணக்கில் தகவல் சேகரித்துக் கொண்டு இருப்பவர்களும் உண்டு.

நாட்டின் பாதுகாப்புக்காக நம் எதிரிகளை கண்காணிக்க இவர்களது சேவை தேவை என்பது நாம் மறுக்க முடியாது.

ஜெய்ஹிந்த்!!!

ராவில் பணியாற்றிய தலைமை இயக்குனர்கள்

| எண். | தலைமை இயக்குனர்கள் | தொடங்கிய வருடனம் | நிறைவு பெற்ற வருடம் | முக்கிய நிகழ்வுகள் |
|---|---|---|---|---|
| 01 | ஆர்.என்.கவ் | 1968 | 1977 | ராவை தொடங்கியவர். 1971ல் பங்களாதேஷ்காக பாகிஸ்தான் யுத்தம், பொக்ரான் அணு ஆயுத சோதனை, சீக்கிம் மாநில இணைப்பு, சி.ஐ.ஏவுடன் சேர்ந்து சீனாவுக்கு எதிராக ELINT ஆப்ரேஷன் நடத்தியது போன்ற ராவின் முக்கிய சாதனைகள் எல்லாம் இவர் காலத்தில் நடந்தது தான். |
| 02 | கே. சங்கரன் நாயர் | 1977 | 1977 | தலைமை தாங்கிய மூன்று மாதத்திலே தனது பதவியை ராஜினாமா செய்தார். ராவின் புகழுக்கு கலங்கம் வருவது போலவும், ராவை மதிக்காத்தாலும் அவர் இந்த முடிவை எடுத்தார். |
| 03 | நவ்ஷெர் எஃப்.சந்தூக் | 1977 | 1983 | ராவுக்குள் ரேடியோ ரிசர்ச் சென்டர் மற்றும் எலட்ரோனிக் டெக்னிகல் சர்விஸ் தொடங்கியவர். இந்திரா காந்தி, |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | மோராஜி தேசாய், சரண் சிங் போன்ற மூன்று பிரதமர்களுடன் பணியாற்றியவர். |
| 04 | கிரிஷ் சந்திர சக்சேனா | 1983 | 1986 | ஆப்ரேஷன் ப்ளூ ஸ்டார் கிடைத்த நல்ல பெயர், கனிஷ்கா விமான குண்டு வெடிப்பில் ரா பெயர் போனது. அதை சமாளிக்க வேண்டிய பொறுப்பு இவருடையதாக இருந்தது. ரஷ்யா, சீனா, ஈரான், அப்கான் போன்ற நாட்டின் உளவாளி அமைப்புகளுடன் நெருக்கத்தை ஏற்படுத்துக் கொண்டார். |
| 05 | எஸ்.ஈ.ஜோஷி | 1986 | 1987 | வெளிநாட்டு உளவாளிகளுடன் நல்ல உறவு ஏற்படுத்தி கொடுத்தார். இவர் காலத்தில் தான் ரா தலைமை அதிகாரியை 'இயக்குனர்' என்று அழைப்பதற்கு பதிலாக 'செயலாளர்' என்று மாற்றப்பட்டது. |

| | | | | |
|---|---|---|---|---|
| 06 | ஏ.கே.வர்மா | 1987 | 1990 | ஆப்ரேஷன் காக்டஸ் மற்றும் இந்திய அமைதிப்படை இலங்கைக்கு சென்ற போதும் ரா தலைமை பொறுப்பு வகித்தவர் |
| 07 | ஜி.எஸ்.பாஜ்பை | 1990 | 1991 | காலிஸ்தான் தீவிரவாதிகளை ஒடுக்குவதில் முக்கிய பங்கு வகித்தவர் |
| 08 | என்.நரசிம்மன் | 1991 | 1993 | |
| 09 | ஜெ.எஸ்.பேடி | 1993 | 1993 | பாகிஸ்தான், சீனா நாடுகளில் கண்காணிப்பில் பல மாறுதல்கள் கொண்டு வந்தார். இவர் காலக்கட்டத்தில் தான் 1993 மும்பை குண்டு வெடிப்பு சம்பவம் நடந்தது. |
| 10 | ஏ.எஸ்.ஸ்யாலி | 1993 | 1996 | ராவுக்கு அதி நவீன பயிற்சி முறைகளை கொண்டு வந்தார். |
| 11 | ரன்ஜுன் ராய் | 1996 | 1997 | Negotiation on Farkhor Air Base |
| 12 | அரவிந்த் கே.தவே | 1997 | 1999 | கார்கில் யுத்தம் மற்றும் ஆப்ரேஷன் சக்தி இவர் காலக்கட்டத்தில் நடந்தது |
| 13 | ஏ.எஸ்.தல்ட் | 1999 | 2000 | கந்தகார் விமான கடத்தல் இவர் காலக்கட்டத்தில் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | நடந்தது. தீவிரவாதிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தியதில் இவருக்கும் முக்கிய பங்கு இருக்கிறது. |
| 14 | விக்ரம் சூத் | 13 December 2000 | 31 March 2003 | ராவில் National Technical Facilities Organisation என்ற பிரிவை உருவாக்கியவர் |
| 15 | சி.டி.சஹாய் | 1 April 2003 | 31 January 2005 | ARC அமைப்பின் வடிவத்தை மாற்றினார். ராவின் தலைமை இடத்தை டெல்லியில் இவர் காலத்தில் தான் மாறியது. |
| 16 | பி.கே.எச்.தரகன் | 1 February 2005 | 31 January 2007 | நேபால் உள்நாட்டு யுத்தத்தை சுமுக உறவு காண்பதில் ஈடுபட்டார். |
| 17 | அஷோக் சதுர்வேதி | 1 February 2007 | 31 January 2009 | சம்ஜவுதா எக்ஸ்பிரஸ் குண்டு வெடிப்பை விசாரணை செய்தவர். அரசு பணத்தை சொந்த செலவுக்காக பயன்படுத்தினார் என்று பல விமர்சனங்கள் இவர் மீது உண்டு. |
| 18 | கே.சி.வர்மா | 1 February 2009 | 30 December 2010 | மும்பை குண்டு வெடிப்பு விசாரணையின் முக்கிய பங்கு வகித்தார். |

| | | | | |
|---|---|---|---|---|
| 19 | சன்ஜீவ் திருப்பதி | 30 December 2010 | 29 December 2012 | |
| 20 | அலோக் ஜோஷி | 30 December 2012 | Present | |

## References


*Kaoboys of R&AW - Down Memory Lane – B.Raman*

Intelligence: Past, Present and future – B.Raman

*India's External Intelligence: Secrets Of Research And Analysis Wing - Major V.K.Singh*

*Intelligence Tradecraft: Secrets of Spy Warfare – M.K.Dhar*

*ஐ.எஸ்.ஐ: நிழல் அரசின் நிஜ முகம் – பா.ராகவன், மதி நிலையம்*

*ஈழப் பிரச்சனையில் இந்திய உளவு நிறுவனங்களின் சதி – விடுதலை க.இராஜேந்திரன், பெரியார் திராவிடர் கழக வெளியீடு*

*துப்பாக்கி மொழி – முகில், ச.ந.கண்ணன், மருதன், ஆர்.முத்துகுமார் (கிழக்கு பதிப்பகம்)*

*உஷார் உளவாளி – சுதாங்கன், விகடன் பிரசுரம்*


## Videos

கோப்பியம்: ராஜ் தொலைக்காட்சி நிகழ்ச்சி

http://www.youtube.com/watch?v=DmwRcfyFLfQ

http://www.youtube.com/watch?v=h_tkzGiwwSk

